# தொல்காப்பியம்

## எழுத்ததிகாரம்

### நச்சினார்க்கினியம்



கழக வெளியீடு

கழக வெளியீடு : கஎ

# தொல்காப்பியம்

## எழுத்ததிகாரம்



நச்சினார்க்கினியர்

உரை

புலவர் ஞா தேவநேயப் பாவாணர் எம்ஏ அவர்கள்
எழுதிய
அடிக்குறிப்புக்களுடன்



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
1/140, பிராட்வே, சென்னை-1.
திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
1972

# பதிப்புரை

கல்வி, இருவகைப்படும். ஒன்று எண்ணும் ஆற்றலைப் பெறுதல்; மற்றொன்று பல்வேறு கருத்துக்களை அறிந்துகொள்ளுதல். மக்கட்குத் தாய்மொழியே இயல்பான கருவியாதலால், இவ்விருவகைக் கல்விக்கும் எளிதாக அது பயன்படும்; மேலும், எண்ணும் ஆற்றலைப் பெருக்குதற்குத் தாய்மொழிக் கல்வியே சிறப்பின் உரித்தாகின்றது. அதனிலும், இலக்கணப் பயிற்சியால் அவ் வன்மை மிகச் செழித்து நுணுகிக் கொழுந்தோடி வளர்கின்றது.

தமிழ்மொழியில் இலக்கண அமைப்பு, இணையற்ற ஆற்றலோடும் அழகுகளோடும் அமைந்திருக்கின்றது. தமிழ்மக்கள் அவ்வகையில் தவப்பேறுடையரென்றே கூறுதல் வேண்டும். இனிய இயற்கை நெறிகளோடு தமிழ் இலக்கணத்தைத் திறம்பட விளக்கும் முழுமுதல் நூல் தமிழில் தொல்காப்பியமாகும். இஃதொன்றே பழைமையும் முதன்மையும் வாய்ந்து, சிக்கலின்றித் தெளிந்து, ஐந்திலக்கணமும் விளக்கும் அரும் பெருநூலாகத் திகழ்கின்றது. இதனைப் பன்முறை கற்று ஆழ்ந்து பயில்வோர், எண்ணும் ஆற்றலும், பல்வேறு கருத்துக்களை அறிந்து கொள்ளுதலுமின்றி, மெய்யுணர்வுப்பேறும் எளிதின் எய்திச் சான்றோராவர்.

தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என மூன்று அதிகாரங்களாக வகுக்கப்பட்டுள்ளது. இந்நூலின் நுட்பதிட்பம், பெருமை பயன் முதலியவற்றாலேயே இதற்கு உரையாசிரியன்மாரும் பலர் அமைந்தனர். அவர் பலர் எழுதிய உரையுள்ளும், எழுத்ததிகாரத்திற்கு நச்சினார்க்கினிய ருரையும், சொல்லதிகாரத்திற்குச் சேனாவரையருரையும், பொருளதிகாரத்தின் இறுதி நான்கியல்களுக்குப் பேராசிரியருரையும் பெருவழக்காகப் பயிலப்பட்டு வருகின்றன. இவ் வருமை கருதிக் கழகத்தில் இதற்குமுன், தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினிய ருரையுடன் ஐந்துமுறை பதிக்கப்பெற்று வெளிவந்திருக்கின்றது. இப்போது ஆறும் பதிப்பாக இதனை, உரிய தலைப்புக்கள் உட்பிரிவுகள் முதலியவற்றுடன் மிகத் திருத்தமாக வெளியிடுகின்றனம்.

பயில்வோரது ஆர்வத்துக்கு ஏற்ற உதவியாயிருக்கும்படி இப் பதிப்பு மேலும் சில நலன்களைப் பெற்றுள்ளது. தொல்காப்பிய நூற் பாக்களிலும், அவற்றிற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரைகளினும் மாணக்கர் நன்கு விளக்கம் பெறவேண்டிய பகுதிகளின்மேல், தக்க ஆராய்ச்சிக் குறிப்புக்களும் விளக்கங்களும் மேற்கோளிடங்களுடன்,

அவ்வப்பக்கத்தின் அடிக்குறிப்பாகத் தெளிவாய்த் தரப்பட்டிருக்கின் றன. நூலின் இறுதியில் "குற்றியலுகரம் உயிரீறே" என்னும் பொருள் மேல் ஓர் அரிய ஆராய்ச்சி நிகழ்த்தப்பட்டிருக்கின்றது. அன்றியும், நச்சி னார்க்கினியர், தமக்குமுன் தொல்காப்பியம் முழுவதற்கும் உரை யெழுதி உரையாசிரியர் என்னுஞ் சிறப்புப் பெயரால் வழங்கப்பெற்று வரும் 'இளம்பூரண அடிக'ளோடு கருத்து மாறுகொள்ளும் இடங்கள் முழுவதும், நூற்பாக்களோடும் அவரவருரைகளோடும் தொகுத்துச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இவையனைத்தும் இப்பதிப்புக்கு மிக்க உழைப்போடும் அன்போடும் எழுதிச் சேர்த்துதவிய ஆசிரியர், வித்துவான் ஞா. தேவநேயப் பாவாணர், எம்.ஏ, அவர்களாவர். அவர்கள் அரிய செயலுக்குக் கழகம் தன் அகமருவிய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றது.

இதன் முற்பதிப்புக்களைப்போலவே, முகப்பில், பேராசிரியர் திரு மிகு கா. சுப்பிரமணியபிள்ளை, எம். ஏ., எம். எல்., அவர்களது அரிய ஆராய்ச்சி முன்னுரை முதலியனவும் இப்பதிப்பில் உள்ளன. ஆராய்ச்சி யாளர்க்கும் மாணவர்க்கும் இப் பதிப்பு மிகுதியாகப் பயன்படு மென்று நம்புகின்றோம்

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

## பொருளடக்கம்

ஓம்

தமிழ்ப் பேராசிரியர், வழக்கறிஞர்

**திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ., எம்.எல்.**

அவர்கள் எழுதிய

# முகவுரை

தொல்காப்பியம் என்னும் இவ்வியல் நூலானது தமிழ்நூல்கள் யாவற்றுள்ளும் பழைமையானதாய்த் தமிழிலக்கண முழுமுதனூலாக அமைந்துள்ளது. தமிழ் நூல்கள் யாவற்றினும் தொன்மையாலும் சிறப்பாலும் முதன்மைபெற்ற இந்நூல் இலக்கண நூலாக அமைந்தது யாவரும் உற்று நோக்கத்தக்கதே. இதற்கு முற்பட்ட இலக்கியங்கள் இப்பொழுது வெளிவரவில்லை. புறநானூறு முதலியவற்றில் சிற்சில பாட்டுக்களை இந்நூற்கு முற்பட்டனவாகக் கருதக் காரணமுண்டு. இதற்கு முன்னேயே அளவற்ற இயல் இசை நாடக நூல்கள் தமிழில் இருந்தன வென்பதை இந்நூலே நன்கு விளக்குகிறது. இந்நூல் சிறப்புப்பாயிரத்தில் தமிழ் நிலத்துச் செய்யுள் வழக்கும் உலகவழக்கும் ஆய்ந்து இந்நூல் செய்யப்பட்டதென்று கூறப்படுதலால் செய்யுள் வழக்கை அறிதற்குரிய நூல்கள் பல இருந்தன வென்பது தெளிவே. 'முந்து நூல்கண்டு' என்றமையானும் அது விளங்கும். செய்யுளியலில் தமிழ் நூல்களை ஆசிரியர் எழுவகையாகப் பகுத்து ஓதுதலினாலும் அது தெளியப்படும். அவ்வெழு வகையுள் நிறைமொழி மாந்தரது மறை மொழியையும் ஒன்றாக அவர் கொண்டமையானும் "அளவிற் கோடல் அந்தணர் மறைத்தே" என்று எழுத்ததிகாரம் 102-ஆவது சூத்திரத்தில் அவர் கூறியதாலும், மறைமொழிகளடங்கிய மறை என்னும் நூல்வகை தமிழில் இருந்ததென்பது இனிது விளங்குமே. "நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்" என்பதனாலே நாடக நூல்கள் பலவிருந்தன வென்பது விளங்கும். 'இசையொடு சிவணிய நரம்பின் மறைய என்மனார் புலவர்' என்றதனாலே இசை நூல்கள் அக்காலத்திற்கு முன்னே நன்கு வழங்கின வென்பது விளங்கும். தமது நூலுள் ஒவ்வொரு பகுதியிலும் தமிழ் வழக்கினை வியந்தோது மிடங்களில் 'என்மனார் புலவர்' என்று சுட்டுதலால் புலவர்கள் பலர் தமக்குமுன் இயல்நூல் இயற்றியுள்ளார் என்பதையும் அவர் விளக்கக் கருதினர் என்பது வெளிப்படை.

'முந்து நூல்' ஆய்ந்து இந்நூல் செய்தாரென்று சிறப்புப் பாயிரத்துள் கூறப்பட்டுள்ளது. 'முந்து நூல்' இன்னவென்று சுட்டுதற்குரிய அகச்சான்று யாதும் இல்லை. ஐந்திரத்தின் ஆராய்ச்சி இந் நூலாசிரியர்க்கு எவ்வாறு பயன்பட்டதென்று காட்டுதற்கும் நூலுள் அகச்சான்று யாதும் இல்லை. 'முந்து நூல்' என்றது அகத்தியத்தை என்பதற்கு,

"ஆறுப் பெருமை யகத்திய னென்னு
மருந்தவ முனிவ னாக்கிய முதனூல்
பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர்
நல்லிசை நிறுத்த தொல்காப் பியனும்"

எனப் பன்னிருபடலத்துப் பாயிரச் சூத்திரத்துட் காணப்படுவதே சான்றாகும்.

"கூறிய மூன்றினு முதனூல் கூட்டித்
தோமின் றுணர்த றொல்காப்பியன்ற
னாணை யின்றமி ழறிந்தோர்க்குக் கடனே"

என்ற பல்காப்பியப் புறனடைச் சூத்திரமும் இதற்குச் சான்று பகரும்.

சிற்றகத்தியம், பேரகத்திய மென்ற இரு நூலும் இப்போது வெளி வாராமையால் இந்நூலை முதனூலோடு ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு இடமில்லை. ஐந்திரம் என்பது இந்திரனாற் செய்யப்பட்ட வடமொழி முதல் இலக்கணம் என்று பலர் கூறுவர். அதைத் தமிழ்நூல் என்றுஞ் சிலர் கூறுப. ஐந்திர மென்பது உபாகமங்களுள் ஒன்றெனக் கூறுவாருமுளர். 'விண்ணவர் கோமான் விழுநூல்' என்ற சிலப்பதிகாரப் பகுதிக்கு இந்திரனாற் செய்த இலக்கணமென்று அடியார்க்கு நல்லார் பொருள் கூறுகின்றார். அதற்குச் சமண நூல்களுள் ஒன்றாகிய "இந்திர காளியம்" என்று பொருள் கொள்ளு வாரும் உளர். இந்திரனாற் செய்த இலக்கணம் இப்போது வடமொழி யிலும் இருப்பதாகத் தெரியவில்லை.

அகத்திய நூலுணர்ச்சியும் தமிழ் நிலத்து இருவழக்கு உணர்ச்சியும் இந்நூல் செய்தற்குப் பயன்பட்டிருக்குமென்பது யாவர்க்கும் தெளிவு. ஒரு மொழிக்கு இயல்நூல் செய்வார் பிறிதொரு மொழி இயல்நூலையும் ஆராய்தல் நூலமைப்பிற்குப் பயன்படுதலே யன்றி நூலுட் கூறப்படும் பொருளாராய்ச்சிக்கு அத்துணைப் பயன் றருதல் அரிது. 'ஐந்திரமோ' 'ஐந்திறமோ'-வென் றையுறுவாருமுளர். ஐந்திர வியாகரண மென்பது வடமொழியில் முதன் முதற் றோன்றிய ஓர் இலக்கண நூலாதலேயன்றி இந்திரனாற் செய்த இலக்கணம் என்ப தொன்று கிடையாதென்று 'தமிழ் வரலாறு' எழுதிய தஞ்சை திருவாளர் ராவ்பஹதூர். K.S. சீனிவாச பிள்ளை யவர்கள் கருதுகின்றார்கள். ஐந்திரமென்பது வடமொழியென்றே கருதுமிடத்து அந்நூலுள் வேற்றுமை எட்டு என்று கொண்டவாறே இந் நூலாசிரியரும் கொள்ளுதலின் அவ்வடமொழி இயல் நூலா ரோடு ஒத்த கருத்துடையார் இவ்வாசிரியர் என்பதனை விளக்கக் கருதி, 'ஐந்திர நிறைந்த தொல்காப்பிய' னெனச் சிறப்புப் பாயிரமுடையார் கூறினாரென்பர். அங்ஙனம் சிற்சில கொள்கைகளில் வடமொழி ஐந்திர நூல் கருத்தும் இவ்வாசிரியர் கருத்தும் ஒருவாறு ஒத்திருத்தல் கூடுமென்பதே யூகிக்கற்பாலது.

ஆசிரியர் நூல் செய்கின்ற காலத்து வழங்கிய வடமொழி இலக்கணம் ஐந்திரமெனப் படுதலாலும் 'பாணினீயம்' கேட்கப் படாமையாலும் வடமொழிக்கு முதலிலக்கணம் ஐந்திரமெனவும் அதற்குப் பின்னேயே பாணினீயம் தோன்றியதெனவும் வடமொழியாளர் கொள்ளுதலாலும் தொல்காப்பிய நூலானது வடமொழிப் பாணினீயத்திற்கு முற்பட்டதென்பது தானே போதரும். வட சொற்கள் தமிழுட் பயிலுதற்கு இந்நூலுள் விதி வகுத்திருப்பதால் ஆரியரொடு தமிழர்க்குத் தொடர்பு இவ்வாசிரியர் காலத்தே ஏற்பட்டிருத்தல் கூடுமென்பது யூகிக்கப்படும்.

"வட வேங்கடந் தென்குமரி" என்று ஆசிரியர் காலத்திருந்த தமிழ் நாட்டெல்லை குறிக்கப்பட்டது. குமரி யென்பது யாறோ மலையோ என்ற ஐயப்பாட்டிற்கு இடமாக நிற்பது: அதனை உரையாசிரியர்கள் யாவரும் யாறு என்றே கொள்கின்றனர். காலஞ்சென்ற அரசன் சண்முகனார் அதனை மலை என்கின்றனர். புறநானூற்று, ௬ ஆவது பாட்டு,

"வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்"

என்ற அடிகளுள் இரண்டாவது அடியிற்கண்ட குமரி என்பதற்குக் கடல் என்று பொருள்கொள்ள இடமில்லை. அதனை யாறென்று அச்செய்யுள் உரையிலே காட்டப்பட்டுள்ளது. புறநானூற்று ௬௭ ஆவது பாட்டில்,

"தென்குமரி வட பெருங்கல்
குணகுடகட லாவெல்லை"

என்றவிடத்தும் குமரி என்ற சொல் ஓர் யாற்றைக் குறிப்பதாகவே தெரிகின்றது. குமரியாற்றைக் கடல் கொண்டபின்னர்க் குமரி என்ற பெயராலே தென் எல்லையாகிய கடல் சுட்டப்பட்டிருத்தல் தெள்ளிது. சிறுகாக்கை பாடினியார் தெற்குங் கடலெல்லை கூறியது.

"வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்
தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்
வரைமருள் புணரியொடு பொருது கிடந்த
நாட்டியல் வழக்க நான்மையின் கடைக்கண்
யாப்பின திலக்கண மறைகுவன் முறையே"

என்பதனால் விளங்கும். 'தொடியோள் பௌவம்' என்ற சிலப்பதிகாரமுங் காண்க. புறநானூற்று ௬ ஆவது பாட்டில் 'குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி' என்ற அடிக்குக் 'குமரியாற்றினது பெரிய துறைக் கண்ணே' என்று அதனுரையில் பொருள் கூறப்பட்டுள்ளது. சிலர் அதற்குக் குமரிக் கடற்றுறை என்று பொருள் சொல்லுகின்றார்கள். யாறு என்று பொருள்படுஞ் சொல் ஆண்டில்

வாமையால், குமரியென்ற சொல் வழங்கும் செய்யுட்களில் பெரும் பான்மையும் பொதுச் சொல்லாகவே அது காணப்படுகின்றது. அப் பெயருடையயாறு ஒன்று இருந்திருத்தல் கூடுமென்பதைத் தமிழ் நூலோர் யாவரும் ஒப்புக்கொள்ளுகின்றார்கள். மலையும் இருந்த தென்பது 'குமரிக்கோடும்' என்ற சிலப்பதிகார அடியால் விளங்கு கின்றது.

ஆசிரியர் தொல்காப்பியர் காலத்தே குமரி யாறோ அல்லது குமரி மலையோ தமிழ்நாட்டிற் கெல்லை யென்னுங் கேள்விக்கு விடை ஆயத்தக்கது. குமரிமலை கடல்கொண்ட நாட்டில் எவ்வாறு அமைந் திருந்தது என்று ஆயுமிடத்து அந்நாட்டின் பகுதிகளை நன்கறிந்து எழுதியுள்ள 'மறைந்த குமரிக்கண்டம்' (Lost Lemuria)* என்னும் ஆங்கில நூலுட் போந்த படத்தினாலே ஒரு பெருமலையானது மேலைக் கடலில் தொடங்கி வடக்கும் தெற்குமாகக் குமரிக்குத் தென் பகுதியி லுள்ள நிலப்பகுதியிலே நெடுந்தூரஞ் சென்று பின் தென்மேற்காகத் திரும்பி 'மடகாஸ்கர்' (Madagascar) என்ற ஆப்பிரிக்கத் தீவுவரை சென்றதாகத் தெரிகின்றது. அம்மலைக்குக் கீழ்ப்பக்கம் உள்ள நாட்டில் பெருமலை ஒன்று இருந்ததாகத் தெரியவில்லை. இந்த மலையானது தென்கிழக்கு முதல் வடமேற்குவரை செல்லுகின்ற இமயமலையைப் போல வடமேற்குத் தொடங்கித் தென்கிழக்கிற் செல்லுகின்ற ஒரு பெருமலைத் தொடராக இருந்திருப்பதாகத் தெரி கின்றது. இம்மலையைத் தமிழிற் குமரி யென்றும் வடமொழியில் மகேந்திர மென்றும் முன்னோர் கூறினாரென்பதற்குக் காரணமுண்டு. சிவதருமோத்தரம் என்னுஞ் சைவவுபாகமத்தில் பொதியிற்குத் தென்பால் மகேந்திர முண்டென்றும் அந்நூலுரையுள் தெற்கு முதல் வடக்கு ஈறாக அஃது இருந்ததென்றும் கூறப்பட்டுளது. அதனடி வாரத்திலுள்ள தேசம் பொன்மயமான இலங்கை யென்றும் குறிக்கப் படுகின்றது;

> "துங்கமலி பொதித்தென்பாற் றுடர்ந்த வடிவாரத்தி
> னங்கனக விலங்கையுமேழ் வரைச்சார லடித்தேசம்"

என்றதனால் அஃது உணரப்படும்.

> "உன்னதத் தென் மயேந்திரமே"

என்ற அடியுங் காண்க.

பஃறுளியாறு என்பது ஒரு பெரிய யாறாகவும் அது நெடியோ னென்னும் பாண்டியனுடைய தென்றும் புறநானூற்றுள்ளே குறிக்கப் பட்டுள்ளது;

> "முந்நீர் விழவின் நெடியோன்
> நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"

என்றது காண்க.

---

* Scott Elliot.

"அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி
வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையு மிமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி"

என்ற சிலப்பதிகார அடிகளினாலே குமரிமலையும் பஃறுளியாறும், இமயமுங் கங்கையும் போன்றிருந்தன வென்பது கருதப்படும். 'பன்மலையடுக்கத்துக் குமரிக்கோடு' என்றதனாலுங் குமரிமலையின் பெருமை விளங்கும். நெடியோனுக்குரிய மொழி தமிழ்மொழி யாதலாலும் தமிழ் வழங்கும் நாட்டிலுள்ள யாற்றினையே நெடியோனைப் புகழும் புலவனுங் குறித்தல் இயைபுடைமையானும் கடல் கொண்ட நாட்டின் ஒரு பகுதியாதல் தமிழ் நாடென்றே கருதற்பாலது.

பஃறுளியாறும் குமரிக்கோடும் கடல் கொள்ளப் பட்டனவென்ற விடத்துக் குமரியாற்றை ஆசிரியர் குறியாமையும் நோக்குக. குமரியாறு பஃறுளியாற்றின் வேறாகவே இருந்ததென்று தெரிகிறதால் இரண்டிற்கும் நடுவே நாடுகளிருந்தனவென்று யூகித்தல் கூடும். சிலப்பதிகார வுரையுள் அடியார்க்கு நல்லார் இவ்விரண்டாற்றிற்கு மிடையே 49 நாடுகள் இருந்தனவென்று கூறியுள்ளார். அவர் கூறியுள்ளதற்குச் சான்று காட்டாத போதினும் அவரதனைப் புனைந்துரையாகக் கூறினார் என்று கருத இடமில்லை. பெரும்பான்மையும் பண்டைத் தமிழுரை யாசிரியர்கள் நூற் பிரமாண மில்லாமல் யாதுங் கூறுவதில்லை சரித்திர ஆராய்ச்சி மிக்கில்லாத அக்காலத்தில், காலமுறையைக் கருதாமல் முன் நடந்ததைப் பின்னாகவும் பின் நடந்ததை முன்னாகவும் அவர்கள் தொகுத்துக் கூறியிருத்தல் கூடுமேயன்றிப் புதுவதாகப் புனைதல் கிடையாது. மேற்கூறிய புறநானூற் றுட்போந்த 'நெடியோன்' என்னும் பாண்டியனே தொல்காப்பியப் பாயிரத்துட் சுட்டிய 'நிலந்தருதிருவிற் பாண்டியன்' என்று சிலர் யூகிக்கின்றார்கள். அவர்கள் 'நிலந்தந்த பேருதவிப் பொலந்தார் மார்பின் நெடியோனும்பல்' என்ற மதுரைக் காஞ்சியை மேற்கோளாக உரைக்கின்றனர். நிலந்தருதிருவிற் பாண்டியன் (கலித்தொகை) என்னுஞ் சொற்றொடரின் பொருள்,

"மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்"

என்னும் முல்லைக் கலி-௧0௪ ஆவது பாட்டினடிகளின் வைத்து யூகிக்கற்பாலது. தன்னாட்டைக் கடல் கொள்ளப் பிற அரசர் நாட்டைத் தன் குடிகட்கு வென்று தந்த சிறப்புடைய பாண்டியன் காலத்தே தொல்காப்பியம் அரங்கேற்றியதாக அறிகின்றோம். இப்பாண்டியனைத் 'தென்

னவன்' என்று கலித்தொகை ஆசிரியர் கூறியவாறே இளங்கோவடிகளும் கடல் கொண்ட செய்தி கூறுமிடத்துத் 'தென்னவன்' என்று விளிக்கின்றார். இத்தென்னவனும் பஃறுளியாற்றையுடைய நெடியோனும் ஒரே அரசன் என்று கொள்ளின் மன்னன் ஒருவனே கடல் கோட்கு முன்னும் பின்னும் நெடுங்காலமாக அரசாண்டான் என்பது முடியும். தென்னவன் காலங் கடல்கோள் நடந்த காலமாகத் தெரிதலால் தொல்காப்பியர் காலமும் அக்காலமேயென்பது தெளிவு. 'நிலந்தரு திருவிற் பாண்டிய'னெனப் பாயிரத்துள் விதந்தோதுதலின் அங்ஙனம் நிலந்தந்த பேருதவிக்குப் பின்னேயே தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்டதென்று கொள்ளுதல் இயைபுடையதே; அதற்கு முன்னெனக் கொள்வாருமுளர். கடல்கோட்குப் பின் நூல் இயற்றப் பட்டதென்று கொள்ளுமிடத்துக் 'குமரி' என்பதற்கு 'குமரியாறு' என்றே பொருள்கொள்ளுதல் வேண்டும். கடல்கோள் முடிந்து பிற நாடுகள் கைக்கொள்ளப்பட்டுப் பாண்டியன் அரசு நிலைத்த பிறகே நிலந்தருதிருவிற் பாண்டிய னென்ற பெயர் ஏற்பட்டிருத்தல் வேண்டும். அப்பெயர் சிறப்புப் பாயிரத்துட் கூறப்படுதலின் ஆசிரியர் நூல் செய்த காலமும் கடல்கோட்குப் பின்னே யாதல் வேண்டும். ஆதலால், அக்காலத்தே 'குமரியாறு' தமிழ் நாட்டுத் தென் எல்லையாக விருந்ததென்று கொள்ளுதல் பெரிதும் பொருத்த மானது. கடல்கோட்குப் பின் முதன்முதற் செய்யப்பட்ட முழுமுதல் நூல் தொல்காப்பியம் என்பது தெளிவு. கடல் கோட்கு முன் இருந்த நூல்கள் யாவும் இலவாகி யொழிய அதற்குப்பின் செய்யப்பட்ட முதல் நூலாகிய தொல்காப்பியம் இன்றும் நின்று நிலவுகின்றது.

வான்மீகியார் இராமாயண காலத்திலே பாண்டியர் தலைநகர் பொருநையாறு கடலொடு கலக்கின்ற இடத்திற்கு அருகிலிருந்த தென்று குறித்துள்ளார். அக் காரணம்பற்றித்தான் அதனை அலைவாய் என்று தற்கால ஆராய்ச்சிக்காரர்கள் கருதுகின்றார்கள். கடல் கொள்ளப்படுமுன் பாண்டியர்க்குத் தலைநகர் தென்மதுரை யென்று தெரிதலால் தென்மதுரையினின்றும் அலைவாய்க்குத் தலைநகரைப் பாண்டியர் மாற்றிக்கொண்டது அதனைக் கடல் கொண்ட பின்பு என்பது ஊகிக்கப்படும். 'கபாடம்' என்ற வான்மீகி இராமாயணச் சொற்குக் கதவென்றும், கபாடபுரமாய ஊர் என்றும் இருவகைப் பொருள் கொள்ளப்படும். கபாடபுரமென்ற உரையே இயைபுடைத்து; அப்பெயரால், இறையனாரகப் பொருளுரையில் இடைச் சங்கமிருந்த நகர் கூட்டப்படுதலின், இடைச் சங்கத்திற்கு நூல் தொல்காப்பியம் என்றும் களவியலுட் கூறப்பட்டது. அதனுள் முதற்சங்கமிருந்தார்க்கு நூல் தொல்காப்பிய மென்று கூறப்படவில்லை. அதனைக் கருதுமிடத்துத் தொல்காப்பியம் கடல்கோளுக்குப் பின்னே இயற்றப் பட்டிருத்தல் வேண்டுமென்று தோன்றுகிறது. ஆசிரியர் தொல் காப்பியர் ஜமதக்கினியின் புதல்வராய்ப் பரசுராமர்க்கு உடன்பிறப்

பென்று கருதுவார்க்கு இது மிகவும் ஒத்ததே. அங்ஙனம் கொள்ளு மிடத்துத் தமிழ் நாட்டிற்குத் தென் எல்லை 'குமரியாறு' என்பவர் களுடைய கொள்கையும் வலியுறுகின்றது. அஃதெவ்வாறெனில் பஃறுளியாற்றைக் கடல் கொண்ட காலத்துக் குமரிமலையின் பெரும் பாகமும் அழிந்து போயது. குமரியாறு தொடங்கும் பகுதியும் குமரியாறும் கடல் கொள்ளப்படாதிருந்தது. சிவதருமோத்தர உரையுள்ளும்,

"மகேந்திர மலையின் அடிவாரத்துள்ள கனகமயமான இலங்கை யின் பகுதி கடலுள் மறைந்ததென்று கூறப்பட்டுள்ளது." இராமாயண காலத்தில் மகேந்திரகிரிக்கும் இலங்கைக்கும் நடுவே கடல் இருந்த தென்பது தெரிகிறது. அந்தக் காலமானது தென் மதுரையைக் கடல் கொண்ட காலத்திற்குப் பின்னுதல் வேண்டும். இக்காரணங்களால் முதற் கடற்கோளுக்குப் பின் மகேந்திர மென்ற குமரிமலையின் ஒரு பகுதியும், குமரியாறும், இவற்றிற்கும் இலங்கைக்கும் நடுவே கடலும், குமரியாற்றிற்கும் பொருநையாற்றிற்கும் இடையே நாடும் இருந்த தாகக் கொள்ளுதல் வேண்டும்.

வான்மீகி இராமாயணத்திலே சேர சோழ பாண்டிய ரென்ற தமிழ் நாட்டு மூவேந்தருங் கூறப்படுகின்றார்கள். அந் நூலுள் சோழநாட் டிற்கு வடபால் ஆந்திரம் புண்டரம் முதலிய தேசங்கள் சொல்லப் பட்டமையால் அக்காலத்துத் தமிழ்நாட்டு வடவெல்லை 'வேங்கடம்' என்பது யூகிக்கக்கடவது. வியாசபாரதத்தில் உள்ள அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கத்தால் பாண்டியர் மணலூர் என்னுமிடத்தில் அரசாண்டதாகத் தெரிகிறது. பாண்டவர் சேனைக்குச் சோறளித்த சேரமான் பெருஞ்சோற்றுதியன் சேரலாதனை, முரஞ்சியூர் முடி நாகராயர் என்னும் புலவர் பாடியிருப்பதாகத் தெரிகின்றது. இராம சரிதம் பாரத சரித்திரத்திற்கு முந்தியது. ஆதலால் பாரத சரித காலத்திற்கு முன்னே பாண்டியர் அலைவாயில் அரசாண்டதாகக் கருதவேண்டும். கபாடபுரமுங் கடல் கொள்ளப்பட்டதாக அறிகிற படியால் அக்கடல்கோட்குப் பின்னர் பாண்டியர் மணலூரிற் றங்கிய தாகக் கருதுவதற்கு இடமுண்டு. முடிநாகராயர் செய்யுளுள் இமயத்தையும் பொதியத்தையுமே கூறினமை காண்க. அவர் செய்யுளால் பாரத காலத்தே தமிழரசர்க்கும் பாண்டவர்க்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டதாகத்தெரிகின்றோம். திருவிளையாடல் புராணத்துள்ளும் மணலூர் பாண்டியர் தலைநகரெனக் கூறப் பட்டுள்ளது.

பாரதகாலத்திற்கு முன்னேயே தொல்காப்பியர் நூல் செய்தனர் என்பது தெளிவு. அகத்தியர், தொல்காப்பியர் என்னும் இரு பேராசிரியர் காலத்தைப் பற்றி முடிபுகட்கு அவ்விருவரும் யாவர் எவ்வகையார் என்பதைப்பற்றி ஒரு சிறிது ஆராயத்தக்கது.

அகத்தியமுனிவர் வரலாற்றினைத் தமிழறிவு சான்ற திருவாளர் ந. மு. வேங்கடசாமிநாட்டார் அவர்கள் ஆராய்ச்சி செய்து வருகின்றார்கள்; இவண் அதனைச் சுருக்கிக் கூறுவாம். அகத்தியர்

என்ற பெயர் தமிழ்ச் சொல் என்று சிலரும், அகஸ்தியர் என்ற வடமொழிச் சொல்லின் மொழிபெயர்ப்பென்று வேறு சிலருங் கருது கின்றார்கள். அவர் வரலாறு இருமொழிப் பண்டைப் பனுவல்கள் பலவினும் காணப்படுகின்றது. அவரைத் தமிழ்முனி யென்று கந்த புராணமுடையார் அழைக்கின்றார். கந்தபுராண அகத்தியப்படலத்தில் 'வண்டமிழ் மாமுனி' 'மூதுரைத் தமிழ் முற்றுணர் மாமுனி' 'சந்தநூற் றமிழ்த்தாபதன்' என்றும், திருக்கலியாணப்படலத்தில் 'மறையோன்று தீஞ்சொற் றமிழ்மாமுனி' என்றும் அவரை ஆசிரியர் கச்சியப்ப சிவாச்சாரியார் விதந்தோதினார். விந்தத்தை யடக்குவதற்கு முன் கடல் குடித்த கதை கேட்கப்படுகின்றது. அது மேற் கூறிய அகத்தியப்படலத்தில்,

> "தெள்ளத் தெளிந்த மறைக்கள்வனைச் செற்ற மீன்போ
> லுள்ளற் கடலை யொருநீயகன் கைய டக்கிக்
> கள்ளத் தவுண னிலைகாட்டி நங் கண்ணில் வைத்த
> கொள்ளைக் கருணை யுலகெங்களுங் கொண்ட தெந்தாய்"

என்றமையால் விளங்கும். கடலைக் குடித்தது விருத்திர னென்னும் அசுரனை இந்திரன் கொல்லுதற் பொருட்டு என்று திருவிளையாடற் புராணத்துட் கூறப்பட்டுளது. இந்திரன் பிரமனிடம் விருத்திரனை வெல்லும் வழி யாதென்று வினவ அப்பிரமன் அகத்தியரிடம் அவனைக் குறையிரக்கும்படி கட்டளையிட்டார். அங்ஙனமே அகத்தியரை வேண்டிக்கொள்ள, அவர் கடலையுண்டு விருத்திரனைக் காட்டினார் என்று திருவிளையாடற் புராணங் கூறுகின்றது. இந்திரன் குறை நேர்ந்தது பொதியின் மலையில் என்பது 'சந்தவெற் படைந்தான் வானோர். தலைவனே' என்ற திருவிளையாடல் இந்திரன் பழிதீர்த்த படலச் செய்யுளடியால் விளங்கும். எனவே, விந்த மடக்குதற்கு முன்னேயே பொதியிலில் அகத்தியர் இருந்தனர் என்பது போதரும். இராமாயணத்துள், "என்று மவனுறைவிடமா மாதலினால்" என்று பொதியிலைக் கம்பர் சிறப்பித்தனர். விந்தமடக்கிய பின்னும் பொதிகையில் அகத்தியர் தங்கியிருந்ததாக அறிகிறோம். அதற்குப் பின் சிவபெருமானது திருமணத்திற்காக இமயஞ் சென்று மீண்டனர். மீண்ட கதையைச் சொல்லுமிடத்துக் கந்தபுராணத்துள் அகத்தியர் இறைவனைத் தமிழறிவு ஈதல் வேண்டுமென்று கேட்டதாகக் குறிக்கப் படவில்லை. காஞ்சிப் புராணத்துள் அவ்வாறு குறிக்கப்பட்டுள்ளது. அங்ஙனம் குறித்தபோதும், தமக்குத் தமிழ்மொழி அன்னியமென்று அவர் சொன்னதாகச் சரித்திரமில்லை. ஆனால், திருவிளையாடற் புராணத்தில் தமக்குத் தமிழ் நன்கு தெரியாததாகக் கூறிய குறிப்பு முதன்முதற் காணப்படுகிறது. இப்புராணம் கந்தபுராணத்தோடு, மாறுபடும் இடங்களில் பின்னையதே சிறப்பாகக் கொள்ளற்பாற்று. ஆதலால், திருவிளையாடற்புராண முடையார் கூற்று தமிழ் முனிவரைக் குறித்ததாகக் கருதப்படாது.

"மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன வாகமந் தோற்றுவித் தருளியும்"

என்றும்,

"மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து
உற்றவைம் முகங்க ளாற்பணித் தருளியும்"

என்றும் வரும் திருவாசக அடிகளாலே 'மகேந்திர மலையில் ஐம்முகங் கொண்டெழுந்தருளி, இறைவர் ஆகமங்களைத் தோற்றுவித்தார்' என்பது போதரும். 'மகேந்திரம் பொதியத்திற்குத் தென்பாலுள்ள ஒரு பெருமலை என்பது முன் குறிக்கப்பட்டது. அம்மலையுள்ள நாடு தமிழ் வழங்கிய நாடாதலால் ஆகமங்களைக் கேட்டவர்கள் தமிழர்களாதல் வேண்டும். கேட்ட ஐவருள் ஒருவர் அகத்தியராகவும், ஏனை நால்வருள் ஒவ்வொருவரும் ஐந்து ஆகமங்கள் கேட்டதாகவும், அகத்தியர் மாத்திரம் எட்டு ஆகமங்கள் கேட்டதாகவும் சிவாகமம் கூறுகின்றது. அவ் வைவருடைய கோத்திரமும் ஆரிய கோத்திரமாகக் காணப்படவில்லை. அவை முறையே சிவகோசரம், சிகாகோசரம், சோதிகோசரம், சாவித்திரிகோசரம், வியோமகோசரம் என்பன. இதனால் அகத்தியர் தமிழ்முனிவர் என்பதும் அவர் குமரி மலையைக் கடல் கொள்வதற்கு முன்னேயே ஆகமம் பெற்றவர் என்பதும் விளங்கும். அவர் கடல் கோட்குமுன் தமிழைச் செம்மைப்படுத்திய பேராசிரியராக விருந்திருத்தல் கூடும். அருந்தவமுனிவராதலால் நீண்ட ஆயுளுடையராய் வாழ்ந்திருந்து கடல்கோட்குப் பின்னும் இராமாயண காலத்தில் இராமருக்குக் காட்சி கொடுத்திருக்கலாம். அகத்தியர் அனுமதியின்றிப் பொருநையாற்றைக் கடத்தல் அரிதென்னும் குறிப்பு வான்மீகத்தில் காணப்படுகின்றது; சில பிரதிகளில் காணப்பட்டதாகக் கூறுந் தண்டகந்திருத்திய அகத்தியரென்பவர் தமிழ் முனியின் வேறாய் ஆரியர் தலைவராய்க் குறுமுனிவர் பெயரைக் கொண்டவராகிய மற்றொருவரென்று யூகிக்கவேண்டியதாயிருக்கிறது. அவரையே நச்சினார்க்கினியர் பாயிர உரையிற் கூறுவதாயுங் கருதலாம். அகத்தியனாருடைய மனைவியைப் புலத்தியனாருடைய உடன்பிறப்பென்று அவர் கூறுகின்றார். ஆனால், கந்தபுராண முடையார் தமிழ் முனிவர் மனைவி விதர்ப்ப நாட்டரசன் புதல்வியென்று மொழிந்தனர். இதனாலும் அகத்தியப் பெயருடைய இருவருக்கும் வேறுபாடு காண்க. இந்திரனது சிவிகை சுமந்ததாகக் கூறப்படும் அகத்தியர் தமிழ்முனிவர் அன்று. இந்திரனை தம்மையடைந்து உதவிவேண்ட நின்ற தமிழ்முனிவர், அவன் சிவிகை சுமத்தல் யாங்ஙனம்? இருக்கு வேதப்பாட்டுகளுட் சிலவற்றைக் கூறிய அகத்தியர் தமிழ்முனிவர் என்று கருத இடமில்லை. அப்பாடல்கள் பாரத காலத்தில் நான்மறைகளை வகுத்த வியாசர் இருக்கு வேதத்துட் சேர்த்தனவைகளாக இருக்கலாம். நாரதர்க்குக் கும்பத்திற் பிறந்தவராகக் கூறப்படும் அகத்தியர் தமிழ்முனிவரென்று கொள்ள

இடமில்லை. அக்கதை தமிழ் முனிவரைப்பற்றி ஆரியர் கட்டிய கதையாக விருத்தல்வேண்டும். அல்லது அப்பெயருடைய ஆரிய முனிவரொருவரைப் பற்றியதாதல் வேண்டும். தமிழ்முனிவர்களின் பெயரையும் ஆரியமாக்கித் தமிழ்ப் பெயர் விளங்காவண்ணஞ் செய்தல் ஆரிய நூலோரது வழக்கம் போலும். அகத்தியர் என்ற சொல்லினைத் தமிழ்ச் சொல்லாகவே கருதலாம். அது தமிழிக்கு இன்றியமையாதவர் என்ற பொருளுடையது. 'என்றுமுள தென்றமிழை' என்றலால், என்றும் பொதியில் இருந்து வளர்த்தல் அவரது கடமைபோலும்.

ஜமதக்கினியின் புதல்வராகத் தொல்காப்பியரைக் கருதினால் அவர் காலம் இடைச்சங்கமிருந்த காலம் என்றெண்ண இடமுண்டு. ஆனால், பரசுராமரைப்பற்றிக் கூறும் நூல்களுள் தொல்காப்பியரை அவரின் உடன் பிறப்பாகக் கூறக் கண்டிலம். சில தமிழ்ப் புலவர்கள் கூறுவதாவது :—" பலரானும் விரும்பப்படும் மேம்பாட்டினையுடைய பண்டைக் காலத்துத் தமிழ்ப் பழங்குடிகளாகிய குறுக்கையர், ஏயர்கோ, காப்பியன், சேக்கிழான் எனப் பெயரியவைகளுள் இவர் பழமை மிக்க காப்பியக்குடியிற் பிறந்தவர்" என்பது. அங்ஙனந் தமிழ் முனிவராகத் தொல்காப்பியரைக் கருதுமிடத்து, இந்நூல் ஆதி யூழியின் அந்தத்தேயே செய்யப்பட்டிருத்தல் கூடும். இந் நூலுட் சில பகுதிகள் பிற்காலத்துச் சேர்க்கப்பட்டனவாகக் கருத இடமுண்டு. அவைகளிற் பல ஆரியக் கலப்பு மிகுந்தபின்னரே சேர்க்கப்பட்டன வென்று கொள்ளவேண்டும்.

இந்நூல் எழுத்ததிகாரம் முழுவதிலும் இரண்டு மூன்று சொற்களே தமிழோ வடமொழியோவென்று ஐயுறுவதற்கு இடந் தருவன. அது வடமொழித் தொடர்பு முதன்முதல் அக்காலத்து ஏற்பட்டமைக்கு ஒரு சான்றாகும்.

பரசுராமர் காலத்திலேயே வடநாட்டில் பிராமணருக்கும் ஏனையோர்க்கும் கலகம் விளைந்ததாகத் தெரிதலால் அக்காலத்திலேயே வெவ்வேறு கரணங்கள் யாக்கப்பட்டிருத்தல் கூடும். இன்னொரு முறையாகக் கருதுமிடத்து மனுஸ்மிருதிகள் முதலியவை எழுந்தபின் சாதியையும் கரணத்தையும் பற்றிய சூத்திரங்கள் தொல்காப்பியத்திற் சேர்க்கப்பட்டிருத்தல் கூடுமென்று தெரிகிறது. எவ்வாறாயினும் பாரதகாலத்திற்கு முன் தொல்காப்பிய நூல் இயற்றப்பட்டதென்று கோடலே பொருத்தமுடைத்து. ஒரு சாரார் சூத்திரமென்ற செய்யுள் வகை வடநாட்டிலே அமைந்த பின்னர்த் தொல்காப்பியர் தமது இலக்கண நூலைச் சூத்திரயாப்பால் இயற்றினர் என்று கூறுகின்றார்கள். கல்ப சூத்திரங்களும் தரும சூத்திரங்களும் உபநிடத காலத்திற்குப் பின் எழுந்தனவென்று கொள்கின்றார்கள். வடமொழிச் சூத்திரயாப்பால் தமிழ்நூல் செய்யப்பட்டதென்று கொள்வதினும் தமிழிலேயே எழுவகைச் செய்யுளுள் ஒன்றாகிய நூலைக் கூறும் பாவினம் அமைந்திருத்தல் கூடுமென்று கொள்ளுதலே இயைபுடைமை காண்க. அது நூற்பாவென்று பெயர் பெறும். எழு

வகைச் செய்யுளைத் தன்னகத்துக் கொண்ட தமிழானது அவற்றை இயற்றுதற்குரிய யாப்புவகைகளை உடைத்தா யிருந்ததில்லையென்று கூறுவது பொருத்தமில்லாத தொன்றே. தொல்காப்பியத்துள் சில இடங்களில் சூத்திரமென்ற சொல் வழங்குவதை வைத்து வடமொழிச் சூத்திரம் ஏற்பட்டதன் பின்னரே இந்நூல் இயற்றப்பட்டதென்று கொள்ளுதற்கு இடமில்லை. தொல்காப்பியத்துட் சில பகுதிகள் ஆசிரியர் காலத்துக்குப்பின் சேர்க்கப்பட்டவைகள். மரபியலுட் பெரும்பான்மையும் அவ்வாறே. சூத்திரம் என்ற சொல் வருகின்ற செய்யுட்கள் மரபியலிலேயே காணப்படுகின்றன. அவை ஆசிரியரின் செய்யுட்களல்லவென்பது ஒருதலை.

ஆசிரியர் திருவள்ளுவர் வரலாறு கூறும் தெளிவு நூல் யாதும் இல்லாததுபோலவே ஆசிரியர் தொல்காப்பியரது வரலாறு கூறும் நூலுமில்லை. அகத்தியரின் மாணுக்கர் தொல்காப்பியர் என்பது மாத்திரம் பல்காப்பியர் உரை, சிகண்டியார் உரை முதலியவற்றால் தெரிகின்றது. புறப்பொருள் வெண்பாமாலையில் அகத்தியரது பன்னிரு மாணுக்கர்களுள் தொல்காப்பியர் தலைவர் என்பதனைக் கூறும் அடிகளுள்ளன. அவையாவன :—

> "மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
> தென்மலை யிருந்த சீர்சால் முனிவரன்
> தன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
> துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
> பன்னிரு புலவரும்"

என்பன.

ஆசிரியர் காப்பியக்குடியைச் சேர்ந்தவரென்று உரையாசிரியர்கள் கூறுகின்றார்கள். ஜமதக்கினியார் புதல்வர் ஆசிரிய ரென்பதற்கு நச்சினார்க்கினியர் பிரமாணம் யாதுங் காட்டவில்லை. தொல்காப்பியரது இயற்பெயர் திரண தூமாக்கினி என்பதற்கும் உரையளவை இன்னும் வெளிப்படவில்லை. ஜமதக்கினி புதல்வர் என்று கொண்டால் தொல்காப்பியர் ஆரியரென்பது வலியுறும்; அதற்குப் பிரமாண மின்மையின் அதனை வற்புறுத்தவுமிடமில்லை ஐந்திரமென்ற வடமொழி வியாகரணத்தையறிந்தா ரென்பதனாலே அவர் ஆரியராயிருத்தல் வேண்டுமென்பது துணிபன்று. தமிழாசிரியர் பிறபல மொழிகளையும் கற்றல் புதுமையன்று. ஆசிரியரது சமயம் தமிழரது கடவுட் கொள்கையேயன்றி வேறன்று. திருவள்ளுவர்க்கு யாது சமயமோ அஃதே தொல்காப்பியர்க்கும் என்று கொள்வதற்கு இரு பேராசிரியரது பெருநூற் பொருளொருமையே சிறந்த காரணமாதல் காண்க. ஆசிரியர் காலத்தே சமணம், புத்தம் முதலியன கிடையா; வைணவம் ஒரு சமயமாகப் பரிணமிக்கவில்லை, மால்வழிபாடு மாத்திரமிருந்தது. ஆசிரியர் அகத்தியனாரது சமயம் சைவம் என்பது தெளிவாதலால் தொல்காப்பியரது சமயமும் அஃதேயென்று கொள்ளுதல் பொருத்த

முடைமை காண்க. திருவள்ளுவ நாயனுர் கொள்கையும் அனையதே. தொல்காப்பியர் திருவள்ளுவர் முதலியோரின் சமயத்தொடர்பான சொற்களைச் சமணபுத்தர் தம் நூலுட்கொண்டு வழங்கினமையால் பலர் இரு பேராசிரியரும் சமணராயிருக்கலாமென்று எண்ணுகின்றூர்கள். அஃது எவ்வளவோர் அறியாமை! சமண நூலாசிரியராகிய திருத்தக்கதேவர் முதலியோர் சமணரது முத்திநிலையைச் 'சிவகதி' என்கின்றனர். அருகனைச் 'சிவபரமுத்தி' என்கின்றனர். அக்காரணம் பற்றிச் சமணரைச் சைவரென்று யாராவது கூறுவாரா?

புறநானூறு கூ ஆவது பாட்டு, பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழார் பாடியது. முதுகுடுமிப் பெருவழுதி பஃறுளியாற்றையுடைய நெடியோன் வழிவந்தவனென்பது, அவனைக் குறித்து நெட்டிமையார் பாடிய பாட்டால் விளங்கும். அம்முதுகுடுமி காலத்தே குமரியாறு தெற்கிலிருந்ததென்பது தெளிவு. அக்காலத்து அவ்வழுதியினது குடை முக்கட் செல்வரது கோயிலைவலம் வருவதற்குமாத்திரமே தாழும் என்பது கூறப்பட்டது.

> "பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
> முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே
> யிறைஞ்சுக"

என்பது காண்க.

இதனுற்போந்தது யாதெனின் இராமாயண காலத்திலேயே தென்னுட்டில் முக்கட்செல்வர் வழிபாடு சிறந்தோங்கியிருந்ததென்பது புலனும். அக்காலத்துப் பெருவழக்கிற்றுகிய முக்கட் செல்வர் வழிபாடே தொல்காப்பியர்க்கும் பல்லாற்றானும் பொருந்துவதாம். ஆரியர் கலப்பு அவர் காலத்தே உண்மையின் அவரது வேள்வியும் அரசர்களால் இயற்றப்பட்டன வென்பது தெரிகின்றது. ஆனல், வேள்விவழக்கு குடிகளுள் அக் காலத்துப் பரவியதாகத் தோன்றவில்லை. ஆசிரியது மரபினை அறிவர் மரபாகவே கொள்ளல் வேண்டும்.

தொல்காப்பியர் ஆரியராயினும் தமிழராயினுமாகுக. அவர் காலமாகிய இராமாயண காலத்திற்கு முன்னேயே முத்தமிழ் நூல்களும் மூவேந்தரும், முத்தமிழ்ப் புலவரும் உயர்ந்த கடவுட் கொள்கையும் செவ்விய அறநெறியும் உடையராய்த் தமிழ்நாட்டிற் றிகழ்ந்தோங்கினரென்பதை யாவரும் மறுக்க வொண்ணுது. வான்மீகியார் இராமாயண காலம் கி. மு. எ00-க்கு முன் என்பது திண்ணம். ஆதலுல் புத்தம் சமணம் முதலிய மதங்கள் உண்டாவதற்கு முன்னேயும் கி. மு. நான்காம் நூற்றுண்டிற் றிகழ்ந்த பாணினி முனிவர் காலத்திற்கு முன்னேயும் தொல்காப்பியம் இயற்றப்பட்டதென்பது தெளிவு.

தொல்காப்பியரையும் அகத்தியரையும் புத்தர் அல்லது சமணரென்று சொல்வது உண்மைச் சரித்திரத்திற்கு முற்றும் மாறாக உள்ள ஒரு தப்பு மொழியாகும்.

ஆசிரியர் நூல் செய்கின்ற காலத்திலே இன்றைக்கும் மேனாட்டினரும் அறியாத பல நுண்ணூல்கள் தமிழ்நாட்டிலே தழைத்தோங்கின வென்று யூகிப்பதற்கு இந்நூல் இடங்கொடுக்கின்றது. முத்தமிழ் நூல்களும், யோக நூல்களும், மந்திர நூல்களும், தத்துவ நூல்களும், மருத்துவ நூல்களும் மிகுதியாக இருந்தனவென்பது தொல்காப்பியத்தினுனே புலனாவதை மேலே காட்டினோம்.

எழுத்ததிகார நூல்மரபாலும், பிறப்பியலாலும், எழுத்தொலி மூலநூலுணர்ச்சி தமிழ் நாட்டிற் சிறப்புற்றோங்கியிருந்ததென்பது தெரிய வருகிறது. உலகத்திலே எல்லாவகை மொழிகளிலும் பயில்கின்ற எழுத்தொலிகளை வகைப்படுத்தி அவற்றுள் தனி எழுத்தொலிகள் இன்ன வெனவும், கலப்பொலிகள் எழுவதற்குக் காரணமாக அத்தனியொலிகளோடு ஒன்றுதல் பலவாதல் முன்னுதல் பின்னுதல் உடனுதல் இயைகின்ற சார்பொலிகள் இன்னவென்றும் பண்டைத் தமிழறிஞர் அறிந்திருந்தார்கள். தனியொலிகள் அனைத்தையும் தமிழ்மொழி நெடுங்கணக்கின் முப்பது எழுத்துக்களாக அமைத்து வைத்தனர். தனியொலிகட்கும் சார்பொலிகட்கும் குறியீடும் அமைத்துள்ளனர். எவ் வகையான பேச்சொலியும் தனியொலி சார்பொலி அவற்றின் கலப்பொலி என்பவற்றுள் அடங்குதலால் அவற்றைத் தமிழெழுத்துக்களால் எழுதும் வன்மையும் நம் முன்னோர் பெற்றுத் திகழ்ந்தனர். இவ்வரிய நூலுணர்ச்சி உலகிலுள்ள எல்லா மொழிகட்கும் மிகவுஞ் சுருங்கிய எளியவாகிய குறியீடுகளைத் தருவது. இந்நூலுணர்ச்சி உலகிற் பரவுமாயின் தமிழ்எழுத்து முறையே உலகெங்கும் பரவிப் பிற இலிபிகளின் இடர்ப்பாடும் பெருக்கமும் ஓய்ந்து ஒழியும். ௨000 ஆண்டுகளாக மறைந்து கிடந்த இவ்வரிய நூலைத் தமது நுண்மாண் நுழைபுல மிகுதிப்பாட்டால் தொல்காப்பிய எழுத்ததிகாரத்தினின்றும் வடித்தெடுத்த பேரமுதமாகத் தற்காலத்தே உதவியருளியவர் பெருங் கலைஞர் திருவாளர் பா. வே. மாணிக்க நாயக்கரவர்கள் ஆவர். அவர்கட்குத் தமிழ்நாடும் பிறநாடும் செயக்கடவதாகிய கைம்மாறு ஒன்று மிலதாயினும் அவ்வரிய நூலைப் போற்றுதலும் பரவச் செய்தலுமே நம்மவர்களின் ஒருதலையாய கடமையாகும். நம் முன்னோர் எழுத்தொலி முயற்சிக்குக் குறியீடு அமைத்தனரேயன்றி அவ்வொலிக்கு மாத்திரம் வடிவமைத்திலர். அதனால் எழுத்தொலி அளவிறந்து பெருகினும் குறியீடுகள் அளவுட் பட்டனவாக அமைந்துள்ளன. இதுவே பெறற்கரிய பெரும் பேறாக எழுத்து நூல் கற்பார் கடைப்பிடிக்க வேண்டியது. இவ்வாறு கொள்ளாது ஒலி ஒவ்வொன்றிற்கும் குறி ஒவ்வொன்று அமைத்தால் ஒலிகளும் பலவாய்க்

குறிகளும் பலவாய் வரம்பிகந்து ஓடும். அதனால் வரி வடிவுக் கூட்டம் செப்பமடையாது வாளா விரிந்து பயனிலதாம். இதனை மேலைத் தேசத்து எழுத்து நூல் வல்லார் உற்று நோக்கற்பாலர்.

தமிழ் எழுத்தொலி கற்போர் பண்டை எழுத்து நூலுணர்ச்சியின்றி இதுவரை முயன்றமையால் சார்பெழுத்தின் தன்மை அறியாதிருந்தனர்; உரையாசிரியர்களும் அவ்வாறே. திருவாளர் நாயக்கரவர்களின் பேருதவியால் சார்பெழுத்தின் தன்மை தமிழர்கட்கு விளங்குவதாயிற்று. சார்பெழுத்தாவன :—குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்பன. குற்றியலிகரம் இகரக் குறுக்கமன்று. 'கேண்மியா' என்ற சொல்லின் மகரத்தின் மேல் உள்ள இகரம் நேர் இகரமாக ஒலியாது வேறுபட்டிருத்தல் காண்க. இந்தக் குற்றியலிகரம் அகரத்திற்குப் பின் கலப்பதால் எழுகின்ற ஒலியே 'Man' என்ற ஆங்கிலச் சொல்லின் நடுவேயுள்ள உயிரொலியாம். குற்றியலுகரம் என்பது வடமொழி 'ரு' 'லு' என்னும் ஒலிகளிலுள்ள உயிரொலிகளாம். ஆய்தம் என்பது எழுத்தோசைக்குக் காரணமாகிய மூச்சொலியேயாகும். அது சார்ந்த ஒலியின் தன்மையோடொத்தியலும். அதனைத் தகரத்தின் முன்சேர்க்கும்பொழுது தகரத்தின் ஒலி மென்மையடையும். அவ்வாறு ஆய்தமுந் தகரமுங் கலந்த ஒலி அரபு முதலிய மொழிகளில் மிகுதியும் வழங்குகிறது. இவ்வாறு கொள்ளாது ஆய்தத்தின் ஒலி வடிவம் அது ககரத்தின் முன் சேர்ந்தபொழுது எழுகின்ற ஒலியேயாம் என்று பிற்காலத்தார் மயக்கங் கொண்டனர். அதனால், ஆய்தத்தின் பெரும்பயனைத் தமிழர் அறியாது போயினர். குற்றியலிகரம் உயிரொலிகளோடு கலத்தல் தமிழ்மொழியிற் கிடையாது; பிறமொழியிலுண்டு. அவ்வாறே குற்றியலுகரம் வல்லின மெய்யின்மேல் மாத்திரம் தமிழ் இயல் நூல்களுட் குறித்த முறையில் ஊர்ந்துவரும் வடமொழியிலோ ரகர லகர மெய்களினும் ஊர்ந்து வருகின்றது. ஆங்கில முதலிய மொழிகளிலோ அது பிற உயிரொலிகளோடுங் கலந்து வருகின்றது ஆய்தம் தனி எழுத்தொலிகட்குப் பின் கலத்தல் தமிழிலில்லை. வடமொழி முதலியவற்றில் அஃது அவைகளின் உடன் கலத்தலும் பின் கலத்தலும் காணப்படும்.

தனியொலிகள் முப்பதும் தமிழ் நெடுங் கணக்காக அமைந்த சீர்மை உலகிற் பிற எம்மொழிக்குங் கிடையாது. சார்பொலிகள் கலக்கின்ற முறைகள் தமிழிலே மிகச் சுருக்கம். பிற மொழிகளுள் அவை தமிழினும் விரிவுடையன? இதனை உணராமையால் பலர் தமிழானது எழுத்தொலிகள் குறைந்த மொழியென வறிதே பிழை கூறுவர். அவர் தமது எழுத்தொலி நூல் அறியாமையைப் புலப்படுத்தினர் ஆவர். இனியேனும் தமிழர், பிற மொழிகளிலிருந்து எழுத்தொலிகளையும் அவற்றின் வரிவடிவத்தையும் தமிழுட் கடன் வாங்காது தமிழ் எழுத்துக்களின் துணைகொண்டே பிறமொழி

ஒலிகளை நுண்ணூற்கு இயைய எழுதிக்கொள்ளும் ஆற்றல் பெற்றுய்வார்களாக.

தமிழெழுத் தொலிகளின் சிறப்புக்களையும் செவ்விய அமைப்பையும் பற்றித் திருவாளர் மாணிக்க நாயக்க ரவர்கள் நுணுகி ஆய்ந்து மொழிந்தவை பின்வருமாறு :—

1. கூட்டொலிகளைத்தனியெழுத்துக்களாக மற்றைய மொழிகள் எண்ணுவதுபோலத் தமிழ், தாள் தலைதெரியாது எண்ணுவதில்லை.

2. மற்றைய மொழிகள் போலாது கூட்டல் குறைத்தல் இயலாதவர்க்கு முயற்சியாலாகும் எழுத்தொலிகளிவையென்றும், முயற்சி வேற்றுமையா லாக்கக்கூடிய எண்ணிறந்த எழுத்தொலிகளிவையென்றும், தமிழ் பாகுபடுத்தி யுணர்த்துகின்றது.

3. வாக்குறுப்புக்களின் கூட்டல் குறைத்தல் ஏலாத குறிப்பான முயற்சிகளால் ஒலிக்கக்கூடிய எல்லா வெழுத்துக்களும் தமிழ் மொழியில் "உயிர்கள்" என வழங்கும் பன்னிரண்டும் "உடல்கள்" என வழங்கும் பதினெட்டுமே.

4. தமிழெழுத்துக்களினமைப்பைவிட எளியது நினைத்தற் கெட்டாததாயினும், அதுவே எல்லா மொழிகளுக்கும் பொதுவான அமைப்பாம்.

தமிழ் நெடுங்கணக்கின் வரி வடிவம் "முத்தமிழ்" என்ற குழூஉக் குறியால் விளங்கும் பிரணவத்தின் வடிவத்தினின்றே எழுந்தன வென்பதையும், இயற்கை நிலைமைகளை இனிது விளக்கும் தமிழ் எழுத் தொலிகளின் சிறந்த ஆற்றலையும், அவற்றின் மந்திரப் பொருளையும் திருவாளர் நாயக்க ரவர்கள் தமது "தமிழ் மறை விளக்கம்" என்ற நூலில் இனிது விளக்கியிருக்கின்றனர். அவற்றின் சுருக்கம் வருமாறு :—

1. இயற்கையில் மூலவடிவமாயுள்ள கருவின் உருவமே தமிழில் ஓகாரம் அஃதாவது மூலப்பிரணவம். இவ்வடிவமே கடவுளுடைய அபயாஸ்த வரதாஸ்த மூர்த்தமாகக் காட்டப் பட்டுள்ளது. இவ்வடிவினின்றே தமிழின் மற்றைய வரிவடிவங்கள் கிளம்பியிருக்கின்றன. இவைகள் தந்தம் மந்திரப் பொருளைத் தந்தம் வடிவாலேயே நன்கு விளக்குகின்றன.

2. எழுத்துக்களின் மந்திரப் பொருளும், மொழிபடு பொருளும் தமிழில் ஒன்ருக இருப்பது எதனினும் காணுக்காட்சி. "தனிநிலை," "உயிர்கள்," உடல்கள்" என்பன தமிழெழுத்துக்களின் பகுப்புப் பெயர்களாம்.

மயிலாப்பூர்
உருத்ரோத்காரி ஸு
சித்திரை மீ 18உ

கா. சுப்பிரமணியம்

# மேற்கோள் நூற்குறிப்பு விளக்கம்

---

அகம் - அகநானூறு
*எச்சவியல்
*எழு - எழுத்ததிகாரம்
ஐங்குறு - ஐங்குறுநூறு
குறள் - திருக்குறள்
குறு, குறுந் - குறுந்தொகை
குறிஞ்சிக்கலி - கலித்தொகை
சிந்தா - சீவகசிந்தாமணி நாமக
    விலம்பகம்
சிலப் - சிலப்பதிகாரம்
*செய், செய்யு - செய்யுளியல்
*சொ, சொல் - சொல்லதிகாரம்
நற், நற்றி - நற்றிணை
†நெடுநல்வாடை
நாலடி - நாலடியார்
†பட்டினப் - பட்டினப்பாலை
புறம் - புறநானூறு
*மரபியல்
†மலைபடு - மலைபடுகடாம்
†முல்லைப் - முல்லைப்பாட்டு

---

* தொல்காப்பியம்   † பத்துப்பாட்டு

# INTRODUCTION

Tolkappiam is the oldest book extant of a compre-hensive nature in Tamil Literature. It is noteworthy that this grand work is a treatise on Grammar and Criticism. It presupposes a literary evolution of Tamil for ages before its birth. Although barring a few stanzas in Purananuru etc., we have at present got no complete work of Pre-Tolkappiam times, we have references in Tolkappiam itself to a vast literature of a rich variety which existed prior to it. There are allusions therein to literary, musical, mantric and yogic works and to Universal Phonetics. It is stated in the introductory stanza to the work that its author drew his inspiration from the pre-existing literature and a close study of the literary and colloquial aspects of the language as prevalent in the Tamil land bounded on the north by Venkadam and on the south by Kumari.

The term Aindram (ஐந்திரம்) occurring in the intro-ductory verse has given rise to a good deal of discussion. Some hold the view that it is the name of a book on Sanskrit Grammar. It is simply referred to as a book with which the author was familiar and nothing is definitely stated as to its relation to Tolkappiam itself. Another opinion is that it represents a Tamil work antecedent to Tolkappiam or one of the Saiva Upagamas. Some confuse it with the 'Indrakaliam' of the Jains. There is no internal reference to any of these works in Tolkappiam and no book of that name exists at present even in Sanskrit. Hence our researches in that direction are now next to impossible. Some are of opinion that it denotes the first Sanskrit Grammar which derived its name from the legend that Indra was the author of it. This much is probable that the great Sanskrit Grammar of Panini now extant did not exist at the time of Tolkappiam and was posterior to Aindram which is mentioned as one of its precursors. It may be that Saint Tolkappiar was conversant with the firsr Sanskrit Grammar at the time when he wrote his book. But the Tolkappiam could not have been based upon Aindram at all. It is quite probable that the author

derived the principles of his grammar from Akattyam, as is evidenced by the passages in [1]Pannirupadalam and [2]Palkappiam.

The age of the author is to be ascertained by an investigation of southern boundary of Tamilakam in his day, there being no doubt that the hill of Venkadam was its northern limit. The southern limit is signified by the term Kumari. The question is whether the word denotes the mountain or the river of that name. All the commentators have taken it to be latter except the late Arasan Shanmuganar of Sholavandan who held that it indicated the former. It is clear that the term was applied to a range of mountains as well as to a natural stream. In the [3]sixth [4]seventh and [5]sixty-seventh stanzas of Purananuru the sea is stated to surround the land only on the east and the west of it and its southern boundary is given as the river Kumari. At a later day, when the basin of the Kumari was washed away by the sea, the ocean is said to encompass the Tamil country on three of its sides as in [6]Chirukakkaipadineyam and [7]Silappadikaram.

While all commentators agree that there was a river called Kumari, the author of Silappadikaram applied the

---

1. "ஆனாப் பெருமை யகத்திய னென்னு
மருந்தவ முனிவ னாக்கிய முதனூல்
பொருந்தக் கற்றுப் புரைதப உணர்ந்தோர்
நல்லிசை நிறுத்த தொல்காப் பியனும்"
2. "கூறிய குன்றினு முதனூல் கூட்டித்
தோமின் றுணர்ந்த தொல்காப் பியன்ற
னாணை யின்றமி ழறிந்தோர்க்குக் கடனே"
3. "வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்"
4. "தென்குமரி வடபெருங்கடல்
குணகுடகட லாவெல்லை"
5. "குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி"
6. "வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்
தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்
வரைமருள் புணரியொடு பொருது கிடந்த
நாட்டியல் வழக்க நான்மையின் கடைக்கண்
யாப்பின திலக்கண மறைகுவன் முறையே"
7. "தொடியோள் பௌவம்"

term to a many-sided mountain as well. In Sivadarumottaram, one of the important Saiva Upagamas, we find mention of a big range called Mahendram, situated south of Pothia Hills. We also learn that it extended from north to south and that it formed the western background of the bigger Ceylon that once existed. On looking into the map attached to W. Scott Elliott's 'Lost Lemuria', we find that a certain chain of hills stretched southward from the southern portion of the Arabian Sea just a parallel to the Pothia hills up to about 10 degrees below the equator and then turned west in the direction of the African Island of Madagascar. To the east of this range no big mountain is visible in that map. A comparison of these descriptions renders it quite probable that this range was really the Kumari of the ancient Tamil books and the Mahendram of the Agamas and Skandapuranam.

Besides this mountainous range, a huge river called Pahruli (பஃறுளி) is mentioned as having existed in the submerged land. There are references to it in [1]Purananuru as the famous river of a Pandian king called Nedion (நெடியோன்). The author of [2]Silappadikaram in pathetically describing the inroad of the sea that engulfed the Pahruli and the high peaks of the Kumari mountain, implicitly compares them respectively to the Ganges and the Himalayas in the north. Since the author mentions them as belonging to Pandian kings, we have reason to infer that the region of the Pahruli was part of Tamilakam. While this great river and the summit of Kumari are mentioned as having submerged, the author does not refer to the Kumari as having been covered by the sea at that time, so that it is quite probable that the sea did not in its first inroad on Tamilakam encroach upon the watershed of the river

1. "முந்நீர் விழவி னெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே" (புறம். ௯)

2. "அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி
வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையு மிமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி" (சிலப். ௧௧-17-22)

Kumari. In this connection, Adiyarkkunallar (அடியார்க்கு நல்லார்). the great commentator of Silappadikaram speaks of the land between the Pahruli and Kumari as having been cut up into 49 districts; and says that it was this vast area that went under the sea in the first deluge that swallowed portions of Tamilakam.

It is stated in the introductory verse to Tolkappiam that the work was dedicated to the Pandian king called Nilandaru tiruvirpandian (நிலந்தரு திருவிற் பாண்டியன்). The reason for this name of the Pandian king may be gathered from the initial lines cf the [1]104th Stanza of Kalithogai to the effect that the Southern king of immortal fame who on account of the inroad of the sea on his land led a bold expedition to the north and won lands for his people in the territories of the Chera and Chola kings. This circumstance leads us to infer that the first deluge took place in the reign of this sovereign. References to him in Purananuru etc., show that he lived for an extra ordinarily long time. Hence when Saint Tolkappiar wrote his book it is certain that the land beyond the river Kumari had already been covered by the Indian Ocean, and the southern limit of Tamilakam in his day must therefore be taken to be the river Kumari and not the mountain of that name.

While the literature of the Pre-diluvian age was utterly lost to us, we have even now a complete copy of the first of the books that have been written since the first deluge. This immortal work is the connecting link between the vast literary evolution of Tamil in the period styled the age of the First Sangam and the literature of latter times.

The Aryan influence in the southern land was only very slight in the days of Saint Tolkappiar. Valmiki locates the Capital City of the Pandian kings in the age of the Ramayana about the spot where the Tampravarni empties itself into the sea. This is named Kapadapuram

1. "மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வெளவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்" (கலி. 104.

(கபாடபுரம்) by the poet and the commentator on Irayanar Agapporul mentions the same place as the seat of the Second Sangam or Kazhagam. It is also stated by the latter that Tolkappiam was one of the authoritative work of that age. The reason why Kapadapuram or Alaivai (அலைவாய்) as it is called by modern Tamil scholars, was chosen as the capital is explained by the occurence of the first deluge before which Ten Madurai (தென் மதுரை) in the submerged land had been the seat of the Pandians. It is also remarkable that the Tolkappiam does not find a place in the standard works of the first Sangam. This adds strength to the fact that it could have been written only in the age of the Ramayana of Valmiki. Researches show that at that time there was in the south a fragment of the hilly range of Kumari where the river of that name took its rise and flowed as a southern limit of the Tamil country; portions of the Pandian Kingdom between the river Kumari and the Tampravarni and a gulf between the same and Ceylon. While he refers to Chera, Chola and Pandian Kingdoms in the south, Valmiki locates the Andhra Country north of the Chola kingdom which then extended up to Tirupathi of to-day. This confirms the view that at that time the northern boundary of Tamilakam was Venkadam.

In the Mahabharatha of Saint Vyasa, Manavur (மணவூர்) is mentioned as the seat of the Pandian kings and this is located according to the Tiruvilaiyadalpuranam near the seacoast to the east of the prensent city of Madura. In Purananuru there is a stanza in honour of a Chera king called Uthiyan Cheralathan who is extolled as having made an inexhaustible supply of rice to Pandavas as one of their allies. In the same stanza the northern and southern limits of India are indicated respectively as the Himalaya mountains and the Pothia hills. There is no reference to the river Kumari in this age. Hence we may infer that prior to the days of the Mahabharatha, and at a time before the Capital City of the Pandians was removed to Manavur, Saint Tolkappiar had brought his book to the light of day; at least the main portion of his work must have come into being in the age of Valmiki and the

tradition that Saint Tolkappiar was a son of Jamathagni in a way confirms this view. The reason for the shift of the Capital from Kapadapuram to Manavur, was that the second deluge swept away the part of the land up to Cape Comorin and this flood appears to have taken place early in the age of the Mahabaratha.

For a better understanding of the age of Tolkappiam, it is worthwhile to briefly refer to the accounts of Saint Akattyar and Saint Tolkappiar.

The life of Akattyar is being written by the distinguished Tamil scholar Mr. M. Venkatasami Nattar, Head Tamil Pandit of S P.G. College, Trichinopoly. Here we shall attempt only a brief sketch of the identity of this Saint. There is a conflict of opinion as to whether the term Akattyar is a Tamil or Sanskrit one. The history of the great sage lies recorded in a fragmentary fashion in several ancient books of both the languages. The author of Skandapuranam in Tamil styles him as,

'வண்டமிழ் மாமுனி' 'முதுரைத்தமிழ் முற்றுணர் மாமுனி'

'சந்தநூற்றமிழ்த் தாபதன்' 'மறையொன்று இஞ்சொற்றமிழ் மாமுனி'

He also states that before the sage performed the miracle of suppressing the Vindyan range he dried up the sea by drinking it in order to help Indra to pursue and smite his enemy who had hid himself beneath the waters. We learn from Tiruvilaiyadalpuranam that Indra approached the sage on the Pothia hills and made his request. After the levelling down of the Vindyan mountain he is said to have resided in Pothia hills before he went north to attend God Siva's marriage in the Himalayas. Thus we understand that as Kambar put it, the Pothia hills were his permanent abode and that he several times went north on special missions and returned south after fulfilling them. When describing, his return from the north the author of Skandapuranam does not state that he prayed to God for a knowledge of Tamil which was foreign to him. Although the author of Kanjippuranam a later work, makes mention of the Saint's prayer for efficiency in Tamil learning; he does not say that the language was originally foreign to the

Saint. But such a statement is made by the author of Tiruvilaiyadalpuranam also a later work than Skandapuranam. 'Wherever there is a difference between Skandam and Tiruvilaiyadal it is the former that should be relied upon more than the latter. Hence we cannot attach importance to the latter in this respect, especially from the considerations that follow.

It is stated in Tiruvachakam that in the Mahendra hills God Siva vouch-safed Agamic wisdom to certain Holy Saints. The agamic account is that the Saints were five in number, four of whom received five agamas each and that Akattyar who was the foremost of them obtained eight agamas of importance. The Gotras of the said five sages are not Aryan in character. Considering the fact that Mahendram was identical with Kumari and was situated in the Tamil country south of the Pothia hills, we are led to infer that the five Saints above referred to must have belonged to the Tamil race and hence Saint Akattyar the most famous of them must have been a Tamil Saint from the beginning. It appears that the sage must be one of those who reformed the Tamil language in the antediluvian days. As a Divine Saint of miraculous Psychic powers he could have lived for aeons before and after the first deluge. He might have taught Tamil to Saint Tolkappiar and other disciples subsequently to the inundation and continued to live in the age of the Ramayana. It is stated in Valmiki that the permission of Akattyar was required for any one who wanted to cross the river Tampravarni and go southward. Saint Akattyar is described by Valmiki as gifted with peerless spiritual effulgence. In some of the versions of Valmiki there is an account of another Saint of the same name who is said to have reclaimed the forest of *Dandaka*. He should not be confused with the Tamil Saint Akattyar of the Pothia hills. He might have been a leader of the Aryans who for the first time invaded Southern India in the days of the Second Sangam. While the author of *Skandapuranam* describes St. Akattyar's wife as the daughter of a northern prince, the commentator Nachinarkiniar gives the account that she was the s ister of Pulastiyar. This also confirms the view there were two Saints of the

களெல்லாம், நெட்டெழுத் தியல—நெட்டெழுத்து மாத்திரை மிக்கு நடக்கும்படியாகத் தொடர்ந்த சொல்லாம்; எ - று.

எ - டு: 'வருவர்கொல் வயங்கிழாஅய்' (கலி - கக) எனவும், 'கடியவே கனங்குழாஅய்' (கலி - கக) எனவுங் குற்றெழுத்துக்களெல்லாம் நெட்டெழுத்தினை மாத்திரை மிகுத்தற்குக் கூடியவாறு உணர்க. ஏனைச் செய்யுட்களையும் இவ்வாறே காண்க. எனவே, மாத்திரை அளக்குங்கால் நெட்டெழுத்தே மாத்திரை பெற்று மிக்கு நிற்கும் என்றமையான், எதிரது போற்றலென்னும் உத்திபற்றிச் செய்யுளியலை நோக்கிக் கூறியதாயிற்று, ஈண்டுக் கூறினார், நெட்டெழுத்து இரண்டு மாத்திரையின் இகந்து வரும் என்பது அறிவித்தற்கு.

அளபென்று மாத்திரையைக் கூறுது அளவெனச் சூத்திரஞ் செய்தமையான் அளவு தொழின்மேல் நின்றது. அது செய்யுளியலுள் 'மாத்திரையளவும்' (செய்யுளியல்-உ) என்பதனானும் உணர்க. இயல வென்றதனைச் செயவெனெச்ச மாக்கிப் படுத்தலோசையாற் கூறுக.

இனித் தன்னின முடித்த லென்பதனான் ஒற்றிற்கும் இவ்வாறே கொள்க 'குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி' (அகம்-ச) என்ற குறுஞ்சீர்வண்ணத்திற்கு உரிய குற்றெழுத்துக்களெல்லாம் இடையினின்ற ஒற்றெழுத்தை மாத்திரை மிகுத்தற்குக் கூடிநின்றவாறு உணர்க. எனவே, குற்றெழுத்துக்களெல்லாம் ஒற்றெழுத்துக்களோடும் நெட்டெழுத்துக்களோடுங் கூடி அவற்றையே ஓசைமிகுத்து நிற்கும் என்றவாருயிற்று. இதனானே ஒற்றிசை நீடலுமென்ற ஒற்றிசை நீளுங்காற் குற்றெழுத்தாய் நீளுமென்றார். இனி உரையாசிரியர் புகர் புகழ் எனக் குறிலிணைக்கீழ் ரகார ழகாரங்கள் வந்த தொடர்மொழிகளெல்லாந் தார் தாழ் என்றாற்போல ஓசையொத்து நெட்டெழுத்தின் தன்மையவாம் என்றாராலெனின், புகர் புகழ் என்பனவற்றை நெட்டெழுத்தென்றே எவ்விடத்தும் ஆளாமையானும் நெட்டெழுத்தாகக் கூறிய இலக்கணத்தால் ஒரு பயன் கொள்ளாமையானுஞ் செய்யுளியலுள் இவற்றைக் குறிலிணை ஒற்றடுத்த நிரையசையாகவுந் தார் தாழ் என்பனவற்றை நெட்டெழுத்து ஒற்றடுத்த நேரசையாகவுங் கோடலானும் அது பொருளன்மை உணர்க.* (கஎ)

## செய்யுளில் ஈரொற்றிலக்கணம்

ருக: செய்யுள் இறுதிப் போலி மொழிவயின்
னகார மகாரம் ஈரொற் றாகும்.

இது செய்யுட்கண் ஈரொற்றிலக்கணமாமாறு கூறுகின்றது.

(இ - ள்.) செய்யுட் போலி மொழி இறுதிவயின்—செய்யுட்கண் போலுமென்னுஞ் சொல்லின் இறுதிக்கண், னகாரம் மகாரம் ஈரொற்றாகும்—னகாரமும் மகாரமும் வந்து ஈரொற்று உடனிலையாய் நிற்கும்; எ - று.

* இம்மறுப்பு அவ்வளவு பொருத்தமாய்த் தோன்றவில்லை.

எ - டு : அந்நாலை - முந்நூலாக் கொள்வானும் போன்' (கலித்-௪0௩) 'சிதையுங் கலத்தைப் பயினால் திருத்தித் — திசையறி மீகானும் போன்ம்' (பரி - ௧0-௫௫) என வரும். போலும் என்னுஞ் செய்யுமென்னும் முற்று ஈற்றுமிசை யுகரம் மெய்யொழித்துக் கெட்டு லகாரந் திரிந்து நின்றது. இஃது இறுதியில் முற்று; இடையிற் பெயரெச்சமாகிய உவமவுருபு *ஈண்டு முற்றென்பார் இறுதிமொழி என்றார். (௧௮)

மகரங் குறுகுமிடம்

௫௨. னகரனை முன்னர் மகாரங் குறுகும்.

இஃது அரையளபு குறுகு மென்ற மகாரத்திற்குக் குறுகும் இடம் இது வென்கின்றது.

இ - ள் : னகாரை முன்னர் மகாரங் குறுகும்—முற் கூறிய னகரத்தின் முன்னர் வந்த மகரந் தன் அரைமாத்திரையிற் குறுகி நிற்கும்; எ - று.

எ - டு : போன்ம் என முன்னர்க் காட்டினும். னகாரை யென இடைச்சொல் ஈறுதிரிந்து நின்றது.

இனித் தன்னின முடித்த லென்பதனான் ணகாரவொற்றின் முன்னும் மகாரங் குறுகுதல் கொள்க. 'மருளினு மெல்லா மருண்ம்' என வரும். (௧௯)

மொழிக்கண்ணு மாத்திரை வேறுபடாமை

௫௩. மொழிப்படுத் திசைப்பினுந் தெரிந்துவே றிசைப்பினும்
எழுத்தியல் திரியா என்மனார் புலவர்.

இஃது ஒற்றுங் குற்றுகரமும் ஈண்டு எழுத்துக்களோடு கூட்டி எண்ணப்பட்டு நிற்குமென்பதூஉஞ் செய்யுளியலுள் எண்ணப்படாது நிற்கு மென்பதூஉங் கூறுகின்றது.

இ - ள் : தெரிந்து—ஒற்றுங் குற்றுகரமும் பொருள் தரு நிலைமையை ஆராய்ந்து, மொழிப்படுத்து இசைப்பினும்—சொல்லாகச் சேர்த்துச் சொல்லினும், வேறு இசைப்பினும் — செய்யுளியலுள் ஒற்றுங் குற்றுகரமும் பொருள் தருமேனும் மாத்திரை குறைந்து நிற்கும் நிலைமையை நோக்கி எழுத்தெண்ணப்படா வென்று ஆண்டைக்கு வேறாகக் கூறினும், எழுத்தியல் திரியா என்மனார் புலவர் — அவ்விரண்டிடத்தும அரைமாத்திரை பெற்று நிற்கும் ஒற்றுங் குற்றுகரமும் முற்கூறிய எழுத்தாந்தன்மை திரியாவென்று கூறுவர் புலவர்; எ - று.

இதனான் ஒற்றும் ஆய்தமுங் குற்றுகரமும் எழுத்தாகி நின்று பொருள் தந்தும், எழுத்தெண்ணவும் அலகிடவும் பெறா வென்பது

*போலும் என்னும் சொல், உயிர்போலுங் கேளிர் என இடையில் நிற்பின் பெயரெச்சமும், மீகானும் போலும், மீகானும் போன்ம் என இறுதியில் நிற்பின் வினைமுற்றும் ஆகும்.

கூறினாராயிற்று. தெரிந்து வேறிசைத்தல் குற்றுகரத்திற்கு இன்மையின் ஏற்புழிக்கோடலான் ஒற்றிற்கும் ஆய்தத்திற்குங் கொள்க.*

எ – டு: அல் இல் உண் எண் ஒல் எனவும், கல் வில் முள் செல் சொல் எனவும், ஆல் ஈர் ஊர் ஏர் ஓர் எனவும், கால் சீர் சூல் தேன் கோன் எனவும் உயிரும் உயிர்மெய்யுமாகிய குற்றெழுத்தையும் நெட்டெழுத்தையும் ஒற்றெழுத்துக்கள் அடுத்துநின்று பொருள்தந்தவாறு காண்க. கடம் கடாம் உடையான் திருவாரூர் அகத்தியனார் என ஈரெழுத்தையும் மூவெழுத்தையும் நாலெழுத்தையும் ஐயெழுத்தையும் இறுதியிலும் இடையிலும் ஒற்றடுத்துநின்று பொருள்தந்தவாறு காண்க. எஃகு தெள்கு கொக்கு குரங்கு என்பனவும் எழுத்தெண்ணவும் அலகிடவும் பெறாத குற்றுகரம் அடுத்து நின்று பொருள் தந்தவாறு காண்க. 'உயிரில் எழுத்தும் எண்ணப் படாஅ – உயிர்த்திறம் இயக்கம் இன்மை யான' (செய்யுளியல் – ௪௪) என்பது எழுத்து எண்ணப்பெறாமைக்கு விதி.

இனி, இச்சூத்திரத்திற்கு எழுத்துக்களைச் சொல்லாக்கிக் கூறினும் பிறிதாகக் கூறினும் மாத்திரை திரியாதென்று பொருள் கூறி, அகரம் என்புழியும் அ என்புழியும் ஆலம் என்புழியும் ஆ என்புழியும் ககரம் என்புழியும் க என்புழியுங் காலம் என்புழியும் கா என்புழியும் ஓசை ஒத்து நிற்குமென்றால், அது முன்னர்க் கூறிய இலக்கணங்களாற் பெறப்படுதலிற் பயனில் கூற்றமென்க.† (௨௦)

## ௫. போலி

### எழுத்துப் போலி

**௫௪. அகர இகரம் ஐகார மாகும்.**

இது, சிலவெழுத்துக்கள் கூடிச் சில வெழுத்துக்கள் போல இசைக்குமென எழுத்துப்போலி கூறுகின்றது.

இ - ள்: அகர இகரம் ஐகாரம் ஆகும்—அகரமும் இகரமுங் கூட்டிச் சொல்ல ஐகாரம்போல இசைக்கும், அது கொள்ளற்க; எ - று.

போல என்றது தொக்கது.

எ – டு: ஐவனம் அ இவனம் என வரும்.‡ ஆகுமென்றதனான் இஃது இலக்கணமன்றாயிற்று. (௨௧)

**௫௫. அகர உகரம் ஔகார மாகும்.**

இதுவும் அது.

---

*இவ்வாக்கியம் முன்னும் பின்னுங் கூறியவற்றிற்கு முரணாகக் காண்கின்றது.

†இம்மறுப்புப் பொருந்துவதன்று.

‡இனி, இந்நூற்பாவிற்கு வயிரம் - வைரம் என எடுத்துக்காட்டலும் ஒன்று.

இ - ள்: அகர உகரம் ஔகாரம் ஆகும்—அகரமும் உகரமும் கூட்டிச் சொல்ல ஔகாரம்போல இசைக்கும், அது கொள்ளற்க; எ - று.

போல என்றது தொக்கது.

எ - டு: ஔவை, அஉவை என வரும்.* (உஉ)

ருகூ. அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐ என் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்.

இதுவும் அது.

இ - ள். அகரத் திம்பர் யகரப் புள்ளியும்—அகரத்தின் பின் இகரமே யன்றி யகரமாகிய புள்ளி வந்தாலும், ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்—ஐயெனப்பட்ட நெட்டெழுத்தின் வடிவு மெய்பெறத் தோன்றும்; எ - று.

எ - டு: ஐவனம் அய்வனம் எனவரும்,† மெய் பெற என்றதனான் அகரத்தின் பின்னர் உகரமே யன்றி வகரப்புள்ளியும் ஔகாரம்போல வருமென்று கொள்க, ஔவை, அவ்வை என வரும்.‡ (உங)

ஐ ஔ குறுகுதல்

ருஎ. ஓரள பாகும் இடனுமா ருண்டே§
தேருங் காலை மொழிவயி னான.

இஃது அதிகாரத்தான் ஐகாரத்திற்கும் ஔகாரத்திற்கும் எதிரது போற்ற லென்பதனாற் செய்யுளியலை நோக்கி மாத்திரைச்சுருக்கங் கூறுகின்றது.

இ - ள்: மொழிவயினான—ஒரு சொல்லிடத்தே நின்ற ஐகார ஔகாரங்கள், தேருங்காலை—ஆராயுமிடத்து, ஓரளபாகும் இடனு மாருண்டே - ஒரு மாத்திரையாய் நிற்கும் இடமும் உண்டு; எ - று.

உம்மையான் இரண்டு மாத்திரை பெறுதலே வலிவுடைத்தாயிற்று. இடனு மென்றது, ஒரு சொல்லின் முதலிடைகடை யென்னும் மூன்றிடத்துங் குறுகும், அது செய்யுட்கண் ஓசை இடர்ப்பட்டொலிக்கு மிடத்துக் குறுகுமென்றற்கு. உரையிற்கோடலால் ஐகாரம் முதலிடை கடை யென்னும் மூன்றிடத்துங் குறுகும், ஔகாரம் முதற்கண் குறுகுமெனக் கொள்க.

---

*இந்நூற்பாவிற்கு, கவுதாரி - கௌதாரி என எடுத்துக்காட்டினும் ஆகும்.

†அய்வனம் அய்யர் என்றாற்போல்வன செய்யுளில் எதுகை நோக்கி வரும் திரிபுவடிவங்களாகும்.

‡'அவ்வை' முந்திய வடிவம். 'ஔவை' அதன்போலி.

§ஐகார ஔகாரம் குறுக்க மாத்திரை ஒன்றரை என்பர், நேமிநாதர். இது முதல் கடையிடங்கட்கேற்கும்.

எ - டு: ஐப்பசி, கைப்பை, இடையன், குவளை என வரும். 'அடைப்பையாய்கோறு' எனவும், 'புளையிளங், கொங்கையாய் வரும்' எனவும் பிறவாறும் வருவன செய்யுளியலுட் காண்க. ஔவை கௌவை என வரும். ஔகாரம் 'கொளவைநீர் வேலிகூற்று' எனத் தொடை நோக்கி குறுகினவாறுங் காண்க. தேருங்காலை யென்ற தனன் ஓரெழுத் தொருமொழியுங் குறுகும். கை, பை என வரும். (உச)

போலியில் மற்றொரு வகை

ரு௪. இகர யகரம் இறுதி விரவும்.

இதுவும் போலி கூறுகின்றது.

இ - ள்: இகர யகரம் இறுதி விரவும்—இகரமும் யகரமும் ஒரு மொழியின் இறுதிக்கண் ஓசை விரவி வரும், அவ்விகாரங் கொள்ளற்க; எ - று.

எ - டு: நாய், நாஇ எனவரும் (உரு)

௬. மொழி முதல் எழுத்துக்கள்

மொழி முதலாகும் உயிர்கள்

ருகூ. பன்னீ ருயிரும் மொழிமுத லாகும்.

இது மேல் எழுத்திறல் மொழியாமாறு உணர்த்தி அம்மொழிக்கு முதலா மெழுத்து இவை யென்பது உணர்த்துகின்றது.

இ - ள்: பன்னீருயிரும்—பன்னிரண்டு உயிரெழுத்தும், மொழிமுதல் ஆகும்—மொழிக்கு முதலாம்; எ - று.

எ - டு: அடை ஆடை இலை ஈயம் உளை ஊர்தி எழு ஏணி ஐவனம் ஒளி ஓடம் ஔவியம் என வரும். (உசு)

தனிமெய் மொழிமுத லாகாமை

௬௦. உயிர்மெய் அல்லன மொழிமுத லாகா.

இஃது உயிர்மெய் மொழிக்கு முதலாம் என்கின்றது.

இ - ள். உயிர்மெய் அல்லன மொழிமுதல் ஆகா—உயிரோடு கூடிய மெய்யல்லாதனவாகிய தனி மெய்கள் மொழிக்கு முதலாகா எ - று:

எனவே உயிரோடுகூடிய மெய்களே மொழிக்கு முதலாவன் என்றவாறும். ஈண்டு உயிர்மெய் யென்றது. வேற்றுமை நயங் கருதிற்று; ஒற்றுமை நயங்கருதின் மேலைச் சூத்திரத்து உயிரோடுகூடி ஆமென்றல் பயனின்றும். (உஎ)

பன்னீருயிருடன் மொழி முதலாதல்

௬க. கதந பமஎனும் ஆவைந் தெழுத்தும்
'எல்லா உயிரொடுஞ் செல்லுமார் *முதலே.

* ஒருகால், நாயி என்பது பண்டை வழக்கா யிருந்திருக்கலாம்.

இது மேற் பொதுவகையான் எய்துவித்த இருநாற்றிருபத்தாறு எழுத்துக்களைச் சிறப்புவகையான் வரையறுத்து எய்துவிக்கின்றது.

இ - ள்: க த ந ப ம எனும் ஆவைந்தெழுத்தும்—க த ந ப ம என்று கூறப்பட்ட அவ்வைந்து தனிமெய்யும், எல்லா உயிரொடுஞ் செல்லுமார் முதலே—பன்னிரண்டு உயிரோடும் மொழிக்கு முதலாதற்குச் செல்லும்; எ - று.

எ - டு: கலை, கார், கிளி, கீரி, குடி, கூடு, கெண்டை, கேழல், கைதை, கொண்டல், கோடை, கௌவை எனவும்; தந்தை, தாய், தித்தி, தீமை, துணி, தூணி, தெற்றி, தேன், தையல், தொண்டை, தோடு, தௌவை எனவும்; நந்து, நாரை, நிலம், நீலம், நுகம், நூல், நெய்தல், நேமி, நைவளம், நொச்சி, நோக்கம், நௌவி எனவும்; படை, பால், பிடி, பீடு, புகழ், பூமி, பெடை, பேடை, பைதல், பொன், போது, பௌவம் எனவும்; மடி, மாலை, மிடறு, மீளி, முகம், மூப்பு, மெலிவு, மேனி, மையல், மொழி, மோத்தை, மௌவல் எனவும் வரும். (உ அ)

சகர மெய் ஒன்பதுயிருடன் மொழிமுதலாதல்

கூஉ. சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அ ஐ ஔ எனும் மூன்றலங் கடையே *

இதுவும் அது.

* சகரம் மொழிமுதல் வராதென்று கூறுவது தமிழுக்குச் சற்றும் பொருந்தாது. "அ ஐ ஔ என்னும் மூன்றலங் கடையே" என்னும் நூற்பா அடிக்கு "அவை ஔ என்னும் ஒன்றலங்கடையே" என்று பாட வேறுபாடும் உள்ளது. சக்கட்டி, சக்கை, சகடு, சகதி, சங்கு, சட்டென, சட்டம், சட்டகம், சட்டி, சட்டை, சடசட, சடை, சடைவு, சண்டி, சண்டு, சண்டை, சணல், சதுப்பு, சப்பட்டை, சப்பென்று, சப்பாணி, சப்பு, சப்பை, சம்பு, சம்மட்டி, சமட்டு, சமம், சமழ், சமை, சரடு, சரள், சரி, சருகு, சருச்சரை, சரேலென, சல்லடை, சல்லரி, சல்லி, சலசல, சலங்கை, சலி, சவ்வு, சவம், சவர், சவை, சளி, சளக்கென, சழக்கு, சள்ளென, சள்ளை, சளை, சற்று, சறுக்கு, சன்னம் முதலிய நூற்றுக்கு மேற்பட்ட தனித்தமிழ்ச் சொற்கள், அடிப்படையானவும், தொன்று தொட்டவும், இன்றியமையாதனவும், வேரூன்றினவும், சேரிவழக்கினவுமாயிருக்க, அவற்றைப் பிற்காலத்தனவென்று கொள்ளுவது பெருந் தவறாகும். சக்கை, சட்டி, சண்டு, சண்டை, சதைத், சப்பு, சலி, சற்று, சறுக்கு முதலிய சொற்கள் எத்துணை எளிமையும் இயல்புமானவை என்பது சொல்லாமலே விளங்கும். சண்டு சருகு முதலிய சில சொற்கள் பண்டு சகர முதலான வாயிருந்திருத்தல் கூடுமெனினும், சக்கு சடார் சடேர் சரட்டு சலசல சரேல் சவ்வு சளக்கு சளார் சள் முதலிய ஒலிக்குறிப்புச் சொற்களும், அவற்றினடிப் பிறந்தவும் துவக்கந்தொட்டுச் சகர முதலானவாயே யிருந்திருத்தல் வேண்டும். சாப்பிடு என்னும் உலகவழக் கெளிமைச் சொல் சப்பு என்னும் மூலத்தினின்றே தோன்றியதாகும். சப்பு + இடு = சப்பிடு—சாப்பிடு. சுவை என்னும் சொல்லும் சவை என்பதன் திரிபாகவே தோன்றுகின்றது. செத்தான் என்னும் இறந்தகால வினைமுற்று பண்டைக்காலத்தில் சத்தான் என்றே இருந்திருத்தல் வேண்டும். ஒ. நோ: காண்—கண்டான், நோ—நொந்தான். நெடின் முதலான

**இ - ள்: சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே—சகரமாகிய தனிமெய்யும் முற்கூறியவைபோல எல்லா உயிரோடுங் கூடி மொழிக்கு முதலாம், அ ஐ ஔ எனும் மூன்றலங்கடையே— அகர ஐகார ஔகாரமென்று சொல்லப்பட்ட மூன்று உயிரும் அல்லாத இடத்து; எ - று.**

*எ – டு: சாந்து சிற்றில் சீற்றம் சுரை சூரல் செக்கு சேவல் சொல் சோறு என வரும். சட்டி சகடம் சமழ்ப்பு என்றாற் போல்வன 'கடி சொல்லில்லை' (எச்சவியல் - ௬௬) என்பதனாற் கொள்க. சையம் சௌரியம் என்பவற்றை வடசொல்லென மறுக்க.* (௨௯)

வகர மெய் எட்டுயிருடன் மொழிமுதலாதல்

**௩௰. உ ஊ ஒ ஓ என்னும் நான்குயிர்**
**வ என் எழுத்தோடு வருத லில்லை.**

*இதுவும் அது.*

**இ - ள்:** *உ ஊ ஒ ஓ என்னும்* **நான்குயிர்—உ ஊ ஒ ஓ என்று** *சொல்லப்பட்ட* **நான்கு உயிரும், வ என்** *எழுத்தொடு* **வருதலில்லை—வ** *என்று சொல்லப்படுந்* **தனிமெய்யெழுத்தொடு** *கூடி மொழிக்கு முதலாய்* **வருதலில்லை; எ - று.**

*எனவே, ஒழிந்தன மொழிக்கு முதலாம் என்றவாறாயிற்று.*

*எ - டு: வளை வாளி விளரி வீடு வெள்ளி வேட்கை வையம் வௌவுதல் என வரும்.* (௩௦)

ஞகரமெய் மூன்றுயிருடன் மொழிமுதலாதல்

**௩௧. ஆ எ ஒ**
**என்னும் மூவுயிர் ஞகாரத் துரிய.**

**இ - ள்:** *(ஆ எ ஒ எனும் மூவுயிர்—ஆ எ ஒ என்று கூறப்படும் மூன்று உயிரும், ஞகாரத்து உரிய—ஞகார ஒற்றொடு கூடி மொழிக்கு முதலாதற்கு உரிய; எ - று.*

*இதுவும் அது.*

*எனவே, ஏனைய உரியவல்ல என்பதாம்.*

---

*வினைப்பகுதி இறந்தகால முற்றில் முதல் குறுகும்போது இனக்குறிலாய்க் குறுகுவதே மரபு, தெலுங்கிலும் சச்சினுடு (செத்தான்) சச்சிப்போயினுடு (செத்துப்போனான்) என்றே சொல்வர். மேலும் 'முழுமுதல் அரணமும்' 'வருபகை பேணார் ஆரெயிலும்' அமைத்துக் கொண்ட தொல்காப்பியர் காலத் தமிழர் சட்டிசெய்யத் தெரியாதிருந்தனர் என்பது பெருநகைக் கிடமானதாகும். சட்டி என்பது சமையலுக்கு இன்றியமையாததும், எளிநிலையானதும், மறுபெயரற்றதுமான கலவகை.*

*"சரிசமழ்ப்புச் சட்டி சருகு சவடி*
*சளிசகடு சட்டை சவளி—சவிசரடு*
*சந்து சதங்கை சழக்காதி யீரிடத்தும்*
*வந்தனவாற் சம்முதலும் வை"*

*என்பது நன்னூல் மயிலைநாதருரை மேற்கோள்.*

எ - டு: ஞாலம், ஞெண்டு, ஞொள்கிற்று எனவரும்.

'ஞமலி தந்த மனவுச்சூ லுடும்பு' (பெரும்பாண். கஙஉ) என்பது திசைச்சொல். ஞழியிற்று என்றாற் போல்வன இழிவழக்கு. (கக)

யகரம் ஆகாரத்துடனே மொழிமுதலாமெனல்

**சுரு. ஆவோ டல்லது யகர முதலாது.**

இதுவும் அது.

இ - ள்: ஆவோடு அல்லது யகரம் முதலாது—ஆகாரத்தோடு கூடி யல்லது யகரவொற்று மொழிக்கு முதலாகாது; எ - று.

எ - டு: யானை யாடு யாமம் என வரும்.

யவனர் யுத்தி யூபம் யோகம் யௌவனம் என்பன வடசொல்லென மறுக்க. (கஉ)

எல்லா எழுத்தும் முதலாம் இடம்

**சுசு. முதலா ஏன தம்பெயர் முதலும்.**

இது, மொழிக்கு முதலாகாதனவும் ஒரோவழி ஆமென்கின்றது.

இ - ள்: முதலாவும்—மொழிக்கு முதலாகா என்ற ஒன்பது மெய்யும், ஏனவும்—மொழிக்கு முதலா மென்ற ஒன்பது மெய்யும் பன்னிரண்டுயிரும், தம் பெயர் முதலும்—தத்தம் பெயர் கூறுதற்கு முதலாம்; எ - று.

முதலாவும் ஏனவும் என்ற உம்மைகள் தொக்கு நின்றன.

எ - டு: ஙகரமும் டகரமும் ணகரமும் ரகரமும் லகரமும் ழகரமும் ளகரமும் றகரமும் னகரமும் என மொழிக்கு முதலாகாத ஒன்பதும் முதலாமாறு, ஙக்களைந்தார் டப்பெரிது ணந்நன்று என வரும். இவ்வாறே ஏனையவற்றையும் ஒட்டுக. இனி ஏன என்றதனுன் கக்களைந்தார் தப்பெரிது அக்குறிது ஆநெடிது என மொழிக்கு முதலானவற்றையும் தம்பெயர் கூறுதற்கு முதலாமாறு ஒட்டிக் கொள்க. வரையறுக்கப்பட்டு மொழிக்கு முதலாகாது நின்ற மெய்க்கும் இவ்விதி கொள்க. அவை சகரத்து மூன்றும் வகரத்து நான்கும் ஞகரத்தொன்பதும் யகரத்துப் பதினொன்றுமாம். (கங)

குற்றியலுகரம் மொழி முதலாமாறு

**சுஎ. குற்றிய லுகரம் முறைப்பெயர் மருங்கின்**
**ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும்.***

* "குற்றிய லுகர..................நகரமொடு முதலும்" என ஆசிரியர் தொல்காப்பியனர் இவ்வாறு குற்றியலுகரம் மொழிக்கு முதலாமென்றாராலோ வெனின், "நுந்தை யுகரங் குறுகி மொழி முதற்கண், வந்த தெனினுயிர்மெய் யாமனைத்துஞ் - சந்திக், குயிர் முதலா வந்தணையுமெய்ப் புணர்ச்சியின்றி, மயலணையு' மென்றதனை மாற்று". இவற்றை விரித்துரைத்து விதியும் விலக்கும் அறிந்து கொள்க என்பது நன்னூல் மயிலைநாதருரை மேற்கோள் (எழு. கO௬).

இஃது எழுத்துக்களை மொழிக்கு முதலாமாறு கூறி முறையே குற்றியலுகரம் மொழிக்கு முதலாமாறு கூறுகின்றது.

இ - ள்: குற்றியலுகரம் முறைப்பெயர் மருங்கின்—குற்றிய லுகரமானது முன்னிலை முறைப் பெயரிடத்து, ஒற்றிய நகர மிசை நகரமொடு முதலும்- தனிமெய்யாய் நின்ற நகரத்துமே னின்ற நகரத் தோடு கூடி மொழிக்கு முதலாம்; எ - று.

நுந்தை என வரும். இதனானே முறைப்பெயர் இடமும் நகரம் பற்றுக்கோடுமாயிற்று. ஈண்டுக் குற்றியலுகரம் மெய்ப்பின்னர் நின்றதேனும் ஒற்றுமை நயத்தான் மொழிக்கு முதலென்றார், இது செய்யுளியலை நோக்கிக் கூறியதாயிற்று. (௬௭)

### மொழிமுதற் குற்றியலுகரத்தின் இயல்பு

**௬௮. முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅ
தப்பெயர் மருங்கின் நிலையிய லான.**

இது மேலதற்கோர் புறனடை கூறுகின்றது.

இ - ள்: அப்பெயர் மருங்கின் நிலையியலான—அம்முறைப் பெயரிடத்தே நிற்றலிலக்கணமான குற்றியலுகரம், முற்றிய லுகர மொடு பொருள் வேறுபடாஅ—இதழ் குவித்துக் கூறும் வழி வரும் முற்றுகரத்தோடு அவ்விடத்துக் குற்றுகரம் பொருள் வேறு படுமாறு போல ஈண்டுப் பொருள் வேறுபட்டு நில்லாது; எ - று.

எ - டு: காது, கட்டு, கத்து, முருக்கு, தெருட்டு என்பன முற்று கரமும் குற்றுகரமுமாய்ப் பொருள் வேறுபட்டு நின்றாற்போல* நுந்தையென்று இதழ் குவித்து முற்றக் கூறியவிடத்தும் இதழ் குவியாமற் குறையக் கூறியவிடத்தும் ஒரு பொருளே தந்தவாறு காண்க. நுந்தாய் என்பதோ வெனின், அஃது இதழ் குவித்தே கூற வேண்டுதலிற் குற்றுகரமன்று. இயலென்றதனான் இடமும் பற்றுக் கோடும் இரண்டிற்கும் வேறுபாடின்றென்று கொள்க. இதனானே மொழிக்கு முதலாமெழுத்துத் தொண்ணூற்று நான்கென்று உணர்க. (௬௮)

## எ. மொழியிறுதி எழுத்துக்கள்

### மொழியீறாகும் உயிர்கள்

**௬௯. உயிர்ஔ எஞ்சிய இறுதி யாகும்.**

இஃது உயிர் மொழிக்கு ஈறாமாறு கூறுகின்றது

இ - ள்: உயிர் ஔ எஞ்சிய இறுதி யாகும்—உயிர்களுள் ஔகாரம் ஒழிந்தன வெல்லாம் மொழிக்கு ஈறாம்; எ - று

* காது கட்டு முதலியவை முற்றுகரமாயின் ஏவல் வினையும் குற்றுகரமாயின் தொழிற் பெயருமாகும்.

எனவே ஔகாரவுயிர் ஈருகாதாயிற்று. இஃது உயிர்க்கும் உயிர் மெய்க்கும் பொது.

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ என இவை தாமே ஈருயின. ஆஅ ஈஇ ஊஉ ஏஎ ஓஒ எனக் குறிலைந்தும் அளபெடைக்கண் ஈருயின. கா தீ பூ சே கை கோ எனவும், விள கிளி மழு எனவும் வரும். எகர ஒகரம் மேலே விலக்குப, 'அளபெடை மிகூஉ மிகர விறுபெயர்' (சொல். ௧௨௫.) என்பாராதலின். அளபெடைப்பின் வந்த குற்றெழுத்துங் கொள்வர் ஆசிரியரென்று உணர்க. நெட்டெழுத்தேழும் முதன் மொழியாம் என்னுந் துணியே முன்னுணர்த்துதலின் ஈண்டு அவை ஈருமென்றும் உணர்த்தினர். (௬௬)

ஔ ஈருகும் இடம்

**௭௦. கவவோ டியையின் ஔவு மாகும்.**

இஃது ஈருகாதென்ற ஔகாரம் இன்னுழியாம் என்கின்றது.

**இ - ள்:** ஔவும்—முன் ஈருகாதென்ற ஔகாரமும், கவ்வோடு இயையின் ஆகும்—ககர வகரத்தோடு இயைந்த வழி ஈரும்; எ - று.

**எ - டு:** கௌ வௌ என வரும். எனவே, ஒழிந்த உயிரெல்லாந் தாமே நின்றும் பதினெட்டு மெய்களோடுங் கூடி நின்றும் ஈருதல் இதனாற் பெற்றாம். இதனானே ஔகாரம் ஏனை மெய்க்கண் வாராதென விலக்குதலும் பெற்றாம். உயிர் நகரத்தோடு கூடி மொழிக்கு ஈருமென்பது இதனால் எய்திற்றேனும் அது மொழிக்கு ஈருகாமை தந்து புணர்ந்துரைத்தலான் உணர்க.* இது வரையறை கூறிற்று. (௬௭)

எகர வுயிர் மெய்யோ டீருகாமை

**௭௧. எ என வருமுயிர் மெய்யீ றாகாது.**

இஃது எகரந்தானே நின்றவழி யன்றி மெய்யோடு கூடினால் ஈருகாதென விலக்குகின்றது.

**இ - ள்:** எ என வரும் உயிர் மெய் ஈருகாது—எ என்று கூறப்படும் உயிர் தானே ஈருவதன்றி யாண்டும் மெய்களோடு இயைந்து ஈருகாது; எ - று. (௬௮)

ஒகரம் நகரமெய் ஒன்றுடன் ஈருதல்

**௭௨. ஒவ்வும் அற்றே நவ்வலங் கடையே.**

இது விலக்கும் வரையறையுங் கூறுகின்றது.

**இ - ள்:** ஒவ்வும் அற்று—ஒகரமும் முன் சொன்ன எகரம் போலத் தானே ஈருவதன்றி மெய்களோடு இயைந்து ஈருகாது, நவ்வலங்கடையே—நகரவொற்றோடு அல்லாத இடத்தில்; எ - று.

* தந்து புணர்ந்துரைத்தல்—உள்பொருளல்லதனை உளபோலத் தந்து கூட உணர்த்தல். இங்கு, உயிர் நகரத்தோடு கூடி மொழிக்கு ஈருவது போலக் கூறியது தந்து புணர்ந்துரைத்தல்.

எ - டு: நொ கொற்றா 'நொ அலையனின்னாட்டைநீ' என வரும். (௩௧)

ஏ, ஓ ஞகர மெய்யுடனீருகாமை

**எ௩. ஏ ஓ எனும் உயிர் ஞகாரத் தில்லை.**

இது சில உயிர் சில உடலோடேறி முடியாதெனா விலக்குகின்றது.

இ - ள்: ஏ ஓ எனும் உயிர் ஞகாரத்தில்லை—ஏ ஓ என்று கூறப்பட்ட இரண்டுயிருந் தாமே நின்றும் பிறமெய்களோடு நின்றும் ஈருதலன்றி ஞகாரத்தோடு ஈருத லில்லை; எ - று.

எனவே, ஏனையுயிர்கள் ஞகாரத்தோடு ஈருமென்முராயிற்று.

எ - டு: உரிஞ, உரிஞா, உரிஞி, உரிஞீ, உரிஞு, உரிஞூ இவை எச்சமும் வினைப்பெயரும் பற்றி வரும். அஞ்ஞை மஞ்ஞை இவை பெயர்; ஏனை யைந்தும் விலக்கப்பட்டன. உரிஞோ என்பது 'கடி சொல்லில்லை' என்பதனாற் கொள்க. (௪0)

உ, ஊ நகர வகரங்களுடன் ஈருகாமை

**எச. உ ஊ காரம் நவவோடு நவிலா.**

இதுவும் அது.

இ - ள்: உ ஊகாரம்—உகர ஊகாரங்கள் தாமே நின்றும் பிற மெய்களோடு நின்றும் பயில்வதன்றி, நவவொடு நவிலா - நகர வொற்றோடும் வகரவொற்றோடும் பயிலா; எ - று.

எனவே, ஏனை யுயிர்கள் நகர வகரங்களோடு வருமாயின.

எ - டு: நகரம் பொருந என வினைப்பெயராகியும், நா நீ நே எனப் பெயராகியும் நை நொ நோ என வியங்கோளாகியும் வரும். பொருநை என்றுங் காட்டுப. வகரம் உவ வே என வியங்கோளாயும், உவா செவ்வி வீ வை எனப் பெயராயும் வரும். ஒருவ ஒருவா ஒருவி ஒருவீ ஔவை என்றுங் காட்டுப. ஈண்டு விலக்காத ஏனை யுயிர்க ளோடு வந்த நகர வகரங்கள் அக்காலத்து வழங்கினவென்று கோடும், இவ்விதியால் இனி நவிலா என்றதனானே வகர வுகரம் கதவு துரவு குவவு புணர்வு நுகர்வு நொவ்வு கவ்வு எனப் பயின்று வருதலுங் கொள்க. (௪க)

சகர வுகரம் இருமொழிக்கு ஈருதல்

**எரு. உச்ச காரம் இருமொழிக் குரித்தே.**

இது சகார உகாரம் பலசொற்கு ஈருய் வாராது இருசொற்கு ஈரு மென்று வரையறை கூறுகின்றது.

இ - ள்: உச்சகாரம் - உகரத்தோடு கூடிய சகாரம், இரு மொழிக்கே உரித்து—இரண்டு மொழிக்கே ஈரும்; எ - று.

எனவே, பன்மொழிக்கு ஈருகா யென்றவாருயிற்று. உரித்தே யென்னும் ஏகாரம் மொழிக்கே யெனக் கூட்டுக.

எ - டு: உசு; இஃது உளுவின் பெயர். முசு; இது குரங்கினுள் ஒரு சாதி. பசு என்பதோவெனின், அஃது ஆரியச் சிதைவு. கச்சு குச்சு என்றாற் போல்வன குற்றுகரம். உகரம் ஏறிய சகரம் இரு மொழிக்கு ஈறு மெனவே ஏனை உயிர்கள் ஏறிய சகரம் பன்மொழிக்கு ஈறுமாறாயிற்று. உச உசா விசி சே கச்சை சோ எனப் பெயராயும், துஞ்ச எஞ்சா எஞ்சி மூசி மூசு என எச்சமாயும் வரும். அச்சோ என வியப்பாயும் வரும். இன்னும் இவை வழக்கின்கட் பலவாமாறும் உணர்க. (௭௫)

பகர உகரம் ஒரு மொழிக்கே ஈறுதல்

**௭௬. உப்ப காரம் ஒன்றெனை மொழிப**
**இருவயின் நிலையும் பொருட்டா கும்மே.**

இஃது ஒருசொல் வரையறையும் அஃது ஓசை வேற்றுமையால் இரு பொருள் தருமெனவுங் கூறுகின்றது.

இ - ள்: உப்பகாரம் ஒன்றெனை மொழிப— உகரத்தோடு கூடிய பகரம் ஒரு மொழிக்கல்லது பன்மொழிக்கு ஈறுகாதென்று கூறுவர் புலவர், இருவயினிலையும் பொருட்டாகும்மே - அதுதான் தன்வினை பிறவினை யென்னும் இரண்டிடத்தும் நிலைபெறும் பொருண்மைத்தாம்; எ - று.

எ - டு: தபு என வரும். இது படுத்துக் கூறநீ சாவெனத் தன் வினையாம். எடுத்துக்கூற நீ ஒன்றனைச் சாவப்பண்ணெனப் பிறவினை யாம்.* உப்பு கப்பு என்றாற் போல்வன குற்றுகரம். உகரத்தோடு கூடிய பகரம் ஒன்றெனவே ஏனை உயிர்களோடு கூடிய பகரம் பன் மொழிக்கு ஈறாய்ப் பல பொருள் தரும் என்றாராயிற்று. மறந்தப துப்பா என எச்சமாயும், நம்பி செம்பூ பே பெதும்பை எனப் பெயராயும், போ என ஏவலாயும் வரும். இவற்றைப் பிற சொற் களோடும் ஒட்டுக. ஏனை ஈகார பகரம் இடக்கராய் வழங்கும். (௭௬)

ஈறுகா உயிர்மெய் இன்னவகையில் ஆமெனல்

**௭௭. எஞ்சிய வெல்லாம் எஞ்சுதல் இலவே.**

இது முன்னர் மொழிக்கு ஈறும் என்றவற்றுள் எஞ்சி நின்றன மொழிக்கு ஈறுமாறும் மொழிக்கு ஈறுகா என்றவை தம்பெயர் கூறுங் கான் மொழிக்கு ஈறுமாறுங் கூறுகின்றது.

இ - ள். எஞ்சிய வும் எஞ்சுத லில—'கவ்வொடியையின்' (எழு - ௭௦) என்னுஞ் சூத்திரத்தாற் பதினேருயிரும் பதினெட்டு மெய்க்கண்ணும் வந்து மொழிக்கு ஈறு மென்ற பொது விதியிற் பின்னை விசேடித்துக் கூறியவற்றை ஒழிந்தனவும் மொழிக்கு ஈறுதற்கு ஒழிவில, எல்லாம் எஞ்சுதலில—மொழிக்கு ஈறுகா தென்ற உயிர்மெய்களுந் தம்பெயர் கூறும்வழி ஈறுதற்கு ஒழிவில; எ - று.

---

*இதனால், ஆங்கிலத்திற்போல் பண்டைத்தமிழிலும் அசையழுத்தம் (accent) ஒரு சொல்லின் வகையையும் பொருளையும் வேறுபடுத்திற்றென்பதை அறியலாம்.

எல்லா மென்றது சொல்லினெச்சஞ் சொல்லியாங் குணர்த்தல் என்னும் உத்தி.* உம்மை விரிக்க ஈண்டு எஞ்சிய வென்றது முன்னர் உதாரணங் காட்டிய ஞகரமும் நகரமும் வகரமுஞ் சகரமும் பகரமும் ஒரு மொழிக்கும் ஈறாகாத ஙகரமும் ஒழிந்த பன்னிரண்டு மெய்க்கண்ணும் எகரமும் ஒகரமும் ஔகாரமும் ஒழிந்த ஒன்பதுயிரும் ஏறி மொழிக்கும் ஈறாய் வருவனவற்றையென்று உணர்க.

**எ - டு.** வருக புகா வீக்கி புகீ செகு புகூ ஈங்கே மங்கை எங்கோ எனவும், கட்ட கடா மடி மடீ மடு படூ படை எனவும் (இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறி வருவன உளவேற் கொள்க), மண்ண எண்ணா கண்ணி உணீ கணு நண்ணூ மண்ணை எனவும் (இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறி வருவன உளவேற் கொள்க), அத புதா பதி வதீ அது கைதூ தந்தை அந்தோ எனவும் (இதற்கு ஏகாரம் ஏறி வருவன உளவேற் கொள்க), கம நென்மா அம்மி மீ செம்மு கொண்மூ யாமை காத்தும் வம்மோ எனவும் (இதற்கு ஏகாரம் ஏறிவருவன உளவேற் கொள்க), செய காயா கொய்யூ ஐயை ஐயோ எனவும் (இதற்கு இகர ஈகார உகர ஏகாரங்கள் ஏறி வருவன உளவேற் கொள்க), வர தாரா பரி குரீ கரு வெரூ நாரை எனவும் (இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறி வருவன உளவேற் கொள்க), சில பலா வலி வலீ வலு கொல்லூ வல்லே கலை எனவும் (இதற்கு ஓகாரம் ஏறி வருவன உளவேற் கொள்க), தொழ விழா நாழி வழீ மழு எழூ தாழை எனவும் (இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறி வருவன உளவேற் கொள்க), உள உள்ளா வெள்ளி குளீ உளு எள்ளூ களை எனவும் (இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறி வருவன உளவேற் கொள்க), கற்ற கற்றா உறி உறீ மறு உறூ கற்றை எற்றோ எனவும் (இதற்கு ஏகாரம் ஏறி வருவன உளவேற் கொள்க), நன கனா வன்னி துனீ முன்னு துன்னூ என்னே அன்னை அன்னோ எனவும் வரும் இவற்றுட் பெயராயும் வினையாயும் வருவன உணர்க. இவற்றுட் ககர னகரங்கள் விலக்காத ஒன்பதும் வந்தன. ஆக ஈறு நூற்றுநாற்பத்து மூன்றும் உதாரணமில்லாத பதினெட்டும் ஆக நூற்றறுபத்தொன்று.† ஙகரம் மொழிக்கு ஈறாகாதென்பது பெரும்பான்மையாதலிற் கூறிற்றிலர். இனி ஙகரமும் ஔகாரமும் ஏறாத மெய் பதினைந்தும் எகரமும் ஒகரமும் ஏகாரமும் ஓகாரமும் உகர

---

*"சொல்லி னெச்சஞ்சொல்லியாங் குணர்த்தல்"—சொல்லினாற்றலாற் பெறப்படும் பொருளையும் எடுத்தோதியாங்குக் கொள்ள வைத்தல்; அஃது "எஞ்சியவெல்லா மெஞ்சுத லிலவே" (எழு. ௭௭) என்புழி, எல்லா மென்பதனை எச்சப்படுத்தற்கு ஆகாதன இருபத்தாறு கொண்டவழியும் அதனை எடுத்தோதிச் சிறப்பின்றென்று கொள்ளற்க என்பது (பேராசிரியம்.) .

†"இதற்கு ஏகார ஓகாரங்கள் ஏறிவருவன உளவேற்கொள்க" எனப் பல மெய்க்குக் கூறியிருப்பதனாலும், என்னே அன்னோ, ஐயோ என்ற வடிவங்கள் காட்டாகக் கொள்ளப்பட்டிருப்பதனாலும்? அடே, வீணே, ஐயே, எற்றே, அரோ முதலிய வடிவங்கள் வழக்கிலிருப்பதனாலும். காட்டுக் காட்டப்படாத ஏகார ஓகார உயிர் மெய்யீறுகட்கெல்லாம் காட்டுண்டெனஅறிக.

நச்சினார்க்கினியர் ஈற்றின் மொத்தத் தொகை கூறுமிடத்து "ஆம் ஈறு நூற்று நாற்பத்து மூன்றும் உதாரணமில்லாத பதினெட்டுக ஆக" என்பது ஆக ஈறு நூற்று நாற்பத்தொன்றும் உதாரணமில்லாத இருபதும் என்றிருத்தல்வேண்டும்.

மும் ஊகாரமும் ஏறாத மெய்களும் தம் பெயர் கூறுங்கால் மொழிக்கு ஈறுமாறு, நப்பெரிது சௌஅழகிது ஞௌதீது என வரும். ஏனையவற்றோடும் இவ்வாறே ஒட்டுக. கெக்குறைந்தது கொத்தீது ஙெவழகிது ஙொத்தீது நுந்நன்று நூப்பெரிது வுச்சிறிது வூப்பெரிது என. எல்லாவற்றையும் இவ்வாறே ஒட்டுக. இன்னும் எல்லாம் என்றதனானே கந்நன்று ஆநுன்றுஎன மொழிக்கு ஈறுவனவுந் தம்பெயர் கூறும் வழி ஆமென்று கொள்க. (சச)

மொழியீறும் மெய்கள்

௭௮. ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்னும்
அப்பதி னொன்றே புள்ளி யிறுதி.

இது முன்னர் உயிர் ஈறுமாறு உணர்த்திப் புள்ளிகளுள் ஈறுவன இவை யென்கின்றது.

இ - ள்: ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்னும் அப்பதினொன்றே புள்ளியிறுதி—ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள வென்று கூறப்பட்ட பதினொன்றுமே புள்ளிகளில் மொழிக்கு ஈறுவன; எ - று.

உ - டு உரிஞ், மண், பொருந், திரும், பொன், வேய், வேர், வேல், தெவ், வீழ், வேள் என வரும். னகரம் ஈற்று வையாது மகரத்தோடு வைத்தது வழக்குப் பயிற்சியும் மயக்க இயைபும் நோக்கி. (சரு)

நகரமெய் இருமொழிக்கு ஈறுதல்

௭௯. உச்ச காரமொடு நகாரஞ் சிவணும்.

இது மேற் பொதுவகையான் ஈறுவனவற்றுள் வரையறைப் படுவது இது வென்கின்றது.

இ - ள்: உச்சகாரமொடு நகாரஞ் சிவணும்—உகாரத்தோடு கூடிய சகரம் இருமொழிக் கீறுயவாறு போல நகரவொற்றும் இரு மொழிக்கல்லது ஈறுகாது; எ - று.

உ - டு: பொருந், வெரிந் என வரும். (சசு)

ஞகரமெய் ஒரு மொழிக்கே ஈறுதல்

௮௦. உப்ப காரமொடு ஞகாரையும் அற்றே
அப்பொருள் இரட்டா திவணை யான.

இதுவும் அது.

இ - ள்: உப்பகாரமொடு ஞகாரையும் அற்றே—உகரத்தோடு கூடிய பகரத்தோடு ஞகரமும் ஒத்து ஒரு மொழிக்கு ஈறும், இவணையான அப்பொருள் இரட்டாது—இவ்விடத்து ஞகாரத்தின் கண்ணுன அப்பொருள் பகரம்போல இருபொருட் படாது; எ - று.

உ - டு: உரிஞ் என வரும். ஞகாரம் ஒரு மொழிக்கு ஈறுகலின் நகரத்தின் பின் கூறினார். இவணை யென்னும் ஐகாரம் அசை. (சஎ)

வகர மெய் நான்மொழிக்கு ஈறுதல்

**அக. வகரக் கிளவி நான்மொழி ஈற்றது.**

இதுவும் அது.

இ - ள்: வகரக் கிளவி நான்மொழி ஈற்றது—வகரமாகிய எழுத்து நான்கு மொழியின் ஈற்றதாம்; எ - று.

எ – டு: அவ் இவ் உவ் தெவ் என வரும். கிளவி ஆகுபெயர். எழுத்துக் கிளவியாதற்கு உரித்தாமாதலின். (சஅ)

அஃறிணைக்கண் னகரவீற்று மொழிகள் ஒன்பது

**அஉ. மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த
னகரத் தொடர்மொழி ஒன்பஃ தென்ப
புகரறக் கிளந்த அஃறிணை மேன.***

இதுவும் அது; வரையறை கூறுதலின்.

இ - ள்: புகரறக் கிளந்த அஃறிணை மேன—குற்றமறச் சொல்லப்பட்ட அஃறிணைப்பெயரிடத்து, மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த னகரத் தொடர்மொழி ஒன்பஃது என்ப—மகர ஈற்றுத் தொடர்மொழியோடு மயங்கா தென்று வரையறைப் பட்ட னகர ஈற்றுத் தொடர்மொழி ஒன்பதென்று கூறுவர் ஆசிரியர்; எ - று.

ஆய்தம் விகாரம்.

எ - டு: எகின், செகின், விழன், பயின், குயின், அழன், புழன், கடான், வயான் என வரும். எகின் எகினம் என்றாற்போல வேறோர் பெயராய்த் திரிவனவும் சந்தியால் திரிவனவுமாய் ஈற்றுள் திரிபுடையன களைந்து ஒன்பதும் வருமேற் கண்டுகொள்க. நிலம் நிலன், பிலம் பிலன், கலம் கலன், வலம் வலன்; உலம் உலன், குலம் குலன், கடம் கடன், பொலம் பொலன், புலம் புலன், நலம் நலன், குளம் குளன், வளம் வளன் இத்தொடக்கத்தன தம்முள் மயங்குவன வட்டம் குட்டம், ஓடம் பாடம் இவைபோல்வன மயங்காதன. வரையறை னகரத்தின் மேற் செல்லும். மயங்காவெனவே மயக்கமும் பெற்றாம். (சக)

மொழிமரபு முற்றிற்று.

---

* "மகரத் தொடர்மொழி...அஃறிணை மேன" என்று, எகின், செகின், எயின், வயின், குயின், அழன், புழன், புலான், கடான் என வரும் ஒன்பதும் மயங்காதன வெனக் கொள்ளின், பலியன், வலியன், வயான், கயான், அலவன், கலவன், கழுமன், மறையன், செகிலன் முதலாயின மயங்கப்பெறுவென மறுக்க" என்பது நன்னூல் மயிலை நாதருரை (நூ. 121).

## ங. பிறப்பியல்

*[எழுத்துக்களின் பிறப்பிலக்கணம் உணர்த்துவது]*

### க. எழுத்துக்கள் பொதுவாகப் பிறக்குமாறு

**அங. உந்தி முதலா முந்துவளி தோன்றித்
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇப்
பல்லும் இதழும் நாவும் மூக்கும்
அண்ணமும்* உளப்பட எண்முறை நிலையான்
உறுப்புற் றமைய நெறிப்பட நாடி
எல்லா எழுத்தும் சொல்லுங் காலைப்
பிறப்பின் ஆக்கம் வேறுவே றியல
திறப்படத் தெரியுங் காட்சி யான.**

*என்பது சூத்திரம். இவ்வோத்து எழுத்துக்களினது பிறப்பு உணர்த்துதலிற் பிறப்பிய லென்னும் பெயர்த்தாயிற்று. சார்பிற் றோற்றத்து எழுத்துந் தனிமெய்யும் மொழியி னன்றி உணர்த்தலாகாமையின் அவை பிறக்கும் மொழியை மொழிமரபிடை உணர்த்திப் பிறப்பு உணர்த்த வேண்டுதலின் நூன்மரபின் பின்னர் வையாது இதனை மொழிமரபின் பின்னர் வைத்தார்.*

*இச்சூத்திரம் எழுத்துக்களினது பொதுப்பிறவி இத்துணை நிலைக்களத்து நின்று புலப்படு மென்கின்றது.*

**இ-ள்:** *எல்லா எழுத்தும் பிறப்பின் ஆக்கஞ் சொல்லுங் காலை—தமிழெழுத்து எல்லாவற்றிற்கும் ஆசிரியன் கூறிய பிறப்பினது தோற்றரவை யாங் கூறுமிடத்து, உந்தி முதலாத் தோன்றி முந்து வளி—கொப்பூழடியாகத் தோன்றி முந்துகின்ற உதானனென்னுங் காற்று, தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇ—தலையின்கண்ணும் மிடற்றின்கண்ணும் நெஞ்சின்கண்ணும் நிலைபெற்று, பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான் உறுப்புற்று--பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமு மென்ற ஐந்துடனே அக்காற்று, நின்ற தலையும் மிடறும் நெஞ்சுங் கூட எட்டாகிய முறைமையையுடைய தன்மையோடு கூடிய உறுப்புக்களோடு ஒன்றுற்று, அமைய—இங்ஙனம் அமைதலானே, வேறு வேறு இயல—அவ்வெழுத்துக்களது தோற்றரவு*

---

** எழுத்தைப் பிறப்பித்தற்கு இடமும் உறுப்பும் என இரண்டு வேண்டும். எழுத்தின் இனத்தன்மையைத் தோற்றும் நெஞ்சு தொண்டை முதலியவை இடம்; தனித்தனி எழுத்தைத் தோற்றும் நா பல் முதலியவை உறுப்பு. மூக்கைத் தொல்காப்பியர் உறுப்பென்றார்; நன்னூலார் இடமென்றார். இருவரும் தலையை ஓர் இடமாகக் கொண்டனர். இஃது உடல் நாலுக்கும் ஒலி நாலுக்கும் பொருந்துவதாய்த் தோன்றவில்லை.*

வேறு வேறு புலப்பட வழங்குதலையுடைய, காட்சியான நாடி. நெறிப்பட—அதனை யறிவான் ஆராய்ந்து அவற்றின் வழியிலே மனம்பட, திறப்படத் தெரியும்—அப்பிறப்பு வேறுபாடுகளெல்லாங் கூறுபட விளங்கும்; எ - று.

சொல்லுங்காலை வளி நிலைபெற்று உறுப்புக்களுற்று இங்ஙனம் அமைதலானே அவை வழங்குதலையுடைய; அவற்றின் வழக்கம் அவற்றின் வழியிலே மனந் திறப்படத் தெரியுமெனக் கூட்டி உரைத்துக் கொள்க. இங்ஙனம் கூறவே முயற்சியும் முயலுங் கருத்தாவும் உண்மை பெற்றும். (க)

## உ. உயிரெழுத்துக்கள் பிறக்குமாறு

### எல்லா உயிர்களும் பொதுவாகப் பிறக்கும் வகை

அ௪. அவ்வழிப்
பன்னீ ருயிருந் தந்நிலை திரியா
மிடற்றுப் பிறந்த வளியின் இசைக்கும்.

இஃது உயிரெழுத்திற்குப் பொதுப்பிறவி கூறுகின்றது.

இ - ள்: பன்னீருயிரும் தந்நிலை திரியா—பன்னிரண்டு உயிருந் தத்தம் மாத்திரை திரியாவாய், அவ்வழிப் பிறந்த—அவ்வுந்தியிடத்துப் பிறந்த, மிடற்று வளியின் இசைக்கும்—மிடற்றின் கண் நிலைபெற்ற காற்றான் ஒலிக்கும்; எ - று.

எனவே குற்றியலிகரமும் குற்றியலுகரமும் தந்நிலை திரியுமென்றாராயிற்று. இவ்வெழுத்துக்களைக் கூறி உணர்க. (உ)

### அ, ஆ, பிறக்குமாறு

அ௫. அவற்றுள்,
அ ஆ ஆயிரண் டங்காந் தியலும்.

இஃது அவ்வுயிர்களுட் சிலவற்றிற்குச் சிறப்புப் பிறவி கூறுகின்றது.

இ - ள்: அவற்றுள்—முற்கூறிய பன்னிரண்டு உயிர்களுள், அ ஆ ஆயிரண்டு—அகர ஆகாரங்களாகிய அவ்விரண்டும், அங்காந்து இயலும்—அங்காந்து கூறும் முயற்சியாற் பிறக்கும்; எ - று.

முயற்சி உயிர்க்கிழவன்கண்ணது. அ ஆ என இவற்றின் வேறுபாடு உணர்க. (௩)

### இகரம் முதலியன பிறக்குமாறு

அ௬. இ ஈ எ ஏ ஐயென இசைக்கும்
அப்பால் ஐந்தும் அவற்றோ ரன்ன
அவைதாம்
அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய.

இதுவும் அது.

இ - ள்: இ ஈ எ ஏ ஐ என இசைக்கும் அப்பாலைந்தும்— இ ஈ எ ஏ ஐ என்று கூறப்படும் அக்கூற்று ஐந்தும், அவற்றோ ரன்ன—அகர ஆகாரங்கள் போல அங்காந்து கூறும் முயற்சியாற் பிறக்கும், அவைதாம் அண்பல் முதல் நா விளிம்பு உறல் உடைய —அவை தாம் அங்ஙனம் பிறக்குமாயினும் அண்பல்லும் அடிநா விளிம்பும் உறப் பிறக்கும் வேறுபாடுடைய; எ - று.

அண்பல்: வினைத்தொகை. எனவே, நாவிளிம்பு அணுகுதற்குக் காரணமான பல்லென்று அதற்கோர் பெயராயிற்று, இ ஈ எ ஏ ஐ என இவற்றின் வேறுபாடு உணர்க. (௭)

உகர முதலியன பிறக்குமாறு

அஎ. உ ஊ ஒ ஓ ஔ என இசைக்கும்
அப்பால் ஐந்து இதழ்குவிந் தியலும்.

இதுவும் அது.

இ - ள்: உ ஊ ஒ ஓ ஔ என இசைக்கும் அப்பாலைந்தும்— உ ஊ ஒ ஓ ஔ என்று சொல்லப்படும் அக்கூற்று ஐந்தும், இதழ குவிந்து இயலும்—இதழ் குவித்துக் கூறப் பிறக்கும்; எ - று.

உ ஊ ஒ ஓ ஔ என இவற்றின் வேறுபாடு உணர்க. (௮)

உயிர்க்கும் மெய்க்கும் ஒருபோது விதி

அஅ. தத்தம் திரிபே சிறிய என்ப.*

இது முற்கூறிய உயிர்க்கும் மேற்கூறும் மெய்க்கும் பொது விதி கூறிச் சிங்கநோக்காகக் கிடந்தது.

இ - ள்: தத்தந் திரிபே சிறிய என்ப—உயிர்களும் மெய் களும் ஒவ்வொரு தானங்களுட் பிறப்பனவற்றைக் கூட்டிக் கூறினே மாயினும் நுண்ணுணர்வான் ஆராயுமிடத்துத் தமமுடைய வேறு பாடுகள் சிறியவாக உடைய என்று கூறுவர் புலவர்; எ - று.

அவை எடுத்தல் படுத்தல் நலிதல் விலங்கல் என்றவாற்றானுந் தலைவளி* நெஞ்சுவளி மிடற்றுவளி மூக்குவளி என்றவாற்றானும் பிறவாற்றானும் வேறுபடுமாறு நுண்ணுணர்வுடையோர் கூறி உணர்க. ஐ விலங்கலுடையது.† வல்லினந் தலைவளியுடையது‡ மெல்லினம் மூக்குவளியுடையது. இடையினம் மிடற்றுவளி யுடையது. ஏனையவுங் கூறிக் கண்டு உணர்க. (௯)

---

*தலைவளி எழுத்திற்குப் பயன்படுவதாய்த் தெரியவில்லை.

† விலங்கல்—நலிதலை அடுத்த படுத்த லொலிகளைச் சேர்த்துக் கூறும் போது உள்ள ஓசை.

‡வல்லினம் நெஞ்சுவளியுடையதென்பதே பொருத்தமானது.

## ௩. மெய்யெழுத்துக்கள் பிறக்குமாறு

**க, ங**

**௮௯. ககார ஙகாரம் முதல்நா அண்ணம்.**

*இது மெய்களுட் சிலவற்றிற்குப் பிறப்புக் கூறுகின்றது.*

*இ - ள்: ககாரம் ஙகாரம் முதல் நா அண்ணம்—ககாரமும் ஙகாரமும் முதல் நாவும் முதல் அண்ணமும் உறப் பிறக்கும்; எ - று.*

*உயிர்மெய்யாகச் சூத்திரத்துக் கூறினுந் தனிமெய்யாகக் கூறிக் காண்க. முதலை இரண்டிற்குங் கூட்டுக. க ங என இவற்றின் வேறுபாடு உணர்க.* (எ)

**ச, ஞ**

**௯௦. சகார ஞகாரம் இடைநா அண்ணம்.**

*இதுவும் அது.*

*இ - ள்: சகார ஞகாரம இடைநா அண்ணம்—சகாரமும் ஞகாரமும் இடைநாவும் இடையண்ணமும் உறப் பிறக்கும்; எ-று.*

*இடையை இரண்டிற்குங் கூட்டுக. ச ஞ என இவற்றின் வேறுபாடு உணர்க.* (அ)

**ட, ண**

**௯௧. டகார ணகாரம் நுனிநா அண்ணம்.**

*இதுவும் அது.*

*இ - ள்: டகார ணகாரம் நுனி நா அண்ணம்—டகாரமும் ணகாரமும் நுனிநாவும் நுனியண்ணமும உறப் பிறக்கும்; எ - று.*

*நுனியை இரண்டிற்குங் கூட்டுக. ட ண என இவற்றின் வேறுபாடு உணர்க.* (௯)

**மேலனவற்றிற்கு ஓர் ஐயந்தீர்த்தது**

**௯௨. அவ்வா றெழுத்தும் மூவகைப் பிறப்பின.**

*இது மேலனவற்றிற்கோர் ஐயம் அகற்றியது.*

*இ - ள்: அவ்வாறெழுத்தும் மூவகைப் பிறப்பின்—அக் கூறப் பட்ட ஆறெழுத்தும் மூவகையாகிய பிறப்பினை உடைய; எ - று.*

*எனவே, அவை ககாரம் முதல் நாவினும் ஙகாரம் முதல் அண்ணத்தினும் பிறக்குமென்று இவ்வாறே நிரனிறைவகையான் அறுவகைப் பிறப்பின அல்ல என்றார்.* (௧௦)

**த, ந**

**௯௩. அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கின்**
**நாநுனி பரந்து மெய்யுற ஒற்றத்**
**தாம்இனிது பிறக்குந் தகார நகாரம்.**

இது மெய்களுட் சிலவற்றிற்குப் பிறவி கூறுகின்றது.

இ - ள்: அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கில்—அண்ணத்தைச் சேர்ந்த பல்லின தடியாகிய இடத்தே, நாநுனி பரந்து மெய்யுற ஒற்ற—நாவினது நுனி பரந்து சென்று தன் வடிவு மிகவும உறும்படி சேர, தகார நகாரந் தாம இனிது பிறக்கும்—தகார நகார மென்றவை தாம் இனிதாகப் பிறக்கும்; எ - று.

த ந என இவற்றின் வேறுபாடு உணர்க. முன்னர் உறுப்புற்று அமைய என்று கூறி ஈண்டு மெய்யுற ஒற்ற என்றார். சிறிது ஒற்றவும் வருடவும் பிறப்பன* உளவாகலின். (கூ)

ற, ன

கூச. அணரி நுனிநா அண்ணம் ஒற்ற
றஃகான் னஃகான் ஆயிரண்டும் பிறக்கும்.

இதுவும் அது.

இ - ள்: நுனி நா அணரி அண்ணம் ஒற்ற—நாவினது நுனி மேனோக்கிச் சென்று அண்ணத்தைத் தடவ, றஃகான் னஃகான் ஆயிரண்டும் பிறக்கும்—றகார னகாரமாகிய அவ்விரண்டும் பிறக்கும; எ - று.

இது முதலாக நெடுங் கணக்கு முறை யன்றி நாவதிகாரம் † பற்றிக் கூறுகின்றார்.

ற ன என இவற்றின் வேறுபாடு உணர்க. (கஉ)

ர, ழ

கூரு. நுனிநா அணரி அண்ணம் வருட
ரகாரம் ழகாரம் ஆயிரண்டும பிறக்கும்.

இதுவும் அது.

இ - ள்: நுனி நா அணரி அண்ணம் வருட—நாவினது நுனி மேனோக்கிச் சென்று அண்ணத்தைத் தடவ, ரகார ழகாரம் ஆயிரண்டும பிறக்கும—ரகார ழகாரமாகிய அவ்விரண்டும் பிறக்கும்; எ - று.

ர ழ என இவற்றின் வேறுபாடு உணர்க. (கங)

ல, ள

கூசு. நாவிளிம்பு வீங்கி யண்பல் முதலுற
ஆவயின் அண்ணம் ஒற்றவும் வருடவும்
லகார ளகாரம் ஆயிரண்டும் பிறக்கும்.

---

* சிறிது ஒற்றப் பிறப்பன லகார ளகாரங்கள்; சிறிது வருடப் பிறப்பன ரகார ழகாரங்கள்.

† நாவதிகாரம் – நாவினால் ஏற்பட்ட முறைமை.

இதுவும் அது.

இ - ள்: நா விளிம்பு வீங்கி அண்பல் முதலுற—நா மேனோக்கிச் சென்று தன் விளிம்பு அண்பல்லின் அடியிலே உறுகின்ற, ஆவயின் அண்ணம் ஒற்ற லகாரமாய்—அவ்விடத்து அவ்வண்ணத்தை அந்நாத் தீண்ட லகாரமாயும், ஆவயின் அண்ணம் வருட ளகாரமாய்—அவ்விடத்து அவ்வண்ணத்தை அந்நாத் தடவ ளகாரமாயும், இரண்டும் பிறக்கும்—இவ்விரண்டெழுத்தும் பிறக்கும்; எ - று.

ல ள என இவற்றின் வேறுபாடு உணர்க.

இத்துணையும் நாவதிகாரம் கூறிற்று. (கரு)

ப, ம

## கூஎ. இதழியைந்து பிறக்கும் பகார மகாரம்.

இதுவும் அது.

இ - ள்: இதழ் இயைந்து பிறக்கும் பகார மகாரம்—மேலிதழுங் கீழிதழுந் தம்மிற் கூடப் பகாரமும் மகாரமும் பிறக்கும்; எ - று.

ப ம என இவற்றின் வேறுபாடு உணர்க. (கசு)

வ

## கூஅ. பல்லிதழ் இயைய வகாரம் பிறக்கும்.

இது வகாரம் பிறக்குமாறு கூறுகின்றது.

இ - ள்: பல்இதழ் இயைய வகாரம் பிறக்கும்—மேற்பல்லுங் கீழுதடுங் கூட வகாரமானது பிறக்கும்; எ - று.

வ என வரும். இதற்கும் இதழ் இயைதலின் மகரத்தின் பின்னர் வைத்தார். (கஅ)

ய

## கூகூ. அண்ணம் சேர்ந்த மிடற்றெழு வளியிசை கண்ணுற் றடைய யகாரம் பிறக்கும்.

இது யகாரம் பிறக்குமாறு கூறுகின்றது.

இ - ள்: எழுவளி மிடற்றுச் சேர்ந்த இசை—உந்தியின் எழுந்த காற்று மிடற்றிடத்துச் சேர்ந்த அதனாற் பிறந்த ஓசை, அண்ணங் கண்ணுற்று அடைய—அண்ணத்தை அணைந்து உரலாணி* இட்டாற்போலச் செறிய, யகாரம் பிறக்கும்—யகார ஒற்றுப் பிறக்கும்; எ - று.

ஆணி—மரம். ய என—வரும். (கஎ)

---

*உரலாணி – உரற்குழி பள்ளமாகியாகி அடியில் துளை விழுந்த பின் அதை அடைக்கும்படி செறிக்கும் மரத்துண்டு.

### மெல்லின மெய்களுள் பிறப்புக்கு ஒரு சிறப்பு விதி

கoo. மெல்லெழுத் தாறும் பிறப்பின் ஆக்கம்
சொல்லிய பள்ளி நிலையின வாயினும்
மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும்.

இது மெல்லெழுத்திற்குச் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள்: மெல்லெழுத்து ஆறும் பிறப்பின் ஆக்கஞ் சொல்லிய பள்ளி நிலையின ஆயினும் -- மெல்லெழுத்துக்கள் ஆறுந் தத்தம் பிறப்பினது ஆக்கஞ் சொல்லிய இடத்தே நிலைபெறறன வாயினும், மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும்—ஓசை கூறுங்கால் மூக்கின்கண் உளதாகிய வளியினிசையான் யாப்புறத் தோன்றும்; எ - று.

அவை அங்ஙனமாதல் கூறிக் காண்க. யாப்புற என்றதனுன் இடையினத்திற்கு மிடற்றுவளியும் வல்லினத்திற்குத் தலைவளியுங்* கொள்க. (கஅ)

### ச. சார்பெழுத்துக்கள் பிறக்குமாறு

கoக. சார்ந்துவரி னல்லது தமக்கியல் பிலவெனத்
தேர்ந்து வெளிப்படுத்த ஏனை மூன்றும்
தத்தம சார்பிற் பிறப்பொடு சிவணி
ஒத்த காட்சியில் தம்மியல் பியலும்.

இது சார்பிற்றோற்றங்கள் பிறக்குமாறு கூறுகின்றது.

இ - ள்: சார்ந்து வரின் அல்லது—சில எழுத்துக்களைச் சார்ந்து தோன்றினல்லது, தமக்கு இயல்பு இல என—தமக்கெனத் தோன்றுதற்கு ஓரியல்பிலவென்று, தேர்ந்து வெளிப்படுத்த தம்மியலபு மூன்றும்—ஆராய்ந்து வெளிப்படுக்கப்பட்ட எழுத்துககள தம்முடைய பிறப்பியல்பு மூன்றினையுங் கூறுங்கால், தத்தம சார்பிற் பிறப்பொடு சிவணி இயலும்—தத்தமக்கு உரிய சார்பாகிய மெய்களது சிறபபுப் பிறப்பிடத்தே பிறத்தலோடு பொருந்தி நடக்கும; ஏனை ஒத்த காட்சியின் இயலும்—ஒழிந்த ஆய்தந் தமக்குப் பொருந்தின நெஞ்சுவளியாற் பிறக்கும; எ - று.

காட்சி என்றது நெஞ்சினை. கேண்மியா நாகு நுந்தை எனவும் எஃகு எனவும் வரும்.

ஆய்தத்திற்குச் சார்பிடங் 'குறியதன் முன்னர்' (எழு - கூஅ) என்பதனுற கூறினர். இனி ஆய்தந் தலைவளியானும் மிடற்றுவளியானும் பிறக்கு மென்பாரும் உளர். மொழிந்த பொருளோ டொன்ற

---

முற்கூறிய (பக்கம். கூ) குறிப்பைக் காண்க.

அவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்த லென்பதனான் அளபெடையும் உயிர்மெய்யுந் தம்மை ஆக்கிய எழுத்துக்களது பிறப்பிடமே இடமாக வருமென்று உணர்க. (௧௧).

## ரு. எழுத்துக்களின் பிறப்புக்குப் புறனடை

௧0௨. எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி எழுதரு வளியின்
பிறப்போடு விடுவழி உறழ்ச்சி வாரத்
தகத்தெழு வளியிசை அரில்தப நாடி
அளபிற் கோடல் அந்தணர் மறைத்தே
அஃதிவண் நுவலா தெழுந்து புறத் திசைக்கும்
மெய்தெரி வளியிசை அளவுநுவன் றிசினே.

இஃது எழுத்துக்கள் தம் பிறப்பிற்குப் புறனடை கூறுகின்றது.

இ - ள்: எல்லா எழுத்துங் கிளந்து வெளிப்பட—ஆசிரியன் எல்லா எழுத்துக்களும் பிறக்குமாறு முந்துநூற்கண்ணே கூறி வெளிப்படுக்கையினாலே, சொல்லிய பள்ளி பிறப்பொடு விடுவழி—யானும் அவ்வாறே கூறிய எண்வகை நிலத்தும் பிறக்கின்ற பிறப்பாடே அவ்வெழுத்துக்களைக் கூறுமிடத்து, எழுதரு வளியின் உறழ்ச்சிவாரத்தின் அளபு கோடல்—யான் கூறியவாறு அன்றி உந்தியில் தோன்றுங் காற்றினது திரிதருங் கூற்றின் கண்ணே மாத்திரை கூட்டிக்கோடலும், அகத்து எழு வளி யிசை அரில் தப நாடிக் கோடல் மூலாதாரத்தில் எழுகின்ற காற்றி னோசையைக் குற்றமற நாடிக்கோடலும், அந்தணர் மறைத்தே—பார்ப்பாரது வேதத்து உளதே அங்ஙிலைமை ஆண்டு உணர்க, அஃது இவண் நுவலாது—அங்ஙனம் கோடலை ஈண்டுக் கூறலாகாமையின் இந்நூற்கட் கூறுதே, எழுந்து புறத்து இசைக்கும்—உந்தியிற் றோன்றிப் புறத்தே புலப்பட்டு ஒலிக்கும, மெய் தெரிவளி யிசை அளவு நுவனறிசினே—பொருள்தெரியுங் காற்றினது துணிவிற்கே யான் மாத்திரை கூறினேன் அவற்றினது மாத்திரையை உணர்க; எ - று.

இதனை இரண்டு சூத்திரமாக்கியும் உரைப்ப.*

இது பிறன்கோட் கூறலென்னும் உத்திக்கு இனம். என்னை? உந்தியில் எழுந்த காற்றினைக் கூறுபடுத்தி மாத்திரை கூட்டிக் கோடலும் மூலாதாரம் முதலாகக் காற்றெழுமாறு கூறலும் வேதத்திற்கு உளதென்று இவ்வாசிரியர் கூறி அம்பதம்பறறி அவர் கொள்வதோர் பயன் இன்றென்றலின். உந்தியில் எழுந்த காற்று முன்னர்த் தலைக்கட் சென்று பின்னர் மிடற்றிலே வந்து பின்னர் நெஞ்சிலே நிற்றலை உறழ்ச்சிவாரத்து என்றார். அகத்தெழு வளியெனவே மூலாதார மென்பது பெற்றும்.

இன்சாரியைபை அத்துச்சாரியையோடு கூட்டுக. ஏகாரந் தேற்றம்.

* இளம்பூரணர்.

மெய்தெரி வளி யெனவே பொருள் தெரியா முற்கும் வீளையும் முயற்சியானுமெனினும் பொருள் தெரியாமையின் அவை கடியூப் பட்டன. எனவே, சொலப் பிறந்து சொற்கு உறுப்பாம் ஓசையை இவர் எழுத்தென்று வேண்டுவரென உணர்க.

'நிலையும் வளியும் முயற்சியும் மூன்று
மியல நடப்ப தெழுத்தெனப் படுமே' (உ0)

என்றாராகலின்.

பிறப்பியல் முற்றிற்று.

---

## ச. புணரியல்

[எழுத்துக்களின் புணர்ச்சி யிலக்கணம் உணர்த்துவது]

### க. மொழிகளின் முதலும் ஈறும்

**மொழிக்கு முதலிலும் இறுதியிலும் வரும் எழுத்துக்கள்**

கOஅ. மூன்றுதலை யிட்ட முப்பதிற் றெழுத்தின்
இரண்டுதலை யிட்ட முதலா கிருபஃது
அறுநான் கீறொடு நெறிநின் றியலும்
எலலா மொழிக்கும் இறுதியம் முதலும்
மெய்யே உயிரென்று ஆயி ரியல.

என்பது சூத்திரம். மொழிமரபிற் கூறிய மொழிகளைப் பொது வகையாற் புணர்க்கும் முறைமை உணர்த்தினமையிற் புணரியலென்று இவ்வோத்திற்குப் பெயராயிற்று. ஈண்டு முறைமை யென்றது மேற் செய்கை யோத்துக்களுட் புணர்தற்கு உரியவாக ஈண்டுக் கூறிய கருவிகளை.

இச்சூத்திரம் என்நுதலிற்றோ வெனின், மொழிமரபிற் கூறிய மொழிக்கு முதலா மெழுத்தும் மொழிக்குஈறு மெழுத்தும் இத்துணை யென்றலும், எல்லா மொழிக்கும் ஈறும் முதலும் மெய்யும் உயிரு மல்லது இல்லையென்று வரையறுத்தலும், ஈறும் முதலுமாக எழுத்து நாற்பத்தாறு உளவோ வென்று ஐயுற்றார்க்கு எழுத்து முப்பத்து மூன்றுமே அங்ஙனம் ஈறும் முதலுமாய் நிற்பதென்று ஐயமறுத்தலும் நுதலிற்று.

இ - ள்: முதல் இரண்டு தலையிட்ட இருபஃது ஈறு அறு நான்காகும் - மூன்று தலையிட்ட முப்பதிறறெழுத்தினொடு—மொழிக்கு முதலா மெழுத்து இரண்டை முடியிலே யிட்ட இருபஃதும் மொழிக்கு ஈறுமெழுத்து இருபத்து நான்குமாகின்ற மூன்றை முடியிலே யிட்ட முப்பதாகிய எழுத்துக்களோடே, நெறிநின்று இயலும் எல்லா மொழிக்கும்—வழக்கு நெறிக்கணின்று நடக்கும் மூவகை மொழிக்கும், மெய்யே உயிரென்று ஆயிரியல இறுதியும் முதலும—மெய்யும உயிருமென்று கூறப்பட்ட அவ்விரண்டு இயல்பினையுடைய எழுத்துக்களே ஈறும் முதலும ஆவன; எ - று.

இருபத்திரண்டு முதலாவன பன்னீருயிரும் ஒன்பது உயிர்மெய்யும் மொழிமுதற் குற்றியலுகரமுமாம். இருபத்து நான்கு ஈறுவன பன்னீருயிரும் பதினொரு புள்ளியும் ஈற்றுக் குற்றியலுகரமுமாம். மெய்யை முற் கூறினார் நால்வகைப் புணர்ச்சியும் மெய்க்கண் நிகழுமாறு உயிர்க்கண் நிகழா வென்றற்கு.

உ - ம்: மரம் என மெய்ம்முதலும் மெய்யீறும், இலை என உயிர் முதலும் உயிரீறும், ஆல் என உயிர்முதலும் மெய்யீறும், விள என மெய் முதலும் உயிரீறுமாம். மொழியாக்கம் இயல்பும் விகாரமுமென இரண்டாம். உயிர் தமமே நின்று முதலும் ஈறு மாதல் இயல்பு. அவை மெய்யோடு கூடி நின்று அங்ஙனமாதல் விகாரம். (க)

## மொழியிறுதி மெய்கள் புள்ளி பெறுதல்

**கoச.** அவற்றுள்
மெய்யீ றெல்லாம் புள்ளியோடு நிலையல்.

இது முற்கூறியவாற்றால் தனிமெய் முதலாவான் சென்றதனை விலக்கலின் எய்தியது விலக்கிற்று.

இ - ள்: அவற்றுள—முற்கூறிய மெய்யும் உயிருமென்ற இரண்டினுள், மெய்யீறு எல்லாம் புள்ளியொடு நிலையல்—மெய் மொழிக்கு ஈறுயவை யெல்லாம் புள்ளி பெற்று நிற்கும்; எ - று.

எனவே, மொழிக்கு முதலாயினவை யெல்லாம் புள்ளி யிழந்து உயிரேறி நிற்கு மென்றாராயிற்று. இன்னும் ஈற்றுமெய் புள்ளிபெற்று நிற்குமென்றதனானே உயிர்முதன்மொழி தம்மேல் வந்தால் அவை உயிரேற இடங்கொடுத்து நிற்கு மென்பதூஉங் கூறினாராயிற்று. இவ்விதி முற்கூறியதன்றேலெனின் ஆண்டுத் தனிமெய் பதினெட்டும் புள்ளி பெற்று நிற்கு மென்றும் அவைதாம் உயிரேறுங்காற் புள்ளி யிழந்து நிற்கு மென்றுங் கூறினார்; ஈண்டு மெய்முதல் மெய்யீறெனப் பொருளுரைக்க வேண்டினமையின் மொழி முதன மெய்களும் புள்ளி பெறுமோ வென்று ஐயுற்ற ஐயம் அகற்றக் கூறினாரென்று உணர்க. மரம் எனப் புள்ளிபெற்று நின்றது அரிதென வந்துழி, மரமரிதென்று ஏறி முடிந்தவாறு காண்க. (உ)

## குற்றுகரம் ஒற்றெழுத் தொத்தல்

**கoரு.** குற்றிய லுகரமும் அற்றென மொழிப.

இது முன்னர்ப் புள்ளியீற்றுமுன் உயிர் தனித்தியலாதென்று மெய்க்கு எய்துவிக்கின்ற கருவியை எதிரது போற்றி உயிர்க்கும் எய்துவிக்கின்ற கருவிச் சூத்திரம்.

இ - ள்: குற்றியலுகரமும் அற்றென மொழிப—ஈற்றுக் குற்றியலுகரமும் புள்ளியீறுபோல உயிரேற இடங்கொடுக்கு* மென்று கூறுவர் புலவர்; எ - று.

---

* "குற்றியலுகரம்......மொழிப" என்பதற்கு, குற்றியலுகரமும் மெய்யீறுபோலப்புள்ளிபெறும் என்பதே போந்த பொருளாம். "மெய்யினியற்கைபுள்ளியொடு நிலையல்" "எகர ஒகரத் தியற்கையும்அற்றே" என்று ஆசிரியர் மாட்டியவிடத்தும் எகர ஒகரம் புள்ளிபெறுமென்பதே

இம்மாட்டேறு ஒருபுடைச் சேறல் புள்ளி பெருமையின், அங்ஙனம் உயிரேறுங்காற் குற்றுகரங் கெட்டுப்போக நின்ற ஒற்றின் மேல் உயிரேறிற்றென்று கொள்ளற்க. நாகரிதென்புழி முன்னர்க் குற்றுகர வோசையும் பின்னர் உயிரோசையும் பெற்று அவ்விரண்டுங் கூடி நின்றல்லது அப்பொருளுணர்த்த லாகாமையின், இஃது உயிரோடுங் கூடி நிற்குமென்றார் (௬)

### உயிர் மெய்யீறு உயிரீற்றது

௧0௬. உயிர்மெய் ஈறும் உயிரீற் றியற்றே.

இது 'பெய்யே யுயிரென் றுயீ ரியல' (எழு-௧0௬) என்ற உயிர்க் கண் நிகழ்வதோர் ஐயம் அகற்றியது; உயிர்மெர் யென்பதோர் ஈறு உண்டேனும் அது புணர்க்கப்படாது, அதுவும் உயிராயே அடங்கு மென்றலின்.

இ - ள்: உயிர்மெய்யீறும்—உயிர்மெய் மொழியினது ஈற் றின்கண் நின்றதும், உயிரீற்றியற்றே—உயிரீற்றின் இயல்பை யுடைத்து; எ - று.

உம்மையான் இடைநின்ற உயிர்மெய்யும் உயிரீற்றின் இயல்பை யுடைத்து என்றாராயிற்று. உம்மை: எச்சவும்மை. ஈற்றினும் இடையி னும் நின்றன உயிருள அடங்குமெனவே முதல் நின்றன மெய்யுள் அடங்கு மென்றார். இதனானே மேல் விள என்றாற் போலும் உயிர் மெய்களெல்லாம் அகர வீறென்று புணர்க்குமாறு உணர்க. வரகு இதனை மேல் உயிர்த் தொடர்மொழி யென்ப. முன்னர் 'மெய்யின் வழியது' (எழு - ௧அ) என் றது ஓரெழுத்திற் கென்று உணர்க. இத் துணையும் மொழிமரபின் ஒழிபு கூறிற்று. (௭)

### புணர்ச்சிக்குரிய இருமொழிகளின் இயல்பு

௧0எ. உயிரிறு சொல்முன் உயிர்வரு வழியும்
உயிரிறு சொல்முன் மெய்வரு வழியும்
மெய்யிறு சொல்முன் உயிர்வரு வழியும்
மெய்யிறு சொல்முன் மெய்வரு வழியுமென்று
இவ்வென அறியக் கிளக்குங் காலை
நிறுத்த சொல்லே குறித்துவரு கிளவியென்று
ஆயீ ரியல புணர்நிலைச் சுட்டே.

இது மேற்கூறும் புணர்ச்சிகளெல்லாம் இருமொழிப் புணர்ச்சி யல்லது இல்லை யென்பதூஉம் அஃது எழுத்து வகையான் நான்கா மென்பதூஉம் உணர்த்துகின்றது.

---

கருத்தாதல் தெளிவாம். ஆதலால், இளம்பூரணரும் நச்சினார்க் கினியரும் குற்றியலுகரம் புள்ளியீறுபோல உயிரேற இடங்கொடுக்கு மென்று உரை கூறுவது மாட்டேற்றிற்கு முற்றிலும் பொருந்தாது. இதுவே பேராசிரியர்க்கும் சிவஞான முனிவர்க்கும் சங்க யாப்புடை யார்கரும் கருத்தாம். "தொல்லைவடிவின.........புள்ளி" என்னும் நன்னூல் நூற்பாவுரையில் "ஆண்டு என்ற மிகையானே...... குற்றுகரக் குற்றிகரங்களுக்குமேற் புள்ளி கொடுப்பாரும் உளரெனக் கொள்க" என்று மயிலைநாதர் கூறுவதுங் காண்க.

இ - ள்: உயிரிறு சொல்முன் உயிர்வரு வழியும்—உயிர் தனக்கு ஈறாக இறுஞ் சொல்லின்முன்னர் உயிர் முதலாகிய மொழி வரும் இடமும், உயிரிறு சொல்முன் மெய்வரு வழியும்—உயிர் தனக்கு ஈறாக இறுஞ்சொல்லின் முன்னர் மெய் முதலாகிய மொழி வரும இடமும், மெய்யிறு சொல்முன் உயிர் வரு வழியும்—மெய் தனக்கு ஈறாக இறுஞ் சொல்லின் முன்னர் உயிர் முதலாகிய மொழி வரும் இடமும், மெய்யிறு சொல்முன் மெய்வரு வழியும—மெய் தனக்கு ஈறாக இறுஞ் சொல்லின் முன்னர் மெய்முதலாகிய மொழி வரும் இடமும், என்று புணர்நிலைச் சுட்டு—என்று சொல்லப் பட்ட ஒன்றினொடொன்று கூடும் நிலைமையாகிய கருத்தின்கண், இவ்வென அறியக் கிளக்குங் காலை—அவற்றை இத்துணை யென வரையறையை எல்லாரும் அறிய யாங் கூறுங்காலத்து, நிறுத்த சொல்லே குறித்துவரு கிளவி யென்று ஆயீரியல—முன்னர் நிறுத் தப்பட்ட சொல்லும் அதனை முடித்தலைக் குறித்து வருஞ்சொல் லும் என்று சொல்லப்பட்ட அவவிரண்டு இயல்பினையுடைய; எ - று.

எனவே, நான்கு வகையானுங் கூடுங்கால் இருமொழி யல்லது புணர்ச்சியின்று என்றாராயிற்று,

எ — டு: ஆவுண்டு ஆவலிது ஆலிலை ஆல்வீழ்ந்தது என முறையே காண்க. விளவினைக் குறைத்தான என்றவழிச சாரியையும் உருபும் நிலைமொழியாயே நிற்கு மென்பது நோக்கி அதனை நிறுத்த சொல் லென்றும் முடிக்குஞ் சொல்லைக் குறித்துவரு கிளவி யென்றும் கூறினார் இதனானே நிலைமொழியும் வருமொழியுங் கூறினார். முன்னர் 'மெய்யே யுயிர்' (எழு - ௧0௬) என்றது ஒரு மொழிக்கு. இஃது இரு மொழிக் கென்று உணர்க. (௯)

## ௨. புணர்தலின் இயல்பு

### மொழி புணரியல்பு நான்கு

௧0௯. அவற்றுள்
நிறுத்த சொல்லின் ஈறா கெழுத்தொடு
குறித்துவரு கிளவி முதலெழுத் தியையப்
பெயரொடு பெயரைப புணர்க்குங் காலும்
பெயரொடு தொழிலைப் புணர்க்குங் காலும்
தொழிலொடு பெயரைப் புணர்க்குங் காலும்
மூன்றே திறத்ன ஒன்றே இயல்பென
தொழிலொடு தொழிலைப் புணர்க்குங் காலும்
ஆங்கந் நான்கே மொழிபுணா இயல்பே.

இது முன்னர் எழுத்துவகையான் நான்கு புணர்ச்சி எய்திய இரு வகைச் சொல்லுஞ் சொல்வகையானும் நான்காகு மென்பதூஉம்

அங்ஙனம் புணர்வது சொல்லுஞ் சொல்லும் அன்று, எழுத்தும் எழுத்து மென்பதூஉம் உணர்த்துகின்றது.

இ - ள்: அவற்றுள்—நிலைமொழி வருமொழி யென்றவற்றின், நிறுத்த சொல்லின் ஈறுகு எழுத்தொடு குறித்துவரு கிளவி முதலெழுத்து இயைய—முன்னர் நிறுத்தப்பட்ட சொல்லினது ஈறுகின்ற எழுத்தோடே அதனை முடிக்கக் கருதி வருகின்ற சொல்லினது முதலெழுத்துப் பொருந்த, பெயரொடு பெயரைப் புணர்க்குங் காலும்—பெயர்ச்சொல்லோடு பெயர்ச் சொல்லைக் கூட்டும் இடத்தும், பெயரோடு தொழிலைப் புணர்க்குங் காலும் —பெயர்ச்சொல்லோடு தொழிற்சொல்லைக் கூட்டும் இடத்தும், தொழிலோடு பெயரைப் புணர்க்குங்காலும் — தொழிற்சொல்லோடு பெயர்ச்சொல்லைக் கூட்டும் இடத்தும், தொழிலொடு தொழிலைப் புணர்க்குங்காலும் — தொழிற் சொல்லோடு தொழிற் சொல்லைக் கூட்டும் இடத்தும், மூன்றே திரிபு இடன் ஒன்றே இயல்பென ஆங்கு அந்நான்கே—திரியும் இடம் மூன்று இயல்பு ஒன்று என்று முந்து நூலிற் கூறிய அந்நான்கு இலக்கணமுமே, மொழி புணர் இயல்பு — ஈண்டு மொழிகள் தம்முட் கூடும் இலக்கணம்; எ - று.

உ - ம்: சாத்தன்கை சாத்தனுண்டான் வந்தான் சாத்தன் வந்தான் போயினன் என முறையே காண்க. இவை நான்கு இனத்தோடுங் கூடப் பதினாறும். இடையும் உரியுந் தாமாக நில்லாமையிற் பெயர்வினையே கூறினார். இடைச்சொல்லும் உரிச்சொல்லும் புணர்க்குஞ் செய்கைப் பட்டுழிப் புணர்ப்புச் சிறுபான்மை. பெயர்ப் பெயரும் ஒட்டுப் பெயருமென இரண்டு வகைப்படும் பெயர். தெரிநிலைவினையுங் குறிப்புவினையுமென இரண்டு வகைப்படும் தொழில். நிலைமொழியது ஈற்றெழுத்து முன்னர்ப் பிறந்து கெட்டுப் போக வருமொழியின் முதலெழுத்துப் பின் பிறந்து கெட்டமையான் முறையே பிறந்து கெடுவன ஒருங்குநின்று புணருமாறின்மையிற் புணர்ச்சி யென்பது ஒன்றின்றாம் பிற வெனின், அச்சொற்களைக் கூறுகின்றோருங் கேட்கின்றோரும் அவ்வோசையை இடையறவுபடாமை உள்ளத்தின்கண்ணே உணர்வராதலின் அவ்வோசை கேடின்றி உள்ளத்தின்கண் நிலைபெற்றுப் புணர்ந்தனவேயாம். ஆகவே, பின்னர்க் கண்கூடாகப்* புணர்க்கின்ற புணர்ச்சியும் முடிந்தனவேயாமென்று உணர்க. இனி முயற்கோடு உண்டென்றால் அது குறித்துவரு கிளவி யன்மையிற் புணர்க்கப்படாது.† இதுதான இன்றென்றாற் புணர்க்கப்படுமென்று‡ உணர்க. (௬)

* கண்கூடாக — கட்புலனாக வரிவடிவில்.

† முயற்கோடு உண்டு என்றால் பொருளின்மையின், உண்டு என்பது முடிக்குஞ் சொல்லன்று.

‡ முயற்கோடு இன்று என்றால் பொருளுண்மையின், இன்று என்பது முடிக்குஞ் சொல்லாகும். ஆகவே, புணருஞ் சொற்கட்கு அண்மைநிலை மட்டும் போதாது. பொருட் பொருத்தமும் வேண்டும் என்பது கருத்து. உரையில் இது என்றது முயற்கோட்டை.

'புளி' என்னும் மரப்பெயர்

**உசச. புளிமரக் கிளவிக்கு அம்மே சாரியை.**

இது வல்லெழுத்து விலக்கி அம்மு வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ - ள்.) புளிமரக் கிளவிக்கு அம்மே சாரியை—சுவையன்றிப் புளி யென்னும் மரத்தினை உணர நின்ற சொல்லிற்கு அம்மென்னுஞ் சாரியை வரும்; எ - று.

(எ - டு.) புளியங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

சாரியைப் பேற்றிடை முன்னர்ச் சூத்திரத்து எழுத்துப்பேறு* கூறியவதனால் அம்முப்பெற்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. (சஉ)

'புளி' என்னும் சுவைப்பெயர்

**உசரு. ஏனைப் புளிப்பெயர் மெல்லெழுத்து மிகுமே.**

இது வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ - ள்.) ஏனைப் புளிப்பெயர் மெல்லெழுத்து மிகும்—அம்மரப் பெயரன்றிச் சுவையை உணர நின்ற புளிப்பெயர் முன் வல்லெழுத்து மிகாது மெல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(எ - டு.) புளிங்கூழ் சாறு தயிர் பாளிதம் என வரும். பாளிதம் - பாற்சோறு இவற்றிற்கு இரண்டாமுருபு விரிக்க. (சங)

அதற்கு மேலும் ஒரு முடிபு

**உசசா. வல்லெழுத்து மிகினும் மான மில்லை**
**ஒல்வழி யறிதல் வழக்கத் தான.**

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ - ள்) வல்லெழுத்து மிகினும் மானமில்லை—சுவைப்புளி மெல்லெழுத்தே யன்றி வல்லெழுத்து மிகக்° முடியினும் குற்றமில்லை, ஒல்வழி அறிதல் வழக்கத்து ஆன—பொருந்தும் இடம் அறிக வழக்கிடத்து; எ - று.

(எ - டு) புளிக்கூழ் சாறு தயிர் பாளிதம் என வரும்.

ஒல்வழி என்றதனாற் புளிச்சாறு போல ஏனைய வழக்குப் பயின்றில வென்று கொள்க.

வழக்கத்தான என்றதனான் இவ் வீற்றுக்கண் எடுத்தோத்தும் இலேசுமின்றி வருவன எல்லாவற்றிற்கும் ஏற்குமாறு செய்கையறிந்து

* எழுத்துப்பேறு—இவ்வியல் சO ஆம் நூற்பாவில் மெல்லெழுத்து மிகுமே என்றது.

முடித்துக் கொள்க, அவை இன்னினிக் கொண்டான் அண்ணணிக் கொண்டான் என்பன அடையடுத்தலின் 'இனியணி' (எழு - உ௩௩) என்றவழி முடியாவாய் வல்லெழுத்துப் பெற்றன. கப்பிதந்தை சென்னி தந்தை என்பன, 'அஃறிணை விரவுப் பெயர்' (எழு - ௧௫௫) என்பதனுள் இயல்பெய்தாது ஈண்டு வருமொழித் தகர அகரங் கெட்டுக் கப்பிந்தை சென்னிந்தை என முடிந்தது.

கூதாளி கணவிரி என்பனவற்றிற்கு அம்முக் கொடுத்து இகரங் கெடுத்துக் கூதாளங்கோடு கணவிரங்கோடு செதிள் தோல் பூ என முடிக்க. 'கூதள நறும்பூ' எனக் குறைந்தும் வரும். இனி இவை மகர ஈறாயும் வழங்கும். அது 'வெண் கூதாளத்துத் தண்பூங் கோதையர்' (பட்டி - ௮௫) என அத்துப் பெற்று மகரங்கெட்டுங் 'கணவிரமாலை யிடூஉக் கழிந்தன்ன' (அகம்-௩௧) என மகரங்கெட்டுங் கணவிரங் கோடு என மெல்லெழுத்துப் பெற்று நிற்கும்.

கட்டி எனூ விருத்தி இடி அகல் எனத் தந்து டகரத்தில் இகரங் கெடுத்துக் கட்டிடி கட்டகல் என முடிக்க. பருத்திக்குச் சென்றானை ஈற்று வல்லெழுத்தும் இக்குங் கொடுத்து முடிக்க. துளியத்துக் கொண்டான் துளியிற் கொண்டான் என அத்தும் இன்னுங் கொடுத்து முடிக்க. புளிங்காய் வேட்கைத்தன்று எனவும், புளிம்பழம் எனவும் அம்முப் பெறாது மெல்லெழுத்துப் பெற்று முடிதலுங் கொள்க. இன்னும் இதனானே உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட் சென்றுழி இயைபு வல்லெழுத்துக் கெடுத்துக் கிளியின்கால் புளியின்கோடு உதியின்கோடு என முடிக்க. (௪௬)

## நாட் பெயர்

உ௪௭. நாள்முன் தோன்றுந் தொழில்நிலைக் கிளவிக்கு
ஆன் இடை வருதல் ஐய மின்றே.

இஃது ஈற்று வல்லெழுத்து விலக்கி ஆன்சாரியை விதிக்கின்றது.

(இ - ள்.) நாள் முன் தோன்றுந் தொழில் நிலைக்கிளவிக்கு —இகர ஈற்று நாட்பெயர்களின் முன்னர்த் தோன்றுந் தொழிற் சொற்கு, ஆன் இடை வருதல் ஐயமின்று—ஆன் சாரியை இடை வந்து முடிதல் ஐயமின்று; எ - று.

(எ - டு.) பரணியாற் கொண்டான் சோதியாற் கொண்டான்* சென்றான் தந்தான் போயினான் என வரும். ஐயமின்றென்றதனால் இயைபு வல்லெழுத்து வீழ்க்க. இதற்குக் கண்ணென் உருபு விரிக்க. (௪௭)

## திங்கட் பெயர்

உ௪௮. திங்கள் முன்வரின் இக்கே சாரியை.

இஃது இயைபு வல்லெழுத்தினோடு இக்கு வகுத்தலின் எய்தியதன் மேற் சிறப்பு விதி வகுத்தது.

---

*நச்சினார்க்கினியர் காட்டியுள்ள சோதி முதலிய பெயர்கள் நாட்பெயர்களாய்த் தொல்காப்பியர் காலத்திலிருந்தனவா என்பது ஆராயத்தக்கது.

(இ - ள்.) இங்கள்முன் வரின் இக்கே சாரியை — இங்கனை உணரநின்ற இகர ஈற்றுப பெயர்களின் முன்னர்த் தொழிநிலைக் கிளவி வரின் வருஞ் சாரியை இக்குச் சாரியையாம்; எ - று.

(எ - டு.) ஆடிக்குக் கொண்டான், சென்றான், தந்தான், போயி னான் என இயைபு வல்லெழுத்துக் கொடுத்து முடிக்க, இதற்குங் கண் ணென் உருபு விரிக்க.* (சஒ)

## ஈகார ஈறு

### அல்வழியில் ஈகார ஈற்றுப் பெயர்

உசகூ. ஈகார இறுதி ஆகார இயற்றே.

இஃது ஈகார ஈற்றுப் பெயர் அல்வழிக்கண் முடியுமாறு கூறு கின்றது.

(இ - ள்.) ஈகார இறுதி ஆகார இயற்று—ஈகார ஈற்றுப் பெயர் அல்வழிக்கண் ஆகார ஈற்று அல்வழியின் இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(எ - டு.) ஈக்கடிது தீக்கடிது சிறிது தீது பெரிது என வரும். (சஎ)

### 'நீ' 'மீ' முதலிய சொற்கள்

உருo. நீஎன் பெயரும் இடக்கர்ப் பெயரும்
மீஎன மரீஇய இடம்வரை கிளவியும்
ஆவயின் வல்லெழுத் தியற்கை யாகும்.

இஃது எய்தியது விலக்கலும் எய்தாத தெய்துவித்தலுங் கூறு கின்றது.

(இ - ள்.) நீ என் பெயரும் இடக்கர்ப் பெயரும் — நீ யென்னும் பெயரும் இடக்கர்ப் பெயராகிய ஈகார ஈற்றுப் பெயரும், மீயென மரீஇய இடம் வரை கிளவியும்—மீயென்று சொல்ல மருவாய் வழங்கின ஓரிடத்தை வரைந்து உணர்த்துஞ் சொல்லும், ஆவயின் வல்லெழுத்து இயற்கை யாகும்-புணருமிடத்து முற் கூறிய வல்லெழுத்துப் பெறாது இயல்பாய் முடியும்; எ - று.

(எ - டு.) நீ குறியை சிறியை தீயை பெரியை எனவும், மீகுறிது சிறிது தீது பெரிது எனவும் இவையிற்றுக்குப் பொதுவான் எய்திய வல்லெழுத்து விலக்குண்டன. மீகண் செவி தலை புறம் இஃது இலக் கணத்தோடு பொருந்திய மருவாதலின், எய்தாத தெய்துவித்தது.

நீ யென்பது அஃறிணை விரவுப் பெயருள் அடங்காதோ வெனின் மேல் நின்னை யெனத் திரிந்து முடிதலின் அடங்காதாயிற்று. மீகண் என்பது வேலிடத்துக் கண்ணென வேற்றுமை யெனினும் இயல்பு பற்றி உடன் கூறினார். (சஅ)

* நாட்பெயர்க்குக் கூறியதை இதற்குங் கொள்க.

### 'மீ' என்னுஞ் சொல்லுக்கு மேலும் ஒரு முடிபு

உருக. இடம்வரை கிளவிமுன் வல்லெழுத்து மிகூஉம்
உடனிலை மொழியும் உளவென மொழிப

இது வல்லெழுத்து மிகுக என்றலின் எய்திய திகந்துபடாமற் காத்தது.

(இ - ள்) இடம் வரை கிளவிமுன் வல்லெழுத்து மிகூஉம்— இடத்தை வரைந்து உணர்த்தும் மீயெனனும் சொல்லின் முன்னர் இயல்பாய் முடிதலே யன்றி வல்லெழுத்து மிக்கும் முடியும, உடனிலை மொழியும் உள என மொழிப—தம்மில் ஓசை யியைந்து நிற்றலையுடைய மொழிகளும் உளவென்று கூறுவர் ஆசிரியர்; எ - று.

(எ – டு.) மீக்கோள் மீப்பல் என வரும்.

உடனிலையென்றதனான் மீங்குழி மீந்தோல் என மெல்லெழுத்துப் பெற்று முடிவனவுங் கொள்க. (சக)

### வேற்றுமையில் ஈகார ஈற்றுப் பெயர்

உருஉ. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.

இஃது ஈகார ஈற்றுப்பெயர் வேற்றுமைக்கண் முடியுமாறு கூறுகின்றது.

(இ - ள்.) வேற்றுமைக்கண்ணும் அதனோரற்று — ஈகார ஈற்றுப் பெயர்வேறறுமைப் பொருட் புணர்ச்சிக்கண்ணும் ஆகார ஈற்று அல்வழிபோல வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடியும; எ - று.

(எ - டு) ஈக்கால் சிறகு தலை புறம், தீக்கடுமை சிறுமை தீமை பெருமை என வரும். (ருo)

### 'நீ' என்னும் பெயர்

உருங. நீஎன் ஒருபெயர் உருபியல் நிலையும்
ஆவயின் வல்லெழுத் தியற்கை யாகும்.

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, வல்லெழுத்து விலக்கி னகரவொற்றே பெறுக என்றலின்.

(இ - ள்.) நீ யென் ஒரு பெயர் உருபியல் நிலையும் — நீ யென்னும் ஓரெழுத்தொருமொழி உருபு புணர்ச்சிக்கண நெடு முதல் குறுகி னகரம் ஒற்றி நின்றாற்போல ஈண்டுப் பொருட் புணர்ச்சிக் கண்ணும் முடியும், ஆவயின் வல்லெழுத்து இயற்கை யாகும்—அவ்வாறு முடியும் வழி இயைபு வல்லெழுத்து மிகா; எ - று.

(எ – டு.) நின்கை செவி தலை புறம் என வரும்.

இஃது ஈகார ஈறு இகர ஈறாய் இகர ஈறு னகர ஈறாய் நின்றுழியும் 'நீயெனொருபெயர்' என்றலிற் றிரிந்ததன் றிரிபதுவே* யாயிற்று. இயற்கையாகுமெனவே நிலைமொழித்தொழில் அதிகார வல்லெழுத்தை விலக்கா தாயிற்று. (ருக)

## ரு. உகர ஈறு

### அல்வழியில் உகர ஈற்றுப பெயர்

**உருச. உகர இறுதி அகரஇயற்றே.**

இஃது உகர ஈற்றுப்பெயர் அல்வழிக்கண் முடியுமாறு கூறுகின்றது.

(இ - ள்.) உகர இறுதி அகர இயற்று—உகர ஈற்றுப் பெயர் அல்வழிக்கண் அகர ஈற்று இயலபிறறாய் வல்லெழுத்து வந்துழி அவ் வலலெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(எ – டு.) கடுக்குறிது சிறிது தீது பெரிது என வரும். (ருஉ)

### உகரச் சுட்டு

**உருரு. சுட்டின்முன்னரும் அத்தொழிற் றாகும்.**

இஃது உகர ஈற்றுச் சுட்டு வன்கணத்தோடு முடியுமாறு கூறுகின்றது.

(இ - ள்.) சுட்டின் முன்னரும் அத்தொழிற்று ஆகும் — உகர ஈற்றுச் சுட்டின முன்னும் வல்லெழுத்து வந்துழி அவ்வல்லெழுத்து மிக்கு முடியும; எ - று.

(எ - டு.) உக்கொற்றன் சாத்தன் தேவன் பூதன் என வரும். (ருந)

### சுட்டின்முன் மென்கணம் முதலியன

**உருசூ. ஏனவை வரினே மேல்நிலை இயல.**

இஃது உகர ஈற்றுச் சுட்டு ஒழிந்த கணங்களோடு முடியுமாறு கூறுகின்றது.

(இ - ள்.) ஏனவை வரின் — உகர ஈற்றுச் சுட்டின்முன் வல்லெழுத் தல்லாத மென்கணம் முதலிய மூன்றும் வரின், மேல் நிலை இயல— அகர ஈறறுச் சுட்டு முடிந்தாற்போல ஞநமத் தோன்றின் ஒற்று மிக்கும யவ்வரினும் உயிர் வரினும் வகரம் ஒற்றியும செய்யுளில் நீண்டு முடியும், எ - று.

(எ - டு.) உஞ்ஞாண் நூல் மணி எனவும், உவ்யாழ் உவ்வட்டு எனவும், உவ்வடை உவ்வாடை எனவும், ஊவயினை எனவும் வரும். (ருச)

---

* திரிந்ததன் திரிபதுவே - நீ எனபது நி என்றும் நி என்பது நின் என்று ر திரிந்த விடத்தும அது நீ என்னும் பெயரே என்பது; திரிந்தது நி; திரிந்ததன் திரிபு நின். அது நீ இனி, இங்ஙனமன்றி நீன் என்னும் பெயரே நின் எனக் குறுகியது என்பது மிகப் பொருந்தும். நீன் (நீ) என்பது இன்றும் தென்னாட்டில் வழக்கிலுள்ளது.

### சுட்டின் முன் வலி இயல்பாதல்

உருஎ. சுட்டுமுதல் இறுதி இயல்பா கும்மே.

இஃது இவ் வீற்றுட் சிலவற்றிற்கு வல்லெழுத்து விலக்கி இயல்பு கூறுகின்றது.

(இ - ள்.) சுட்டு முதல் இறுதி—சுட்டெழுத்தினை முதலாக வுடைய உகர ஈற்றுப் பெயர், இயல்பாகும்—முற்கூறிய வல்லெழுத்து மிகாது இயல்பாய் முடியும்; எ - று.

(எ - டு.) அதுகுறிது இதுகுறிது உதுகுறிது சிறிது தீது பெரிது என வரும்.

முற்கூறியவை சுட்டுமாத்திரை. இவை சுட்டுப்பெயரென உணர்க.

### செய்யுளிற் சுட்டுப் பெயர்

உருஅ. அன் றுவரு காலை ஆவா குதலும்
ஐ வரு காலை மெய்வரைந்து கெடுதலும்
செயயுள் மருங்கின் உரித்தென மொழிப.

இஃது இவ்வீற்றுச் சுட்டுமுதற் பெயர்க்கு ஒரு செய்யுண்முடிபு கூறுகின்றது.

(இ - ள்.) அன்று வருகாலை ஆ ஆகுதலும்—அதிகாரத்தால் நின்ற சுட்டுமுதல் உகர ஈற்றின் முன்னர் அன்றென்னும் வினைக்குறிப்புச் சொல் வருங்காலத்து அத் தகரவொற்றின்மேல் ஏறிநின்ற உகரம் ஆகாரமாய்த் திரிந்து முடிதலும், ஐவருகாலை மெய்வரைந்து கெடுதலும் — அதன் முன்னர் ஐயென்னுஞ் சாரியை வருங்காலத்து அத் தகரவொற்று நிற்க அதன்மேல் ஏறிய உகரங் கெடுதலும், செய்யுண் மருங்கின் உரித்தென மொழிப—செய்யுட்கண் உரித்தென்று சொல்லுவர் ஆசிரியர்; எ - று.

(எ - டு ) அதா அன்றம்ம, இதா அன்றம்ம, உதா அன்றம்ம; 'அதா அன்றென்ப வெண்பா யாப்பே' எனவும், அதைமற்றம்ம இதை மற்றம்ம உதைமற்றம்ம எனவும் வரும்.

'மொழிந்த பொருளோ டொன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்றி முடித்த' லென்பதனால் அதன்று இதன்று உதன்று என உகரங்கெட்டுத் தகரவொற்று நிற்றலும் கொள்க. (இக)

### வேற்றுமையின் உகர ஈற்றுப் பெயர்

உருக. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.

இஃது இவ் வீற்றுப் பெயர் வேற்றுமைக்கண் முடியுமாறு கூறுகின்றது.

(இ - ள். வேற்றுமைக்கண்ணும்—உகர ஈற்றுப் பெயர் வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண்ணும், அதனோற்று—அகர ஈற்று அல்வழியோடு ஒருதன்மைத்தாய் வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(எ - டு. கடுக்காய் செதிள் தோல் பூ எனவும், கடுக்கடுமை எனவும் வரும். (கஎ)

'எரு' 'செரு' என்னுஞ் சொற்கள்

உகூ0. எருவும் செருவும் அம்மொடு சிவணித்
திரிபிட னுடைய தெரியுங் காலை
அம்மின் மகரம் செருவயின் கெடுமே
தம்மொற்று மிகூஉம் வல்லெழுத் தியற்கை.

இஃது அவ் வீற்றுள் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கிச் சாரியை விதியும், ஒன்றற்கு வல்லெழுத்தினோடு சாரியை விதியுஞ், சாரியை பெறாதவழி வல்லெழுத்து மெல்லெழுத்துப் பேறுங் கூறுகின்றது.

(இ - ள்.) எருவும் செருவும் அம்மொடு சிவணி—எருவென்னுஞ் சொல்லும் செருவெனனுஞ் சொல்லும் அம்முச்சாரியையோடு பொருந்தி திரிபு இடனுடைய தெரியுங் காலை—அதிகார வல்லெழுத்துப் பெறாமல் திரியும் இடனுடைய ஆராயுங்காலத்து, அம்மின் மகரஞ் செருவயிற் கெடும - ஆண்டு அம்முச் சாரியையி னது ஈற்றின் மகரஞ் செருவெனனுஞ் சொல்லிடத்துக் கெட்டு முடியும், வல்லெழுத்து மிகூஉம்—ஆண்டுச் செருவின்கண் வல்லெழுத்து மிக்கு முடியும், இயற்கைத் தம் ஒற்று மிகூஉம்—அம்முப் பெறாவழி இரண்டிற்குந் தமக்கு இனமாகிய வல் லொற்றும் மெல்லொற்றும் மிக்கு முடியும்; எ - று.

(எ - டு.) எருவென நிறுத்திக் குழி சேறு தாது பூழி எனத்தந்து அம்முக் கொடுத்து 'அம்மினிறுதி கசதக்காலை' (எழு-கஉக என்பத னல் எருவங் குழி சேறு தாது பூழி என முடிக்க. செருவென நிறுத்திக் களம் சேனை தானை பறை எனத் தந்து இடை அம்முக கொடுத்து மகரங் கெடுத்து வல்லெழுத்துக் கொடுத்துச் செருவக்களம் சேனை தானை பறையென முடிக்க. இனி அம்புப் பெறாதவழி எருக்குழி எருங் குழி என வல்லெழுத்தும் மெல்லெழுத்துங் கொடுத்து முடிக்க. இனிச் செருவிற்கு ஏற்புழிக் கோடலென்பதனற் செருக்களமென வல்லெழுத்தே கொடுத்து முடிக்க.

தெரியுங்காலை என்றதனன் எருவின்குறுமை செருவின்கடுமை என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட் சென்றுழி வல்லெழுத்து வீழ்தலும் எருவஞாற்சி செருவஞாற்சி என இயல்பு கணத்துக்கண் அம்முப் பெறுதலும் கொள்க. மகரம் மென்மையு மிடைமையும் (எழு - கடு0) என்பதனற் கெடுக்க.

தம்மொற்று மிகூஉம் என உடம்பொடு புணர்த்துச் சூத்திரஞ் செய்தலின் உகரம் நீட வருதலுங் கொள்க. வருஉம் தருஉம் டூஉம் என வரும். (கஅ)

### முகர உகர ஈறு

உசுக. முகர உகரம் நீடிடன் உடைத்தே*
உகரம் வருதல் ஆவயி னான.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தது. வல்லெழுத்தி னோடு உகரம் பெறுதலின்.

(இ - ள்.) முகர உகரம் நீடிடன் உடைத்து—உகர ஈற்றுச் சொற்களுள் முகரத்தோடு கூடிய உகர ஈற்றுச்சொல் நீண்டு முடியும் இடனுடைத்து ஆவயின் ஆன உகரம் வருதல்—அவ் விடத்து உகரம வந்து முடியும்; எ - று.

(எ - டு) எழூஉக்கதவு சிறை தானை படை என வரும்.

நீடிடனுடைத்து என்றதனான் நீளாதும் உகரம் பெறாதும் வருவதுமாயிற்று. குழூத்தோற்றம் என வரும்.

இன்னும் இதனாற் பழுக்காய் என அல்வழிக்கண்ணும் இவ்விதி யன்றி வருதல் கொள்க.

ஆவயினன என்றதனாற் பெரும்பான்மை செய்யுட்கண் நீண்டு உகரம் பெற்று,

"எழூஉத்தாங்கிய கதவுமலைத்தவர்
குழூஉக்களிற்றுக் குறும்புடைத்தலின்' (புறம்-கள)

எனவும்,

"பழூஉப்பல் லன்ன பருவுகிர்ப் பாவடி" (குறுந்-கஅ0)

எனவும் வருதல் கொள்க. (இக)

### 'ஓடு' என்னும் மரப்பெயர்

உசுஉ. ஒடுமரக் கிளவி உதிமர இயற்றே.

இஃது அவ்வீற்று மரப்பெயர் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தது.

(இ - ள்.) ஒடு மரக் கிளவி—ஒடுவென்னும் மரத்தினை உணர நின்ற சொல், உதிமர இயற்று—உதியெனனும் மரத்தின் இயல்பிற்றாய் மெல்லெழுத்துப பெற்று முடியும்; எ - று.

(எ - டு.) ஒடுங்கோடு செதிள் தோல் பூ என வரும். மரமென்றார் ஓடு வென்னும் நோயை நீக்குதற்கு.

முன்னர் உதிமரத்தின் பின்னர் அம்முப் பெறுகின்ற புளிமரம் வைத்த இயைபான் இதற்கு அம்முப் பேறுங் கொள்க. ஒடுவங் கோடு என வரும் (சு0)

### சுட்டுப் பெயர்க்குச் சாரியை

உசுரு. சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலையும்
ஒற்றிடை மிகாஅ வல்லெழுத் தியற்கை.

* முகர வுகரம் நீடும் என்றது செய்யுள் வழக்குப் பற்றி.

இது சுட்டுப் பெயர்க்கு வல்லெழுத்து விலக்கிச் சாரியைவகுத்தது.

(இ - ள்.) சுட்டு முதல் இறுதி உருபியல் நிலையும்—சுட்டெழுத்தினை முதலாகவுடைய உகர ஈற்றுச் சொற்கள் பொருட் புணர்ச்சிக்கண்ணும் உருபுபுணர்ச்சியிற் கூறிய இயல்பிலே நின்று அன் சாரியை பெற்று உகரங்கெட்டு முடியும், வல்லெழுத்து இயற்கை ஒற்று இடை மிகாஅ—வல்லெழுத்து இயற்கையாகிய ஒற்று இடைக்கண் மிகா; எ - று.

(எ - டு) அதன் கோடு இதன் கோடு உதன் கோடு செதின் தோல் பூ என வரும். ஒற்றிடை மிகா எனவே சாரியை வகுப்ப வல்லெழுத்து மிகாவென்பது பெற்றாம்.

வல்லெழுத் தியற்கை யென்றதனான் உகரஈற்றுள் எருவுஞ் செருவும் ஒழித்து ஏனையவற்றிற்கும் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. கடுவின்குறை ஒடுவின் குறை எழுவின் புறம் கொழுவின்கூர்மை என வரும். இன்னும் இதனானே உதுக்காண் என்றவழி வல்லெழுத்து மிகுதலும் கொள்க. (கசு)

## கூ. ஊகார ஈறு

### அல்வழியில் ஊகார ஈற்றுப் பெயர்

உகூச. **ஊகார இறுதி ஆகார இயற்றே**

இது நிறுத்த முறையானே ஊகார ஈறு அல்வழிக்கண் புணருமாறு கூறுகின்றது.

(இ - ள்.) ஊகார இறுதி ஆகார இயற்று—ஊகார ஈற்றுப் பெயர் அல்வழிக்கண் ஆகார ஈறறு அல்வழியின் இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்குமுடியும்; எ - று.

(எ - டு) கழூஉக் கடிது* கொண்மூக் கடிது சிறிது தீது பெரிது எனவரும் (கஉ)

### ஊகார ஈற்று வினைச்சொல்

உகூரு. **வினையெஞ்சு கிளவிக்கும் முன்னிலை மொழிக்கும்
நினையுங் காலை அவ்வகை வரையார்.**

இஃது இவ் வீற்று வினையெச்சத்திற்கு மிக்கு முடியும் என்றலின், எய்தாத தெய்துவித்ததூஉம் முன்னிலை வினைக்கு இயல்பும் உறழ்பும் மாற்றுதலின் எய்தியது விலக்கியதூஉம் நுதலிற்று.

(இ - ள்) வினையெஞ்சு கிளவிக்கும்—ஊகார ஈற்று வினையெச்சமாகிய சொற்கும், முன்னிலை மொழிக்கும்—முன்னிலை வினைச்சொற்கும், நினையுங் காலை அவ்வகை வரையார்— ஆராயுங்

* கழூஉக் கடிது என்பது "பூகர வுகரம் நீடிட னுடைத்தே" என்னும் நூற்பாவிற் கேற்றதாய்த் தெரிகின்றது.

காலத்து அவ் வல்லெழுத்து மிக்கு முடியுங் கூற்றினை நீக்கார்; எ - று.

(எ - டு) உண்ணூக் கொண்டான் சென்றான் தந்தான் போயினன் எனவும், கைதூக் கொண்டான் சாத்தா தேவா பூதா எனவும் வரும்.

நினையுங்காலை என்றதனான் இவ்வீற்று உயர்திணைப் பெயர்க்கும் அல்வழிக்கண் வல்லெழுத்துக் கொடுத்து முடிக்க. ஆடூஉக்குறியன் மகடூஉக்குறியள் என வரும். உயர்திணைப் பெயர் எடுத்தோதி முடிப்பாராதலின் அம்முடிபுபெறுமை கருதி ஈற்றுப் பொது விதியான்* முடியாது இலேசான் முடித்தாம். (கூக)

வேற்றுமையில் ஊகார ஈறு

உகூகூ. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.

இஃது ஊகார ஈறு வேற்றுமைக்கண் முடியுமாறு கூறுகின்றது.

(இ - ள்.) வேற்றுமைக் கண்ணும் அதனோரற்று—ஊகார ஈறு வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண்ணும் ஆகார ஈற்று அல்வழிபோல வல்லெழுத்து மிக்கு முடியும், எ - று.

(எ - டு.) சமூஉக் கடுமை சிறுமை தீமை பெருமை கொண்மூக் குழாம் செலவு தோற்றம் மறைவு என வரும். (கூச)

குற்றீற்று ஊகாரமும் தனிமொழி ஊகாரமும்

உகூஎ. குற்றெழுத் திம்பரும் ஓரெழுத்து மொழிக்கும்
நிற்றல வேண்டும் உகரக் கிளவி.

இஃது இயைபு வல்லெழுத்தினோடு உகரம் வகுத்தலின் எய்தியதன் மேற் சிறப்பு விதி கூறுகின்றது.

(இ - ள்.) குற்றெழுத்து இம்பரும்—குற்றெழுத்தின் பின் வந்த ஊகார ஈற்று மொழிக்கும், ஓரெழுத்து மொழிக்கும் ஓரெழுத்தொருமொழியாகிய ஊகார ஈற்று மொழிக்கும், உகரக் கிளவி நிற்றல் வேண்டும்—உகரமாகிய எழுத்து நிற்றலை விரும்பும் ஆசிரியன்; எ - று.

(எ - டு.) உடூஉக் குறை செய்கை தலை புறம் எனவும், தூஉக் குறை செல்கை தலை புறம் எனவும் வரும்.

நிற்றல் என்றதனான் உயர்திணைப் பெயர்க்கும் வல்லெழுத்தும் உகரமுங் கொடுக்க. ஆடூஉக்கை மகடூஉக்கை செவி தலை புறம் என வரும். தொகைமரபினுள் இயல்பாதல் எய்தியவற்றை† ஈண்டு இருவழிக்கண்ணும் முடித்தார் ஈற்றுப் பொது ஒப்புமை கண்டு. (கூரு)

---

* ஈற்றுப் பொதுவிதி—'ஊகார விறுதி ஆகார வியற்றே' என்பது.

† இயல்பாதல் எய்தியவற்றை – தொகைமரபினுள் கக ஆம் நூற்பாவில் 'எல்லா வழியும் இயல்பென மொழிப' என்ற விதியால் இயல்பானவற்றை.

**'பூ' என்னும் பெயர்**

**௨௬௮. பூஎன் ஒருபெயர் ஆயியல் பின்றே
ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே.**

இஃது ஊகார ஈற்றுள் ஒன்றற்கு உகரமும் இயைபு வல்லெழுத்தும் விலக்கிப் பெரும்பான்மை மெல்லெழுத்துஞ் சிறுபான்மை வல்லெழுத்தும் பெறுமென எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

(இ - ள்.) பூவென் ஒருபெயர் அ இயல்பு இன்று—பூவென்னும் ஊகார ஈற்றையுடைய ஒரு பெயர் மேற்கூறிய உகரமும வல்லெழுத்தும பெற்று முடியும அவ் வியல்பினமையை உடைத்து, ஆவயின வல்லெழுத்து மிகுதலும உரித்து—அவ்விடத்து மெல்லெழுத்து மிக்கு முடிதலேயன்றி வல்லெழுத்து மிக்கு முடிதலும் உரித்து; எ - று.

(எ - டு.) பூங்கொடி சோலை தாமம் பந்து எனவும், பூக்கொடி செய்கை தாமம் பந்து எனவும் வரும்.

பூ வென்பது பொலிவென்னும் வினைக்குறிப்பை உணர்த்தாது நிற்றற்கு ஒரு பெயரென்றார். (௬௬)

**'ஊ' என்னும் பெயர்**

**௨௬௯. ஊஎன் ஒருபெயர் ஆவொடு சிவணும்.**

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, உகரமும் வல்லெழுத்தும் விலக்கி னகரம் விதித்தலின்.

(இ - ள்.) ஊவென் ஒரு பெயர்—ஊவெனத் தசையை உணர்த்திநின்ற ஓரெழுத்தொருமொழி, ஆவொடு சிவணும்—ஆகார ஈற்றில் ஆவெனனுஞ்சொல் வல்லெழுத்துப் பெறாது னகர ஒற்றுப் பெற்று முடிந்தாற்போல னகர ஒற்றுப் பெற்று முடியும; எ - று.

(எ - டு) ஊவென நிறுத்தி னகர ஒற்றுக்கொடுத்து ஊன் குறை செய்கை தலை புறம் என முடிக்க. ஊ வென்பது தசையை உணர்த்திநின்ற வழக்கு ஆசிரியர் நூல் செய்த காலத்து வழக்கு. அன்றித் தேய வழக்கேனும் உணர்க. (௬௭)

**இதுவும் அது**

**௨௭௦. அக்கென் சாரியை பெறுதலும் உரித்தே
தக்கவழி அறிதல் வழக்கத் தான.**

இஃது எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது.

(இ - ள்.) அக்கென் சாரியை பெறுதலும் உரித்து—அதிகாரத்தான் நின்ற ஊவென்னும் பெயர் முற்கூறிய னகரத்தோடு அக்கென்னுஞ் சாரியை பெற்று முடிதலும் உரித்து, வழக்கத்

தான தக்கவழி அறிதல்—அம்முடிபு வழக்கிடத்துத் தக்க இடம் அறிக; எ - று.

தக்க வழி யறிதல் என்றதனாற் சாரியை பெற்றுழி னகரம் விலக்குண்ணாது நிற்றலும் முன் மாட்டேற்றாற் விலக்குண்ட வல்லெழுத்துக் கெடாது நிற்றலுங் கொள்க.

(எ - டு.) ஊனக்குறை செய்கை தலை புறம் என வரும்.

வழக்கத்தான என்றதனான் ஊகார ஈற்றுச் சொல்லிற்கு உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட் சென்றுழி இயைபு வல்லெழுத்துக் கெடுக்க. கொண்மூவின்குழாம் உடூஉவின்றலை ஊவின்குறை என வரும். (சுஅ)

'ஆடூஉ' 'மகடூஉ' என்னும் பெயர்கள்

உஎக. ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயர்க்கும்
இன் இடை வரினும் மான* மில்லை.

இது 'குற்றெழுத் திம்பரும்' (எழு - உசுஎ) என்பதனுள் நிற்றலென்ற இலேசான் எய்திய வல்லெழுத்தேயன்றிச் சாரியையும் வகுத்தலின் எய்தியதன் மேல் சிறப்பு விதி உணர்த்தியது.

(இ - ள்.) ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயர்க்கும்—ஆடூஉ மகடூஉவாகிய உயர்திணைப்பெயர் இரண்டிற்கும், இன் இடை வரினும் மானம் இல்லை—முன்னெய்திய வல்லெழுத்தே யன்றி இன்சாரியை இடையே வரினுங் குற்றமில்லை; எ - று.

(எ - டு.) ஆடூஉவின்கை மகடூஉவின்கை செவி, தலை புறம் என வரும்.

மானமில்லை என்றதனான் இன்பெற்றுழி மேல் எய்திய வல்லெழுத்து வீழ்க்க. (சுகு)

எ. எகர ஒகர ஈறு

அல்வழியில் எகர ஒகர ஈறுகள்

உஎஉ. எகர ஒகரம் பெயர்க்கீ றாகா
முன்னிலை மொழிய என்மனார் புலவர்
தேற்றமும் சிறப்பும் அல்வழி யான.

இஃது எகர ஒகரம் ஈறாம் இடம் உணர்த்துகின்றது.

(இ - ள்.) தேற்றமும் சிறப்பும் அல்வழி ஆன—தெளிவுப் பொருளுஞ் சிறப்புப் பொருளும் அல்லாத வேற்றுமைப் பொருண்மையிடத்து அளபெடுத்துக் கூறுதலின் உளவாகிய, எகர ஒகரம் பெயர்க்கு ஈறாகா எகர ஒகரங்கள் பெயர்க்கு ஈறாய் வாரா வினைக்கு ஈறாய் வரும், முன்னிலை மொழிய என்மனார் புலவர்—

* மானம் - அளவு, வரை. வரைதல் - நீக்குதல். 'உருவு கொளல் வரையார்' (எழு - கசo) என்றும், 'அவ்வகை வரையார்' (எழு-உசுஇ) என்றும் ஆசிரியர் கூறுதல் காண்க. மானமில்லை, வரைவில்லை, விலக்கில்லை.

அவைதாம் தன்மையினும் படர்க்கையினும் வாரா, முன்னிலைச் சொல்லிடத்தன வாமென்று கூறுவர் புலவர்; எ - று.

எனவே, தெளிவுப் பொருளினுஞ் சிறப்புப் பொருளினும் வந்து பெயர்க்கு ஈறும் இடைச்சொல்லாகிய எகர ஒகரம் மூன்றிடத்திற்கும் உரியவாமென்று பொருளாயிற்று என இங்ஙனம் அருத்தாபத்தியாற் கொண்டதற்கு இலக்கணம் மேலைச் சூத்திரத்தாற் கூறுப.

(உ - ம்.) ஏஎ*க்கொற்று ஓஓ†க்கொற்று சாத்தா தேவா பூதா என வரும்.

இவை எனக்கு ஒரு கருமம் பணி எனவும், இங்ஙனஞ் செய்கின்றதனை ஒழி எனவும் முன்னிலையேவற் பொருட்டாய் வந்தன. இதற்கு வல்லெழுத்துப் பெறுமாறு மேலே கூறுப. (எ0)

எகர ஒகர இடைச் சொற்கள்

உஎரு. தேற்ற எகரமும் சிறப்பின் ஒவ்வும்
மேற்கூ றியற்கை வல்லெழுத்து மிகா.

இஃது எய்தியது இகந்துபடாமற் காத்து எய்தாததெய்துவித்தது.

(இ - ள்.) தேற்ற எகரமுஞ் சிறப்பின் ஒவ்வும் மேற் கூறு இயற்கை—முன்னர் அருத்தாபத்தியாற்‡ பெயர்க்கண் வருமென்ற தேற்றப்பொருண்மையில் எகரமுஞ் சிறப்புப்பொருண்மையில் ஒகரமும் மூன்றிடத்தும் வருமென்ற இலக்கணத்தனவாம், வல்லெழுத்து மிகா—வல்லெழுத்து மிக்கு முடியா, எனவே முன்னிலைக்கண் வருமென்ற எகர ஒகரங்கள் வல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(உ - ம்.) யானேஎகொண்டேன் நீயேஎகொண்டாய் அவனேஎ கொண்டான் எனவும், யானோஒகொடியன் நீயோஒகொடியை அவனோஒகொடியன்§ எனவும் பெயர்க்கண் ஈறாய் இயல்பாய் வந்தவாறு காண்க. இது முன்னர் எய்திய இலக்கணம் இகவாமற் காத்தார். முன் நின்ற சூத்திரத்தின் முன்னிலைக்கும் வல்லெழுத்து மிகுத்து எய்தாததெய்துவித்தார். இச்சூத்திரத்திற்கு அளபெடுத்தல் 'தெளி வினையும்' (சொல் உகூ) என்னும் சூத்திரத்தாற் கொள்க. எனவே, முடிவுபெற்றுழி இங்ஙனம் இடைச்சொல்லும் எடுத்தோதிப் புணர்ப்பரென்பதூஉம் பெற்றாம். (எக)

---

* ஏ - ஏவு. † ஓ - நீங்கு.

‡ அருத்தாபத்தி - இருவகைப் பொருள்களுள் ஒருவகைக்கு விதந்து கூறியதை இன்னொரு வகைக்கு இல்லையென்று கொள்ளுதல். முந்தின நூற்பாவில், தெளிவுப் பொருளினும் சிறப்புப் பொருளினும் வராது வினைக்கு ஈறாகும் எகர ஒகரம் முன்னிலைக் குரியவாம் எனவே தெளிவுப் பொருளினும் சிறப்புப் பொருளினும் வந்து பெயர்க்கு ஈறாம் இடைச் சொல்லாகிய எகர ஒகரம் மூன்றிடத்திற்கும் உரியவாம் என்று கொண்டது அருத்தாபத்தி.

§ இவ்வெடுத்துக்காட்டுகள் செய்யுள் வழக்கு.

அ. ஏகார ஈறு

அல்வழியில் ஏகார ஈற்றுப் பெயர்

உஎச. ஏகார இறுதி ஊகார இயற்றே.

இது நிறுத்த முறையானே ஏகார ஈறு அல்வழிக்கண் புணருமாறு கூறுகின்றது.

(இ - ள்.) ஏகார இறுதி—ஏகார ஈற்றுப்பெயர் அல்வழிக்கண், ஊகார இயற்று—ஊகார ஈற்று அல்வழியின் இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடியும், எ - று.

(எ - டு.) ஏக்கடிது சேக்கடிது சிறிது தீது பெரிது என வரும். (எஉ)

ஏகார இடைச் சொற்கள்

உஎரு. மாறுகோள் எச்சமும் வினாவும் எண்ணும்
கூறிய வல்லெழுத்து இயற்கை யாகும்.

இஃது இடைச் சொற்கள் இயல்பாய்ப் புணருமென எய்தாத தெய்துவித்தது.

(இ - ள்.) மாறுகோள் எச்சமும்—மாறுகோடலை யுடைய எச்சப் பொருண்மைக்கண் வரும் ஏகார ஈற்று இடைச் சொல்லும், வினாவும்—வினாப் பொருண்மைக்கண் வரும் ஏகார ஈற்று இடைச் சொல்லும், எண்ணும—எண்ணுப் பொருண்மைக்கண் வரும் ஏகார ஈற்று இடைச் சொல்லும், கூறிய வல்லெழுத்து இயற்கை யாகும்—முற்கூறிய வல்லெழுத்துப் பெறாது இயல்பாய் முடியும்; எ - று.

(எ - டு.) யானே கொண்டேன் சென்றேன் தந்தேன் போயினேன் என்புழி யான் கொண்டிலேன் என மாறு கொண்ட ஒழிவுபட நின்றது. நீயே கொண்டாய் சென்றாய் தந்தாய் போயினாய் எனவும், நிலனே நீரே தீயே வளியே கொற்றனே சாத்தனே எனவும் வரும்.

கூறிய என்றதனால் பிரிநிலை ஏகாரமும் ஈற்றசை ஏகாரமும் இயல்பாய் முடிதலுங் கொள்க. அவருள் இவனே கொண்டான் எனவும், 'கழியே' சிறுகுரல் நெய்தலொடு பாடோவாதே - கடலே, பாடெழுந்தொலிக்கும்' எனவும் வரும். (எகூ)

வேற்றுமையின் ஏகார ஈறு

உஎகூ. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே.

இஃது இவ் வீற்று வேற்றுமை முடிபு கூறுகின்றது.

(இ - ள்.) வேற்றுமைக்கண்ணும—ஏகார ஈற்று வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண்ணும, அதனோரற்று—ஊகார ஈறு அல்வழிபோல வல்லெழுத்து வந்துழி அவ்வல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(உ - ம்.) ஏக்கடுமை சிறுமை தீமை பெருமை எனவும், வேக்குடம் சாடி தூதை பானை எனவும் வரும்.

வேக்குடம் - வேதலையுடைய குடமென விரியும். (௭௪)

அதற்கு, மேலும் ஒரு முடிபு

௨௭௭. ஏயென் இறுதிக்கு எகரம் வருமே.

இது வல்லெழுத்தினோடு ஏகரம் விதித்தலின் எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது.

(இ - ள்.) ஏயென் இறுதிக்கு எகரம் வரும்—அவ் வேற்றுமைக்கண் ஏயெனனும் இறுதிக்கு எகரம் வரும்; எ - று.

(உ - ம்.) ஏஎக்கொட்டில் சாலை துளை புழை என வரும்.

உரையிற்கோடலால் எகாரம் ஏற்புழியும் வல்லெழுத்துப் பெறுதல் கொள்க. வருமொழி வரையாது கூறினமையின் இயல்பு கணத்துக்கண்ணும் வருமெனக் கொள்க. ஏஎநெகிழ்ச்சி நேர்மை என வரும் (௭௫)

'சே' என்னும் மரப்பெயர்

௨௭௮. சேஎன் மரப்பெயர் ஒடுமர இயற்றே.

இஃது அவ் வீற்றுள் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தது.

(இ - ள்.) சே என் மரப்பெயர்—பெற்றமன்றிச் சேவென்னும் மரத்தினை உணர்கின்ற பெயர், ஒடுமர இயற்று—ஒடுமரம் போல மெல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(உ - ம்) சேங்கோடு செதிள் தோல் பூ என வரும். (௭௬)

'சே' என்னும் விலங்கின் பெயர்

௨௭௯. பெற்றம் ஆயின் முற்றஇன் வேண்டும்.

இஃது இயைபு வல்லெழுத்து விலக்கி இன் வகுத்தது.

(இ - ள்.) பெற்றம் ஆயின்—முற்கூறிய சேவென்பது பெற்றத்தினை உணர்த்திய பொழுதாயின், முற்ற இன் வேண்டும்—முடிய இன்சாரியை பெற்று முடியவேண்டும்; எ - று.

(உ - ம்) சேவின்கோடு செவி தலை புறம் என வரும்.

முற்ற என்றதனானே முற்கூறிய சேவென்னும் மரப்பெயர்க்கும் ஏவென்பதற்கும் உருபிற்கு எய்திய சாரியை பொருட்கட் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்தல் கொள்க. சேவின்கோடு செதிள் தோல் பூ எனவும், ஏவின்கடுமை சிறுமை தீமை பெருமை எனவும் வரும்.

சாரியைப்பேறு வருமொழி வரையாது கூறினமையின் இயல்பு கணத்தும் இன்பெறுதல் கொள்க. சேவினலம் மணி வால் சேவினியில் சேவினடை சேவினொட்டம் என வரும்.

இன்னும் இதனானே இயல்புகணத்துக்கண் இன் பெறுது வருத லுங் கொள்க. செய்யுட்கண் 'தென்றற்கு வீணைக்குச் சேமணிக்குக் கோகிலத்திற்—கன்றிற்கு' என வரும். (எஎ)

## க. ஐகார ஈறு

### வேற்றுமையில் ஐயீற்றுப் பெயர்

௨௪௦. ஐகார இறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே.

இஃது ஐகார ஈறு வேற்றுமைக்கண் முடியுமாறு கூறுகின்றது. தொகை மரபினுள் 'வேற்றுமையல்வழி இஐ யென்னும்' (எழு-கதஅ) என்பதன்கண் அல்வழி முடித்தார்.

(இ - ள்.) ஐகார இறுதிப் பெயர்நிலை முன்னர்—ஐகார ஈற்றுப் பெயர்ச்சொன் முன்னர் அதிகாரத்தாற் கசதப முதன் மொழி வந்துழி, வேற்றுமையாயின் வல்லெழுத்து மிகும்—வேற்றுமைப் பொருட்புணர்ச்சியாயின் தமக்குப் பொருந்தின வல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(எ - டு.) யானைக்கோடு செவி தலை புறம் என வரும்.

வேற்றுமையாயின் என்றதனான் உருபு புணர்ச்சிக்கண்ணும் யானையைக் கொணர்ந்தானென வல்லெழுத்து மிகுதல் கொள்க. (எஅ)

### சுட்டுப் பெயர்

௨௪௧. சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலையும்.

இது வல்லெழுத்தினோடு வற்று வகுத்தலின் எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது.

(இ - ள்.) சுட்டு முதல் இறுதி - சுட்டெழுத்தினை முதலாக வுடைய ஐகார ஈற்றுப்பெயர், உருபியல் நிலையும்—உருபு புணர்ச்சியிற் கூறிய இயல்புபோலப் பொருட் புணர்ச்சிக் கண்ணும் வற்றுப் பெற்று முடியும்; எ - று.

(எ - டு.) அவைய‍ற்றுக்கோடு இவையற்றுக்கோடு உவையற்றுக் கோடு செவி தலை புறம் என வரும். இதனை 'வஃகான் மெய்கெட' (எழு - கஉஉ) என்பதனுன் முடிக்க. (எக)

### 'விசை' 'ஞெமை' 'நமை' என்னும் மரப்பெயர்கள்

௨௪௨. விசைமரக் கிளவியும் ஞெமையும் நமையும்
ஆமுப் பெயரும் சேமர இயல.

இது வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தலின் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

(இ - ள்.) விசைமரக் கிளவியும்—விசைத்தற்றொழிலன்றி விசையென்னும் மரத்தை உணராநின்ற சொல்லும், ஞெமையும்—

ஞெமை யென்னும் மரத்தினை உணரநின்ற சொல்லும், நமையும்—நமை யென்னும் மரத்தினை உணரநின்ற சொல்லும், ஆ முப்பெயரும்—ஆகிய அம்மூன்று பெயரும், சேமர இயல—வல்லெழுத்து மிகாது சேமரம்போல மெல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(எ - டு.) விசைங்கோடு ஞெமைங்கோடு நமைங்கோடு செதிள் தோல் பூ என வரும். இவை கசதப முதலிய மொழிமேல் தோன்றும் மெல்லெழுத்து* என்று உணர்க. (அ0)

'பனை' 'அரை' 'ஆவிரை' என்னும் மரப்பெயர்கள்

உ அ௩. பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்
நினையுங் காலை அம்மொடு சிவணும்
ஐயென் இறுதி அரைவரைந்து கெடுமே
மெய்அவண் ஒழிய என்மனார் புலவர்.

இஃது இயைபுவல்லெழுத்து விலக்கி அம்மு வகுத்தது.

(இ - ள்.) பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்—பனையென்னும் பெயரும் அரையெனனும் பெயரும் ஆவிரையென்னும் பெயரும, நினையுங் காலை அம்மொடு சிவணும்—ஆராயுங்காலத்து வல்லெழுத்து மிகாது அமமுச்சாரியையொடு பொருந்தி முடியும், ஐயென் இறுதி அரை வரைந்து கெடும்—அவ்விடத்து ஐயென் னும் ஈறு அரையென்னுஞ் சொல்லை நீக்கி ஏனை இரண்டிற்குங் கெடும், மெய் அவண் ஒழிய என்மனார் புலவர்—தனைனை ஊரப் பட்ட மெய்கெடாது அச்சொல்லிடத்தே நிற்க என்று கூறுவர் புலவர்; எ - று.

(எ - டு.) பனை ஆவிரை என நிறுத்தி அம்மு வருவித்து ஐகாரங் கெடுத்து ஒற்றின்மேலே அகரமேற்றிப் பனங்காய் ஆவிரங்கோடு செதிள் தோல் பூ என வரும். அரையென நிறுத்தி அம்முக் கொடுத்து ஐகாரங் கெடாது அரையங்கோடு செதிள் தோல் பூ என முடிக்க. வல்லெழுத்துக் கேடு மேலே 'கடிநிலையின்று' (எழு - உ அ௫) என்றத னாற் கூறுதும்.

நினையுங்காலை யென்றதனால் தாதுணை வழுதுணை தில்லை ஓலை தாழை என நிறுத்தி அம்முக்கொடுத்து ஐகாரங்கெடுத்துத் தாதுணங் காய் வழுதுணங்காய் தில்லங்காய் ஓலம்போழ் தாழங்காய் என முடிக்க. (அக)

'பனை' முன் 'அட்டு'

உ அ௪. பனையின் முன்னர் அட்டுவரு காலை
நிலையின் றாகும் ஐயென் உயிரே
ஆகாரம் வருதல் ஆவயி னான.

* 'கசதப முதலிய மொழிமேல் தோன்றும் மெல்லெழுத்து' என்பது தொகை மரபு க ஆம் நூற்பாவின் முற்பகுதி.

இது நிலைமொழிச் செய்கை நோக்கி எய்தாத தெய்துவித்தது.

(இ - ள்.) பனையின் முன்னர் அட்டுவரு காலை—முற் கூறிய வாறன்றிப் பனையென்னுஞ் சொன்முன்னர் அட்டென்னுஞ் சொல் வருமொழியாய் வருங்காலத்து, நிலையின்று ஆகும ஐயென் உயிர்—நிற்றலில்லையாகும ஐயென்னும் உயிர், ஆவயின ஆன ஆகாரம் வருதல்—அவ்விடத்து ஆகாரம் வந்து அம்மெய்ம் மேலேறி முடியும; எ - று.

(எ - டு.) பனாஅட்டு என வரும். இதற்கு* மூன்றாவதும் ஆறாவதும விரியும்.

ஆவயினான என்றதனால் ஓராநயம் விச்சாவாதி என்னும்* வேற்றுமை முடியுங் கேட்டாமூலம் பாருங்கல் என்னும் அல்வழி முடியுங் கொள்க. இவற்றுள் வடமொழிகளை* மறுத்தலும் ஒன்று. (அஉ)

'பனை முன் 'கொடி'

உ௮௩. கொடிமுன் வரினே ஐயவண் நிற்பக்
கடிநிலை யின்றே வல்லெழுத்து மிகுதி.

இது மேல் ஐகாரங் கெடுத்து அம்முப்பெறும் என்றார், ஈண்டு அது கெடாது நிற்கும் என்றலின் எய்தியது இகந்து படாமற் காத்தது அம்மு விலக்கி வல்லெழுத்து விதித்தலின் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்ததுமாம்.

(இ - ள்.) முன் கொடி வரின்—பனையென்னுஞ் சொன் முன்னர்க் கொடியென்னுஞ் சொல வரின், ஐ அவண் நிற்ப—கேடு ஓதிய ஐகாரம் ஆண்டுக் கெடாது நிறப, வல்லெழுத்து மிகுதி கடிநிலையின்று—வல்லெழுத்து மிக்கு முடிதல் நீக்கு நிலைமையினறு; எ - று.

(எ - டு) பனைக்கொடி என வரும். இதற்கு இரண்டாவதும் மூன்றாவதும் விரியும்.

கடிநிலையின்று என்றதனன் ஐகார ஈற்றுப்பெயர்களெல்லாம் எடுத்தோத்தானும் இலேசானும் அம்முச்சாரியையும் பிறசாரியையும் பெற்றுழி அதிகார வல்லெழுத்துக் கெடுத்துக் கொள்க.

இன்னும் இதனானே உருபிற்குச்சென்ற சாரியை பொருட்கட் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க. பனையின் குறை அரையின் கோடு ஆவிரையின்கோடு விசையின்கோடு ஞெமையின்கோடு நமையின் கோடு எனவும், தூதுணையின்காய் வழுதுணையின்காய் உழையின்கோடு வழையின்கோடு எனவும் வரும்.

பனைத்திரள் பனந்திரள் என்னும் உறழ்ச்சிமுடிபு தொகைமரபின் புறனடையாற் கொள்க. அல்வழியு மாதலின். அன்றி ஈண்டு அவணென்றதனாற் கொள்வாரும் உளர். (அக)

* வடமொழிகள் விச்சாவாதி கேட்டாமூலம் என்பன.

### திங்கட்பெயரும் நாட்பெயரும்

**௨௮௬. திங்களும் நாளும் முந்துகிளந் தன்ன.**

இஃது இயைபு வல்லெழுத்தினோடு இக்குச் சாரியையும் வல்லெழுத்து விலக்கி ஆன்சாரியையும் வகுத்தலின் எய்தியதன்மேற் சிறப்பு விதியும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதியுங் கூறுகின்றது.

(இ - ள்.) திங்களும் நாளும்—ஐகார ஈற்றுத் திங்களை உணர நின்ற பெயரும் நாளை உணரநின்ற பெயரும், முந்து கிளந்தன்ன—இகர ஈற்றுத் திங்களும் நாளும்போல இக்கும் ஆனும் பெற்று முடியும்; எ - று.

(எ - டு.) சித்திரைக்குக்கொண்டான் கேட்டையாற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும். சித்திரை நாளாயின் ஆன்சாரியை கொடுக்க. வல்லெழுத்துக்கேடு முன்னர்க் 'கடிநிலையின்று' (எழு - ௨௮௯) என்றதனாற் கொள்க.

திங்கள் முற்கூறிய முறையன்றிக் கூறினால் உழைங்கோடு அமைங்கோடு உடைங்கோடு என மெல்லெழுத்துக் கொடுத்துங் கலைங்கோடு கலைக்கோடு என உறழ்ச்சி எய்துவித்துங் கரியவற்றுக் கோடு குறியவற்றுக் கோடு நெடியவற்றுக்கோடு என ஐகார ஈற்றுப் பண்புப் பெயர்க்கு வற்றுக்கொடுத்து ஐகாரங்கெடுத்து வற்றுமிசை யொற்றென்று ஒற்றுக் கெடுத்தும் அவையத்துக் கொண்டான் அவையிற் கொண்டான் என அத்தும் இன்னுங் கொடுத்தும் பனையின் மாண்பு கேட்டையினொட்டினென இயல்புகணத்துக்கண் இன் சாரியை கொடுத்தும் முடிக்க. ஐகார ஈறு இன்சாரியை பெறுதல் தொகை மரபினுட் கூறுமையின் ஈண்டுக் கொண்டாம். (௮௬)

### 'மழை' என்னுஞ் சொல்

**௨௮௭. மழையென் கிளவி வளியியல் நிலையும்.**

இது வல்லெழுத்தினோடு அத்து வகுத்தலின் எய்தியதன் மேற் சிறப்பு விதியும் இயல்புவல்லெழுத்து விலக்கி இன் வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதியுங் கூறுகின்றது.

(இ - ள்.) மழையென் கிளவி—மழையென்னும் ஐகார ஈற்றுச் சொல், வளியியல் நிலையும—வளியென்னுஞ் சொல் அத்தும இன்னும் பெற்றுமுடிந்த இயல்பின்கண்ணே நின்று முடியும; எ - று.

(எ - டு.) மழையத்துக் கொண்டான் மழையிற் கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

ஈண்டு இன்பெற்றுழி வல்லெழுத்துக்கேடு 'கடிநிலையின்று' (எழு - ௨௮௯) என்றதனாற் கொள்க. சாரியைப் பேறு வருமொழி வரையாது கூறினமையின் இயல்புகணத்துக்கண்ணுங் கொள்க. மழையத்து ஞான்றான் மழையின் ஞான்றான் நிறுத்தினான் மாட்டினான் வந்தான் அடைந்தான் என ஒட்டுக. (௮௭)

'வேட்கை' முன் 'அவா'

உ௯௫. செய்யுள் மருங்கின் வேட்கை என்னும்
ஐயேன் இறுதி அவாமுன் வரினே
மெய்யொடுங் கெடுதல் என்மனார் புலவர்
டகாரம் ணகார மாதல் வேண்டும்.

*இது வேற்றுமைக்கண் செய்யுண் முடிபு கூறுகின்றது.*

(இ - ள்.) *செய்யுள் மருங்கின் வேட்கை என்னும் ஐயேன் இறுதி—செய்யுளிடத்து வேட்கையென்னும் ஐகார ஈற்றுச்சொல் அவா முன் வரின—அவா வென்னுஞ் சொற்கு முன்னர் வரின், மெய்யொடுங் கெடுதல் எனமனார் புலவர்—அவ்வைகாரந் தான் ஊர்ந்த மெய்யோடுங்கூடக் கெடுமென்று கூறுவர் புலவர், டகாரம் ணகாரம் ஆதல் வேண்டும்—அவ்விடத்து நின்ற டகார ஒற்று ணகார ஒற்றாய்த் திரிதல் வேண்டும்; எ - று.*

(எ - டு.) *'வேணவா நலிய வெய்யவுயிரா'* என வரும்.

*வேட்கையாவது பொருள்கள்மேல் தோன்றும் பற்றுள்ளம். அவாவாவது அப் பொருள்களைப் பெறவேண்டு மென்று மேன்மேல் நிகழும் ஆசை எனவே, வேட்கையா லுண்டாகிய அவாவென மூன்றனுருபு விரிந்தது. இதனை வேட்கையும் அவாவுமென அல்வழி யென்பாரும் உளர். இங்ஙனங் கூறுவார் பாறங்கல் என்பதனை அம்முக் கொடுத்து ஈண்டு முடிப்பர்.* (௮௬)

## ௬௦. ஓகார ஈறு

### அல்வழியில் ஓகார ஈற்றுப் பெயர்

உ௯௬. ஓகார இறுதி ஏகார இயற்றே.

*இஃது ஓகார ஈற்று அல்வழி முடிபு கூறுகின்றது.*

(இ - ள்.) *ஓகார இறுதி ஏகார இயற்று—ஓகார ஈற்றுப் பெயர்ச்சொல், ஏகார ஈற்று அல்வழியின் இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.*

(எ - டு.) ஓக்கடிது சோக்கடிது சிறிது தீது பெரிது எனவரும். (௮௭)

### ஓகார இடைச்சொல்

உ௯௭. மாறுகோள் எச்சமும் வினாவும் ஐயமும்
கூறிய வல்லெழுத் தியற்கை யாகும்.

*இஃது இடைச்சொல் முடிபு கூறலின் எய்தாத தெய்துவித்தது.*

---

* இந்நூற்பாவின்படி, வேட்கை + அவா = வேணவா என்று முடிக்காமல், வேண் + அவா = வேணவா என்றே முடிக்கவும் கூடும். வேள்— வேண், ஓ. தோ; பெள் - பெண்.

(இ - ள்.) மாறுகொள் எச்சமும் — மாறுபாட்டினைக் கொண்ட எச்சப்பொருண்மையை ஒழிபாகவுடைய ஓகாரமும், வினாவும்—வினாப்பொருண்மையையுடைய ஓகாரமும், ஐயமும—ஐயப் பொருண்மையையுடைய ஓகாரமும், கூறிய வல்லெழுத்து இயற்கை யாகும்—முற்கூறிய வல்லெழுத்தினறி இயல்பாய் முடியும்; எ- று.

(எ - டு.)* யானோ கொண்டேன் எனவும், நீயோ கொண்டாய் எனவும் பத்தோ பதினொன்றோ, புற்றோ புதலோ எனவும் வரும்.

• கூறிய என்றதனான் 'யானோ தேறே னவர்பொய் வழங்கலரே' (குறுந்-உக.) எனப் பிரிநிலையும், நன்றோ தீதோ கண்டது எனத் தெரிநிலையும், ஓஒ கொண்டான் எனச் சிறப்பும், 'குன்றுறழ்ந்த களிறென்கோ கொய்யுளைய மாவென்கோ' (புறம் - கூஅஎ) என எண்ணுநிலையும் வல்லெழுத்து மிகாது இயல்பாய் முடிதல் கொள்க. இதனானே ஈற்றசை வருமேனும் உணர்க. (அஅ)

இதுவும் அது

உகூக. ஒழிந்ததன் நிலையும் மொழிந்தவற் றியற்றே.

இதுவும் அது.

(இ - ள்.) ஒழிந்ததன் நிலையும் மொழிந்தவற்று இயற்று— ஒழியிசை ஓகாரத்தினது நிலையும் முற்கூறிய ஓகாரங்களின் இயல்பிற்றாய் இயல்பாய் முடியும்; எ - று.

(எ - டு.) கொளலோ கொண்டான், செலலோ சென்றான், தரலோ தந்தான், போதலோ போயினான் என ஓசை வேற்றுமையான் ஒரு சொல் தோன்றப் பொருள் தந்து நிற்கும். (அகூ)

•வேற்றுமையில் ஓகார ஈற்றுப் பெயர்

உகூஉ. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே
ஓகரம் வருதல் ஆவயி னான.

இஃது ஓகார ஈற்று வேற்றுமை முடிபு கூறுகின்றது.

(இ - ள்.) வேற்றுமைக் கண்ணும் அதனோரற்று—ஓகார ஈறு வேற்றுமைக்கண்ணும் அவ் வோகார ஈற்று அல்வழியோடு ஒத்து வல்லெழுத்து மிக்குமுடியும், ஆவயினான ஒகரம் வருதல் —அவ்விடத்து ஒகரம வரும்; எ - று.

(எ - டு.) ஓஒக்கடுமை கோஒக்கடுமை சிறுமை தீமை பெருமை என வரும். (கூ0)

'கோ' முன் 'இல்'

உகூஙூ. இல்லொடு கிளப்பின் இயற்கை யாகும்.

---

* கொளலோ கொண்டான்—கொண்டிலன். இங்ஙனமே பிறவும்.

இஃது எய்தியது விலக்கிற்று. என்னை? முன்னர் வன்கணம் வந்துழியே ஒகரம் பெறுமென வரையாதும் நிலைமொழித்தொழில் வரையாதுங் கூறலின் நான்கு கணத்துக்கண்ணுஞ் சேறுமாகலின்.

(இ - ள்.) இல்லொடு கிளப்பின் இயற்கையாகும்—ஓகார ஈற்றுக் கோவென்னும் மொழியினை இல்லெனனும் வருமொழியோடு சொல்லின ஒகரம் மிகாது இயல்பாய் முடியும்; எ - று.

(எ - டு.) கோவில் என வரும் கோவென்றது உயர்திணைப் பெயரன்றோ வெனின், கோவந்ததென்று அஃறிணையாய் முடிதலின் *அஃறிணைப்பாற் பட்டதென்க. (௧௧)

சில ஈறுகட்குச் சாரியை

௨௯௪. உருபியல் நிலையும் மொழியுமா ருளவே
ஆவயின் வல்லெழுத் தியற்கை யாகும்.

இது வல்லெழுத்து விலக்கிச் சாரியை வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ - ள்.) உருபியல் நிலையும் மொழியுமாருள—ஓகார ஈற்று மொழிகளுட் பொருட்புணர்ச்சிக்கண் உருபு புணர்ச்சியது இயல்பிலே நின்று ஒன்சாரியை பெற்று முடியும் மொழிகளும் உள, ஆவயின் வல்லெழுத்து இயற்கையாகும்—அவ்விடத்து வல்லெழுத்து இயல்பாய் முடியும்; எ - று.

(எ - டு.) கோஒன்கை செவி தலை புறம் என வரும்.

சாரியைப்பேறு வருமொழி வல்லெழுத்தை விலக்காமை இதனாற் பெற்றாம். (௧௨)

௧௧. ஔகார ஈறு

இருவழியினும் ஔகார ஈற்றுப்பெயர்

௨௯௫. ஔகார இறுதிப் பெயர்நிலை முன்னர்
அல்வழி யானும் வேற்றுமைக் கண்ணும்
வல்லெழுத்து மிகுதல் வரைநிலை யின்றே
அவ்விரு ஈற்றும் உகரம் வருதல்
செவ்வி தென்ப சிறந்திசி னோரே.

இஃது ஔகார ஈறு இருமொழியும் முடியுமாறு கூறுகின்றது.

(இ - ள்.) ஔகார இறுதிப்பெயர்நிலை முன்னர்—ஔகாரம் இறுதியாகிய பெயர்ச்சொன் முன்னர் வல்லெழுத்து முதன் மொழி வருமொழியாய் வரின் அல்வழியானும் வேற்றுமைக்

* அஃறிணைப்பாற் படுதலாவது சொல்லால் அஃறிணையாயும் பொருளால் உயர்திணையாயு மிருத்தல்.

கண்ணும்—அல்வழிக்கண்ணும் வேற்றுமைக் கண்ணும், வல்லெழுத்து மிகுதல வரைநிலையின்று—வல்லெழுத்து மிக்கு முடிதல் நீக்கு நிலைமையின்று, அவ்விரு ஈற்றும் உகரம வருதல் செவ்வி தென்ப சிறந்திசினோர்—அவவிருகூற்று முடிபின் கண்ணும் நிலைமொழிக்கண் உகரம் வந்து முடிதல் செவ்வி தென்று சொல்லுவர் சிறந்தோர்; எ - று.

(எ - டு.) கெளவுக்கடிது சிறிது தீது பெரிது எனவும், கடுமை சிறுமை தீமை பெருமை எனவும வரும்.

செவ்விதென்றதனன் மென்கணத்தும் இடைக்கணத்தும் உகரம் பெறுதலும் கொள்க. கெளவுஞெமிர்ந்தது ஞெமிர்ச்சி எனவும், வெளவு வலிது வலிமை எனவும் வரும்.

நிலைமொழி யென்றதனுற் கெளவின்கடுமை என உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட்சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்வுங் கொள்க.

இன்னும் இதனனே ஐகாரமும் இகரமும் வேற்றுமைக்கண் உருபு தொகையாயுழி இயல்பாதல் கொள்க. (கஉ)

உயிர்மயங்கியல் முற்றிற்று.

## அ. புள்ளிமயங்கியல்

[மெய்யீறுகளின் புணர்ச்சி யிலக்கணம் உணர்த்துவது]

### க. மெல்லொற்று ஈறுகள்

#### இருவழியிலும் ஞகார ஈற்றுத் தொழிற் பெயர்

உகூசு. ஞகாரை ஒற்றிய தொழிற் பெயர் முன்னர்
அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
வல்லெழுத் தியையின் அவ்வெழுத்து மிகுமே
உகரம் வருதல் ஆவயி னான.

என்பது சூத்திரம்.

நிறுத்த முறையானே உயிரீறு புணர்த்துப் புள்ளியீறு வன்கணத் தோடுஞ் சிறுபான்மை ஏனைக் கணத்தோடும் புணருமாறு கூறலின் இவ்வோத்துப் புள்ளிமயங்கியலென்னும் பெயர்த்தாயிற்று.

இச் சூத்திரம் ஞகார ஈறு வன்கணத்தோடு இருவழியும் புணருமாறு கூறுகின்றது.

(இ - ள்.) ஞகாரை ஒற்றிய தொழிற்பெயர் முன்னர்— ஞகாரம் ஈற்றின்கண் ஒற்றாகநின்ற தொழிற்பெயரின் முன்னர், அல்லது கிளப்பினும் வேற்றுமைக்கண்ணும்— அல்வழியைச் சொல்லுமிடத்தும் வேற்றுமையைச் சொல்லுமிடத்தும் வல்லெழுத்து இயையின் அவ்வெழுத்து மிகும்— வல்லெழுத்து முதன்மொழி வருமொழியாய் வரின் அவ்வல்லெழுத்து வருமொழிக்கண் மிக்கு முடியும், ஆவயின் ஆன உகரம் வருதல்— அவ்விடத்து உகரம் வரும்; எ - று.

(எ - டு.) உரிஞுக்கடிது சிறிது தீது பெரிது எனவும், உரிஞுக் கடுமை சிறுமை தீமை பெருமை எனவும் வரும். (க)

#### அதற்கு மேலும் ஒரு முடிபு

உகூஎ. ஞநமவ இயையினும் உகரம் நிலையும்.

இஃது அவ் வீறு மென்கணத்தோடும் இடைக்கணத்து வகரத் தோடும் முடியுமென எய்தாத தெய்துவித்தது.

(இ - ள்.) ஞநமவ இயையினும் உகரம் நிலையும்— அஞ்ஞகார ஈறு வன்கணமன்றி ஞநமவ முதன்மொழி வருமொழியாய் வரினும் நிலைமொழிக்கண் உகரம் நிலைபெற்று முடியும்; எ - று.

(எ - டு.) உரிஞுஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் வரும்.

யகரத்தோடும் உயிரோடும் புணருமாறு தொகைமரபினுள் "உகரமொடு புணரும்" (எழு-கககூ) என்பதனுற் கூறினர். (உ)

அல்வழிகளில் நகர ஈறு

உகூஅ. நகர இறுதியும் அதனோ ரற்றே.

இது நகர ஈறு முற்கூறிய கணங்களோடு அல்வழிக்கண் முடியுமாறு கூறி எய்தாத தெய்துவிக்கின்றது.

(இ - ள்) நகர இறுதியும்—நகர ஈற்றுப்பெயரும் முற்கூறிய கணங்களோடு புணருமவழி, அதனோரற்று—அஞ் ஞகர ஈற்றுத் தொழிற்பெயர் இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்துழி அவ்வெழுத்து மிக்கு உகரம் பெற்றும ஞநமவ வந்துழி உகரம் பெற்றும் முடியும்; எ - று.

(எ - டு.) பொருநுக்கடிது வெரிநுக்கடிது சிறிது தீது பெரிது எனவும், ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும் வரும். முடிபு ஒப்புமை நோக்கி நகர ஈறு ஈண்டுப் புணர்த்தார். ஈண்டு வேற்றுமையொழித்து மாட்டேறு* சென்றதென்று உணர்க. (கூ)

வேற்றுமையில் நகர ஈறு

உகூகூ. வேற்றுமைக்கு உக்கெட அகரம் நிலையும்.

இது நிலைமொழி உகரம் விலக்கி அகரம் வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

(இ - ள்) வேற்றுமைக்கு—அந்நகர ஈறு வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கு, உக்கெட அகரம் நிலையும்—மேலெய்திய உகரங் கெட அகரத்தோடு நிலைபெற்றுப் புணரும்; எ - று.

(எ - டு.) பொருநக்கடுமை வெரிநக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை என வரும். அகரநிலையுமென்றது உகரங் கெட என்றதனுன் உருபிற்குச் சென்ற சாரியை பொருட்கட் சென்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்வுஞ் சிறுபான்மை உகரப்பேறுங் கொள்க. வெரிநின்குறை பொருநின்குறை உரிஞின் குறை எனவும் 'உயவல் யானை வெரிநுச் சென்றனன்' (அகம்-கூடு) எனவும் வரும். யானையினது முதுகின்மேற் சென்றனனீ என விரிக்க.

பொருந் என்பது ஒரு சாதிப்பெயரும் பொருந்துதலென்னும் வினைப் பெயருமாம். (ச)

---

* வேற்றுமையொழித்து மாட்டேறு சென்றது - முந்தின நாற்பாக்களில் ஞகர விறுதிக்கு இருவழியும் கூறப்பட்டன. ஆகையால், அதனோரற்றே என்னும் மாட்டேறு நகர விறுதிக்கும் இருவழியும் கொள்ள வைத்தல் வேண்டும். ஆனல், பிந்தின நூற்பாவில் வேற்றுமை வழியை விதந்து கூறியிருப்பதால், அம்மாட்டேறு வேற்றுமை வழியை விலக்கிற்றென்பது.

'வெரிந்' என்னுஞ் சொல்

௩௦௦. வெரிந்என் இறுதி முழுதுங் கெடுவழி
வருமிடன் உடைத்தே மெல்லெழுத் தியற்கை.

இஃது அந் நகர ஈற்றுள் ஒருமொழிக்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

(இ - ள்.) வெரிந் என் இறுதி—வெரிநென்று சொல்லப் படும் நகர ஈற்றுமொழி, முழுதுங் கெடுவழி—தன் ஈற்று நகரம் முன்பெற்ற உகரத்தோடு எருசாமைக் கெட்ட இடத்து, மெல் லெழுத்து இயற்கை வரும் இடன் உடைத்து—மெல்லெழுத்துப் பெறும இயல்பு வந்து முடியும இட னுடைத்து; எ - று.

(எ - டு.) வெரிங்குறை செய்கை தலை புறம் என வரும். மெல்லெழுத்து வருமொழி நோக்கி வந்தது. 'வெயில்வெரி நிறுத்த பயிலிதழ்ப் பசுங்குடை' (அகம்-௩௭) என்பதில் நகர இகரமே இட் டெழுதுப.* (௬)

அதற்கு மேலும் ஒரு முடிபு

௩௦௧. ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே.

இஃது அதற்கு எய்தாதது எய்துவித்தது.

(இ - ள்.) ஆவயின்—அவ்வெரிந் என்னுஞ் சொல் அவ் வாறு ஈறு கெட்டு நின்ற இடத்து, வல்லெழுத்து மிகுதலும் உரித்து—மெல்லெழுத்தேயன்றி வல்லெழுத்து மிக்கு முடிதலும் உரித்து; எ - று.

(எ - டு.) வெரிக்குறை செய்கை தலை புறம் என வரும். (௭)

வேற்றுமையில் ணகர ஈறு

௩௦௨. ணகார இறுதி வல்லெழுத் தியையின்
டகார மாகும் வேற்றுமைப் பொருட்கே.

இது நிறுத்த முறையானே ணகார ஈறு வேற்றுமைப் பொருட்கண் புணருமாறு கூறுகின்றது.

(இ - ள்.) ணகார இறுதி—ணகார ஈற்றுப்பெயர், வல் லெழுத்து இயையின்—வல்லெழுத்து முதனமொழி வந்து இயையின், டகாரமாகும் வேற்றுமைப் பொருட்கு—டகார மாகத் திரிந்து முடியும் வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கண்; எ - று.

* "வெயில் வெரி நிறுத்த... இட்டெழுதுப" என்பது நனண என் னும் மூன்று இனவெழுத்துக்களுள் முதலதே முந்தினது என்பதை உணர்த்தும்.

(எ - டு.) மட்குடம் சாடி தூதை பானை என வரும். கண்கை புண்கை என்பன இரண்டாவதன் திரிபின்* முடிந்தன.

கவண்கால் பரண்கால் என்பன மேல் முடித்தும். (எ)

'ஆண்' 'பெண்' என்னுஞ் சொற்கள்

௩௦௩. ஆணும் பெண்ணும் அஃறிணை இயற்கை.

இஃது இவ் வீற்று விரவுப் பெயருள் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ - ள்.) ஆணும் பெண்ணும்—ஆணென்னும் விரவுப் பெயரும் பெண்ணென்னும் விரவுப் பெயரும், அஃறிணை இயற்கை —தொகை மரபினுள் 'மொழி முதலாகும்' என்பதனகண் அஃறிணைப்பெயர் முடிந்த இயல்பு (எழு - கசஎ) போலத் தாமும் வேற்றுமைக்கண் இயல்பாய முடியும்; எ - று.

(எ - டு.) ஆண்கை பெண்கை செவி தலை புறம் என வரும்.

இது தொகைமரபினுள், 'அஃறிணை விரவுப்பெயர்' (எழு - கடுரு) என்பதனுள் முடிந்த இயல்பன்றேவெனின், 'இவை ஆண்டு முடிந்தன போலத் தத்தம் மரபின் வினையாற் பாலறியப்படுவன அன்றி இரு திணைக்கண்ணும் அஃறிணையாய் முடிதலின,† அஃறிணைப் பெயரது இயல்போடு மாட்டெறிந்து முடித்தாரென்க. ஆண்கடிது பெண்கடிது என்னும் அல்வழி முடிபு 'மொழிமுதலாகும்' (எழு-கசஎ) என்பதன் கண் வருமொழி முற்கூறியவதனான் முடிக்க. (அ)

'ஆண்' என்னும் மரப்பெயர்

௩௦௪. ஆண்மரக் கிளவி அரைமர இயற்றே.

இது திரிபுவிலக்கிச் சாரியை வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

(இ - ள்.) ஆண்மரக் கிளவி—ஆண்பாலை* உணர்த்தாது ஆணென்னும் மரத்தினை உணரநின்ற சொல், அரை மர இயற்று—அரை யெனனும் மரம அம்முப்பெற்ற இயல்பிற்றாய்த் தானும் அம்முப்பெற்று முடியும்; எ - று.

(எ – டு.) ஆணங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

ஒன்றென முடித்தலான்* இயல்புகணத்துங் கொள்க. ஆணநார் இலை என வரும். (க)

விரவுட்பெயர்‡ என்றென்றற்கு மரமென்றார்.

---

* இரண்டாவதன் திரிபு—தொகை மரபு கடு ஆம் நூற்பாவிற் கூறிய உ ஆம் வேற்றுமைத் திரிபு.

† இருதிணைக் கண்ணும் அஃறிணையாய் முடிதல்—ஆண் வந்தது என முடிதல்.

‡ விரவுப்பெயர்—ஆண் என்னும் திணைப்பொதுப் பெயர்.

'விண்' என்னுஞ் சொல்

௩௦௫. விண்ணென வரூஉங் காயப் பெயர்வயின்
உண்மையு முரித்தே அத்தென் சாரியை
செய்யுள் மருங்கின் தொழில்வரு காலை.

இது செய்யுளுள் திரிபு விலக்கிச் சாரியை வகுத்து.

(இ - ள்.) விண் என வரூஉங் காயப் பெயர்வயின்—விண்ணென்று சொல்லவருகிற ஆகாயத்தை உணர்கின்ற பெயர்க்கண், அத்து என் சாரியை உண்மையும் உரித்து—அத்தெனனுஞ் சாரியை உண்டாதலும் உரித்து இல்லையாதலும் உரித்து, செய்யுள் மருங்கில் தொழில் வருகாலை—செய்யுளிடத்துத் தொழிற்சொல் வருங்காலத்து, எ - று.

(எ - டு.) 'விண்ணத்துக்கொட்கும் வண்ணத்தமரர்' 'விண்ணத்துக்கொட்கும் விரைசெலலூர்தியோய்' எனவும், விண்குத்து நீள்வரை வெற்ப களைபவோ' (நாலடி-௨௨௬) எனவும் வரும். விண்ணென்னுங் குறிப்பினை நீக்குதற்குக் காயமென்றார்.

விண்வத்துக்கொட்கும் என உடம்படுமெய் புணர்ந்து நிற்றலுங் கொள்க அதிகார வல்லெழுத்தன்மையிற் சாரியை வல்லெழுத்துக் கொடுக்க.* (௯0)

ணகர ஈற்றுத் தொழிற் பெயர்

௩௦௬. தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல.

இஃது இவ் வீற்றுட் சிலவற்றிற்குத் திரிபு விலக்கி உகரமும் வல்லெழுத்தும் விதிக்கின்றது.

(இ - ள்.) தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல—அல்வழிக்கண்ணும் வேற்றுமைக்கண்ணும் ஞகார ஈற்றுத் தொழிற் பெயரது இயல்பிறாய் வணகணம் வந்துழி வல்லெழுத்தும் உகரமும பெற்றும் மெனகணத்தும் இடைக்கணத்து வகரத்தும உகரம் பெற்றும் முடியும்; எ - று.

(எ - டு.) மண்ணுக்கடிது† பண்ணுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், மண்ணுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வன்மை எனவும் வரும்.

எல்லாமென்றதனால் தொழிற்பெயரல்லனவும் உகரமும் வல்லெழுத்தும் பெற்றும் இன்சாரியை பெற்றும் புணர்வன கொள்க. வெண்

* அதிகார.. கொடுக்க—முந்தின நூற்பாக்களில் இயல்பும் மெலி மிகலுமே விதிக்கப்பட்டிருப்பதால், வல்லெழுத்துப்பேறு அதிகாரப் படவில்லை. அதனால், சாரியைக்குரிய வல்லெழுத்துக் கொடுக்க.

† மண்ணுதல்—நீராடுதல், கழுவுதல், அலங்கரித்தல், வெட்டுதல் மண் பண் என்பன முதனிலைத் தொழிற்பெயர்.

னுக்கரை* 'தாழ்பெயல் கனைகுரல் கடுப்பப் பண்ணுப்பெயர்த்து' (மதுரைக்-௩௧0) எண்ணுப்பாறு† வெண்ணின் கரை என வரும். (௧௧)

ணகர ஈற்றுக் கிளைப்பெயர்

௩0௭. கிளைப்பெய ரெல்லாங் கொளத்திரி பிலவே.

இஃது இவற்றுட் சிலவற்றிற்குத் திரிபு விலக்கி இயல்பு கூறுதலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுகின்றது.

(இ - ள்.) கிளைப்பெயரெல்லாம்—ணகார ஈற்றுள் ஓரினத்தை உணர்நின்ற பெயரெல்லாம், கொளத் திரிபு இல—திரிபுடைய வென்று கருதும்படியாகத் திரிதலின்றாய் இயல்பாய் முடியும்; எ - று.

(எ - டு) உமண் என நிறுத்திக் குடி சேரி தோட்டம் பாடி எனத்தந்து முடிக்க.

இனி, எல்லாமென்றதனாற் பிற சாரியை பெற்று முடிவனவும் இயல்பாய் முடிவனவுங் கொள்க மண்ணப்பத்தம்‡ எண்ணநோலை§ எனவும், கவண்கால் பரண்கால் எனவுங் கொள்க.

கொள என்றதனால் ஏழாம்வேற்றுமைப் பொருண்மை உணரநின்ற இடைச்சொற்கள் திரிந்து முடிவனவுங் கொள்க. அங்கட்கொண்டான் இங்கட்கொண்டான் உங்கட்கொண்டான் எங்கட்கொண்டான் எனவும், ஆங்கட்கொண்டான் ஈங்கட்கொண்டான் ஊங்கட்கொண்டான் யாங்கட்கொண்டான் எனவும், அவட்கொண்டான் இவட்கொண்டான் உவட்கொண்டான் எவட்கொண்டான் எனவும் ஒட்டுக. (௧௨)

அல்வழியில் 'எண்' என்னும் உணவுப்பெயர்

௩0௮. வேற்றுமை யல்வழி எண்ணெனன் உணவுப்பெயர்
வேற்றுமை யியற்கை நிலையலு முரித்தே.

இஃது அவ்வீற்றுள் ஒன்று அல்வழியுள் வேற்றுமை முடிபு போலத் திரிந்து முடியுமாறு கூறுகின்றது.

(இ - ள்) வேற்றுமை அல்வழி — வேற்றுமையல்லாத இடத்து, எண்ணெனன் உணவுப்பெயர்—ஊரையடைப் பொருண்மை உணர்த்தாது எண்ணென்று சொல்லப்படும் உணவினை உணர்த்தும் பெயர், வேற்றுமை இயற்கை நிலையலும் உரித்து—வேற்றுமையது திரிந்து முடியும இயல்பு நிற்றலும் உரித்து; எ - று.

---

* வெண்—வெண்ணாறு (சோழநாட்டில் ஓர் ஆறு.)

† எண்ணுப்பாறு—எள்ளேற்றிய மரக்கலம். எண் — எள், பாறு—தோணி.

‡ மண்ணைப்பத்தம் - மண்ணுருண்டை.

§ எண்ணநோலை - எள்ளுருண்டை. நோலை என்பதே எள்ளுருண்டையைக் குறிக்குமாதலால், எண்ணநோலை என்பது நாண்கயிறு என்றாற்போல ஓரளவு மிகைபடக் கூறலாம்.

(எ - டு.) எட்கடிது சிறிது தீது பெரிது என வரும். உம்மையால் தொகைமரபினுள் 'மொழிமுதலாகும்' (எழு - கசஎ) என்றதனாற் கூறிய இயல்பு பெரும்பான்மையாயிற்று.

அஃது எண்கடிது என வரும். (கசு)

### இருவழியிலும் 'முரண்' என்னுந் தொழிற்பெயர்

**௩௦௯. முரணென் தொழிற்பெயர் முதலியல் நிலையும்.**

இஃது இவ்வீற்றுத் தொழிற்பெயருள் ஒன்றற்குத் தொழிற்பெயர்க்கு எய்திய உகரமும் வல்லெழுத்தும் விலக்கி இவ்வீற்று அல்வழி முடியும் வேற்றுமை முடியும் எய்துவித்தது.

(இ - ள்.) முரண் என் தொழிற்பெயர்—மாறுபாடு உணர்த்தும் முரணென்னுந் தொழிற்பெயர், முதலியல் நிலையும்—தொகை மரபிற் கூறிய அல்வழிக்கண் திரியாது முடிந்த இயல்பின்கண்ணும்* ஈண்டு வேற்றுமைக்கண் திரிந்து முடிந்த இயல்பின்கண்ணும்† நிலைபெற்று முடியும்; எ - று.

(எ - டு.) முரண்கடிது சிறிது தீது பெரிது ஞெகிழ்ந்தது நீண்டது மாண்டது வலிது எனவும், முரட்கடுமை சேனை தானை பறை எனவும், முரண் ஞெகிழ்ச்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் வரும். இதனைத் 'தொழிற்பெயரெல்லாம்' (எழு - ௩௦௬) என்றதன்பின் வையாத முறையன்றிக் கூற்றினான் முரண்கடுமை முரட்கடுமை, அரண்கடுமை அரட்கடுமை என்னும் உறழ்ச்சியுங் கொள்க. (கஎ)

### வேற்றுமையில் மகர ஈறு

**௩௧௦. மகர இறுதி வேற்றுமை யாயின்**
**துவரக் கெட்டு வல்லெழுத்து மிகுமே.**

இது முறையானே மகர ஈற்றுப்பெயர் வேற்றுமைக்கட் புணருமாறு கூறுகின்றது.

(இ - ள்.) மகர இறுதி வேற்றுமை ஆயின்—மகர ஈற்றுப் பெயர் வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண்ணாயின், துவரக் கெட்டு வல்லெழுத்து மிகும்—அந் நிலைமொழி மகரம் முற்றக் கெட்டு வருமொழி வல்லெழுத்து மிக்கு முடியும், எ - று.

(எ - டு.) மரக்கோடு செதிள் தோல் பூ என வரும். முண்டகக் கோதை எனவும் வரும்.

துவர என்றதனான் இயல்புகணத்துக்கண்ணும்‡ உயர்திணைப் பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும்§ மகரக்கேடு கொள்க. மர

* தொகைமரபில் அல்வழிக்கண் இயல்பு கூறியது ௬ ஆம் நூற்பா.

† இவ்வியலில் வேற்றுமைக்கண் திரிபு கூறியது எ ஆம் நூற்பா.

‡ இயல்புகணம் - மென்கணம், இடைக்கணம், உயிர்க்கணம் என்பன.

§ விரவுப்பெயர் - இருதிணைப் பொதுப்பெயர். இங்கு நும் என்பது விரவுப் பெயர்.

ஞாண் மர நூல் இவற்றிற்கு நான்கனுருபு விரிக்க. மரமணி யாழ் வட்டு அடை ஆடை என ஒட்டுக. நுங்கை எங்கை செவி தலை புறம் எனவும், தங்கை செவி தலை புறம் எனவும் வரும். ஈண்டு மகரக்கேடே கொள்க. முடிபு மேற்கூறுப (எழு - கஉ0). (கூ)

அதற்கு, மேலும் இரு முடிபுகள்

கூகக. அகர ஆகாரம் வரூஉங் காலை
ஈற்றுமிசை அகரம நீடலு முரித்தே.

இஃது அவ்வீற்று முடிபு வேற்றுமையுடையன கூறுகின்றது.

(இ - ள்.) அகர ஆகாரம் வரூஉங் காலை—அகர முதன் மொழியும் ஆகார முதன் மொழியும் வருமொழியாய் வருங்காலத்து, ஈற்று மிசை அகரம் நீடலும் உரிதது—மகர ஒற்றின் மேல் நின்ற அகரம் நீண்டு முடிதலும் உரித்து நீடாமையும உரித்து; எ - று.

(எ - டு) மரம் குளம் என நிறுத்தி மகரங்கெடுத்து அடி ஆம்பல் எனத் தந்து ரகர ளகரங்களில் நின்ற அகரம் ஆகாரமாக்கி மரா அடி குளா அம்பல் என முடிக்க.

மேற் 'செல்வழி யறிதல் வழக்கத் தான' (எழு - கூகஉ) என்பத னாற் குளா அம்பல் என்புழி ஆகாரத்தை அகர மாக்குக.

உம்மையான் மரவடி குளவாம்பல் என நீடாமையுங் கொள்க.

வருமொழி முற்கூறியவதனான் இவ் வீற்றுப் பிறவும் வேறுபட முடிவன கொள்க. கோணங்கோணம் கோணவட்டம் என வரும். இவற்றிற்கு உள்ளொன்றும் உருபு விரிக்க.

கோணங்கோணத்திற்கு வல்லெழுத்துக்கேடு மேலைச் சூத்திரத்து இலேசாற் கொள்க. (கக)

கூகஉ. மேல்லெழுத் துறழும் மொழியுமா குளவே
செல்வழி அறிதல் வழக்கத் தான.

இது மகரங்கெட்டு வல்லெழுத்து மிகுதலோடு மெல்லெழுத்தும் உறழ்க என்றலின், எய்தியதன்மேற சிறப்புவிதி கூறுகின்றது.

(இ - ள்) மெல்லெழுத்து உறழும் மொழியுமாறுள—மகர ஈற்றுள வல்லெழுத்தினோடு மெல்லெழுத்துப் பெற்று உறழ்ந்து முடியும மொழிகளும உள, வழக்கத்து ஆன செல்வழி அறிதல்—வழக்கதின் கணணும் வழங்கும இடம் அறிக; எ - று.

(எ - டு.) குளங்கரை குளக்கரை சேறு தாது பூழி என வரும். இவற்றுட் குளங்கரை குளக்கரைபோல அல்லன ஒத்த உறழ்ச்சியாய் வழங்கா வென்றற்குச் செல்வழி யறிதலென்றார்.

வழக்கத்தான என்றதனுன் குளத்துக்கொண்டான் ஈழத்துச் சென்ருன் குடத்துவாய் பிலத்துவாய் என்ருற்போல்வன மகரங்கெட்டு அத்துப்பெற்றன. இவை 'அத்தே வற்றே' (எழு - ௧௩௩) என்பதனுன் ஒற்றுக் கெடாதாயிற்று, அஃது அல்வழிக்குக் கூறுதலின், மழகளிறு என்பது 'மழவுங் குழவு மிளமைப் பொருள' என்ற உரிச்சொல். அது மகர ஈறன்று. சண்பகங்கோடு என்பது வழக்கிடத்துச் செல்லாது.

இன்னும் இதனனே மகரங்கெடாது நிற்பனவுங் கொள்க. 'புலம்புக் கனனே' (புறம் - ௨௫௮) 'கலம்பெறு கண்ணுள ரொக்கற் றலைவ' (மலைபடு - ௫௦) என வரும். (௧௭)

'இல்லம்' என்னும் மரப்பெயர்

௩௧௩. இல்ல மரப்பெயர் விசைமர இயற்றே.

இஃது இவ்வீற்றுள் ஒன்றற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தது.

(இ - ள்.) இல்ல மரப் பெயர்—புக்கு உறையும் இல்லன்றி இல்லமென்னும் மரத்தினை உணரநின்ற சொல், விசை மர இயற்று —விசையென்னும் மரத்தின் இயல்பிற்றாய் மெல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(எ - டு.) இல்லங்கோடு செதிள் தோல் பூ என வரும்.

மேலைச் சூத்திரத்து 'வழக்கத்தான' (எழு - ௩௧௨) என்றதனுன் மகரக்கேடு கொள்க. (௧௮)

அல்வழியில் மகர ஈறு

௩௧௪. அல்வழி யெல்லாம் மெல்லெழுத் தாகும்.

இது மகரம் அல்வழிக்கண் திரியும் என முற்கூறுமையின் எய்தாததெய்துவித்தது.

(இ - ள்.) அல்வழி யெல்லாம் மெல்லெழுத் தாகும்—மகர ஈறு அல்வழிக்கணெல்லாம் மெல்லெழுத்தாய்த் திரிந்து முடியும். எ - று.

(எ - டு.) மரங்குறிது சிறிது தீது பெரிது என வரும். மரம் பெரிது என்புழி திரிபின்றென்பது ஆணைகூற லென்னும் உத்தி.*

இனி எல்லா மென்றதனுல் அல்வழிக்கண் மகர ஈறு பிறவாற்ருன் முடிவனவெல்லாம் முடிக்க. வட்டத்தடுக்கு, சதுரப்பலகை, ஆய்தப் புள்ளி. வேழக்கரும்பு, கலக்கொள் சுக்கு தோரை பயறு: நீலக்கண் என்னும் பண்புப் பெயர்கள் மகரங்கெட்டு வல்லெழுத்து மிக்கு முடிந்தன. ஆய்த வுலக்கை அகர முதல: இவை இயல்புகணத்துக்கண் மகரங் கெட்டு முடிந்தன. எல்லாருங் குறியர் நாங்குறியேம்; இவை உயர் திணைப் பெயர் மகரந் திரிந்து மெல்லெழுத்தாய் முடிந்தன, கொல்லுங் கொற்றன் உண்ணுஞ்சாத்தன் கவளமாந்து மலைகெழுநாடன்

* ஆணை கூறல் – இவ்வாசிரியன் கருத்து இதுவெனக் கொள்ள வைத்தல். மகரம் பகரத்திற்கு இனமெல்லெழுத்தாகலின் அதன்முன் திரியாது என்பது கருத்து.

பொருமாரன் தாவுபரி பறக்குநாரை ஓடுநாகம் ஆடுபோர் வருகாலம் கொல்லும் யானை பாடும் பாணன் என இவை மகரந் திரிந்தும் கெட்டும் நிலைபெற்றும் வந்த பெயரெச்சம்.

இன்னும் இதனானே இயல்பு கணத்துக்கண்ணும் மகரங் கெடுதலுங் கெடாமையுங் கொள்க. மரனுன்றது நீண்டது மாண்டது எனவும், மரம் யாது வலிது அடைந்தது எனவும் வரும். இன்னும் இதனானே பவளவாயென உவமத்தும் நிலநீரென எண்ணடத்துங் கேடு கொள்க. (௧௧)

## 'அகம்' முன் 'கை'

௩௧௫. அகமென் கிளவிக்குக் கைமுன் வரினே
முதனிலை யொழிய முன்னவை கெடுதலும்
வரைநிலை யின்றே ஆசிரி யர்க்க
மெல்லெழுத்து மிகுத லாவயி னான.

இது மகர ஈற்று அல்வழிக்கண் இம்மொழி இம்முடிப்பு எய்தும் என்றலின் எய்தாத தெய்துவித்தது.

(இ - ள்) அகம் என் கிளவிக்குக் கை முன்வரின் — அக மென்னுஞ் சொல்லிற்குக் கையென்னுஞ் சொல் முன்னே வருமாயின், முதனிலை ஒழிய முன்னவை கெடுதலும் — முனைனின்ற அகரங் கெடாது நிற்ப அதன் முன் நின்ற ககரமும் மகர வொற்றுங் கெட்டு முடிதலுங் கெடாது நின்று முடிதலும, வரை நிலை இன்றே யாசிரியர்க்க — நீக்கு நிலைமையின்று ஆசிரியர்க்கு, ஆவயின் ஆன மெல்லெழுத்து மிகுதல் — அவை கெட்டவழி மெல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(எ — டு.) அங்கை என வரும். அகங்கை எனக் கெடாது முடிந்த வழி 'அல்வழி எல்லாம்' (எழு - ௩௧௪) என்பதனுல் மகரந்திரிந்து முடிதல் கொள்க. இது பண்புத்தொகை. அதிகாரத்தானும் பொருளானும் வேற்றுமைத் தொகை யன்மை உணர்க. (௨௦)

## 'இலம்' முன் 'படு'

௩௧௬. இலமென் கிளவிக்குப் படுவரு காலை
நிலையலு முரித்தே செய்யு ளான.

இஃது இலமென்பது முற்றுவினைச் சொல்லாகாது குறிப்பாகிய உரிச்சொல்லாய் நிற்குங்கால் அல்வழிக்கண் முடியுமாறு கூறுகின்றது.

(இ - ள்.) இலம் என் கிளவிக்கு — இல்லாமை யென்னுங் குறிப்பாகிய உரிச்சொற்கு, படு வரு காலை — உண்டாதலென்னும் வினைக்குறிப்புப் பெயர்* வருமொழியாய் வருங்காலத்து, செய்யு

* படு என்பது தெரிநிலை வினைப்பகுதியே யன்றி வினைக்குறிப்புப் பெயரன்று. படுதல்-உண்டாதல். படு என்னும் பகுதி நீண்டு பாடு என

னான நிலையலும் உரித்து—செய்யுளிடத்து மகரக்கேடும் திரிபு மின்றி நிறறலும் உரித்து; எ - று.

எனவே, உம்மையாற் பிறசொல் வருங்காலத்துக் கேடுந் திரிபும் பெற்று நிற்றலும் உரித்தெனக் கொள்க.

(எ - டு) 'இலம்படு புலவ ரேற்றகை நிறைய' (மலைபடு-௫௭௬): இதற்கு இல்லாமை உண்டாகின்ற புலவரெனப் பொருள் கூறுக. 'இலம் பாடு நாணுத் தரும்' என்கின்றதோ அவனின் இல்லாமை உண்டாதல் நாணுத்தருமென்று பொருள் கூறுக இதனை நெற்பவடு பெரிதென்றாற் போலக் கொள்க. இது பொருளிலமென முற்றுவினைச் சொல்லாமாறும் உணர்க. இலமின்றதெனக் கெட்டவாறும், இலங் கெட வியந்தான் இலஞ்சிறிதாக இலநதிதென்று எனக் கசதக்கள் வரும் வழித் திரிந்தவாறுங் காண்க.

'எல்லா' (எழு-௯௧௪)மென்றதனுன் இலம் வருவதுபோலும் இலம் யாரிடத்துஎன வகர யகரங்களின் முன்னர்க் கெடாது நிற்றல கொள்க.

இதனை இலத்தாற் பற்றப்பட்ட புலவரென வேற்றுமை யென்றாரால் உரையாசிரியரெனின், பற்றப்பட்ட புலவரென்பது பெயரெச்சமாதலிற் பற்றவென்னுந் தொழில் தோற்றுவிக்கின்ற முதனிலைச் சொல்லைச் சூத்திரத்து ஆசிரியர் எடுத்தோதிற்றிலராதலானும் படுவென்பதுதானும் புலவரென்னும் பெயரோடு முடியுங்கால் இரண்டு காலமுங் காட்டும் ஈறுகள் தொக்க முதனிலைச் சொல்லாய் நிறறலின், அதனை எடுத்தோதிறாராதலானும் ஆசிரியர்க்கு அங்ஙனம் கூறுதல் கருத்தன்மை உணர்க.

அன்றியும் பற்றப்பட்ட என்புழி இரண்டு முதனிலை கூடி ஒன்றாய் நின்ற பற்றுதலைச் செய்யப்பட்ட எனப் பொருள் தாராமையானும் அல்வழி யதிகாரமாதலானும் அது பொருளன்மை உணர்க. (௨௧)

'ஆயிரம்' என்னும் எண்ணுப் பெயர்

௩௧௭. அத்தொடு சிவணும் ஆயிரத் திறுதி
ஒத்த எண்ணு முன்வரு காலை.

இஃது இவ் வீற்று எண்ணுப் பெயருள் ஒன்றற்குத் தொகை மரபினுள் 'உயிரும் புள்ளியு மிறுதி யாகி' (எழு-௧௬௪) என்பதனுன் எய்திய ஏயென் சாரியை விலக்கி அத்து வகுக்கின்றது.

(இ - ள்.) ஆயிரத்து இறுதி - ஆயிரமென்னும் எண்ணுப் பெயரின் மகரம், ஒத்த எண் முன்வருங்காலை—தனக்கு அகப்படும் மொழியாய்ப் பொருந்தின எண்ணுபபெயர் தன்முன் வருங் காலத்து, அததொடு சிவணும—தொகைமரபிற் கூறிய ஏயென் சாரியை ஒழித்து அத்துச்சாரியையோடு பொருந்தி முடியும்; எ - று.

---

முதனிலை திரிந்த தொழிற் பெயராதல் போல இலம்படு என்னும் பகுதியும் இலம்பாடு என்றாகும். "இலம்பா டொற்கம் ஆயிரண்டும் வறுமை" (தொல். 843) என்றார் ஆசிரியரும். இலம்படு என்பது எழுவாய்த்தொடர். இலம்படு புலவர் என்பது வினைத்தொகை.

(எ - டு.) ஆயிரத்தொன்று ஆயிரத்தொன்பது என ஒன்று முதல் ஒன்பதின்காறும் ஒட்டுக. மகரத்தை அத்தின்மிசை யொற்றென்று கெடுத்து 'அத்தி னகர மகரமுனை யில்லை' (எழு-௧௨௫) என்று முடிக்க. ஆயிரத்தொருபது என்றாற்போல்வனவற்றிற்கும் ஒட்டுக.

நிலைமொழி முற்கூறுகதனன் ஆயிரத்துக்குறை கூறு முதல் என்பனவுங் கொள்க இன்னும் இதனானே ஆயிரப்பத்தென்புழி மகரங் கெடுத்து வல்லொற்று மிகுத்து முடிக்க. (௨௨)

அடையடுத்த ஆயிரம்

௩௧௮. அடையொடு தோன்றினும் அதனோ ரற்றே.

இஃது 'அடையொடு தோன்றினும் புணர்நிலைக் குரிய' (எழு - ௧௬௦) என்றமையின் அவ்வெண்ணுப் பெயரை அடையடுத்து முடிக்கின்றது.

(இ - ள்.) அடையொடு தோன்றினும் - அவ்வாயிர மென்னும் எண்ணுப்பெயர் அடையடுத்த மொழியோடு வரினும், அதனோரற்று—முற்கூறியதனோடு ஒரு தன்மைத்தாய் அததுப் பெற்று முடியும்; எ - று.

(எ - டு.) பதினாயிரத்தொன்று இரண்டு இருபதினாயிரத்தொன்று ஆறாயிரத்தொன்று நூறாயிரத்தொன்று மூந்நூறாயிரத்தொன்று ஐந்நூறாயிரத்தொன்று என ஒட்டுக. முன்னர் இலேசினான் முடிந்தவற்றையும் அடையடுத்து ஒட்டுக. பதினாயிரத்துக்குறை புறம் கூறு முதல் எனவும், நூறாயிரப்பத்து எனவும் வரும். (௨௩)

அதன்முன் அளவுப் பெயரும் நிறைப்பெயரும்

௩௧௯. அளவும் நிறையும வேற்றுமை யியல.

இஃது அவ்வெண்ணின் முன்னர் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வந்தால் முடியுமாறு கூறுதலின் எய்தாத தெய்துவித்தது.

(இ - ள்) அளவும் நிறையும்—அதிகாரத்தால் ஆயிரந் தானே நின்றுழியும் அடையடுத்து நின்றுழியும் அளவுப் பெயரும் நிறைப பெயரும் வந்தால், வேற்றுமை இயல—மகர ஈற்று வேறறுமையோடு ஒத்து வல்லெழுத்து வந்துழி மகரங் கெட்டு வல்லெழுதது மிகும இயல்புகணம வந்துழி 'துவர' (எழு - ௩௧०) எனனும் இலேசான எய்திய மகரங் கெட்டும் புணரும; எ - று.

(எ - டு.) ஆயிரம் பதினாயிரம் நூறாயிரம் என நிறுத்திக் கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டில் அகல் உழக்கு எனவும், கஃசு கழஞ்சு தொடி துலாம் பலம் எனவும் தந்து ஒட்டுக.

வேற்றுமையியல எனவே தாம் வேற்றுமையல்ல வாயின. (௨௪)

வேற்றுமையில் உயர்திணைப்பெயரும் விரவுப்பெயரும்

௩௨०. படாசகைப் பெயரும் புள்ளிலைப் பெயரும்
தொடக்கங் குறுகும் பெயர்நிலைக் கிளவியும்

**வேற்றுமை யாயின் உருபியல் நிலையும்**
**மெல்லெழுத்து மிகுத லாவயி னான.**

இஃது உயர்திணைப்பெயரும் விரவுப் பெயரும் உருபியலுள் முடிந்தவாறே ஈண்டுப் பொருட்புணர்ச்சிக் கண்ணும் முடியுமென எய்தாத தெய்துவித்தது.

(இ - ள்.) படர்க்கைப்பெயரும் முன்னிலைப் பெயரும்—எல்லாருமென்னும் படர்க்கைப் பெயரும் எல்லீருமென்னும் முன்னிலைப் பெயரும், தொடக்கங் குறுகும் பெயர்நிலைக் கிளவியும்—இளைத் தொடர்ச்சிப் பொருளவாய் நெடுமுதல் குறுகி முடியுந் தாம் நாம் யாமென்னும் பெயராகிய நிலைமையையுடைய சொல்லும், வேற்றுமையாயின் உருபியல் நிலையும் - வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக் கண்ணாயின் உருபுபுணர்ச்சிக்குக் கூறிய இயல்பின் கண்ணே நின்று முடியும், ஆவயின் ஆன மெல்லெழுத்து மிகுதல்—மேல் நெடுமுதல் குறுகும் மொழிக்கண் மெல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

எ - டு.) எல்லாருமென்பதனை மகரஒற்றும் உகரமுங் கெடுத்து ரகரப் புள்ளியை நிறுத்திக் கை செவி தலை புறம் எனத்தந்து இடையிலே தம்முச்சாரியையும் இறுதியிலே உம்முச்சாரியையுங் கொடுத்து எல்லார் தங்கையும் செவியும் தலையும் புறமும் என முடிக்க. இதற்கு 'அம்மினிறுதி' எழு-௧௨௯) என்னுஞ் சூத்திரத்துள் 'தன்மெய்' என்றதனாற் பிற சாரியைக்கண் மகர ஒற்றுத் திரிந்து 'ஙஞநவாகும்' எனச் செய்கை செய்து முடிக்க. எல்லீருமென்பதற்கு இடையிலே நம்முச்சாரியையும் இறுதியிலே உம்முச்சாரியையும் கொடுத்து முற் கூறிய செய்கைகளெல்லாஞ் செய்து எல்லீர் நுங்கையும் செவியும் தலையும் புறமும் என முடிக்க. தாம் நாம் என்பனவற்றை 'ஏனை யிரண்டு நெடுமுதல் குறுகும்' (எழு-௧அ௮) எனக் குறுக்கி 'மகர விறுதி' (எழு-௩௧௦) என்பதனான் மகரங் கெடுத்துத் தங்கை நங்கை செவி தலை புறம் என முடிக்க. யாம் என்பதனை ஆகாரத்தை. எகரமாக்கி யகர ஒற்றைக் கெடுத்து 'மகரவிறுதி' (எழு - ௩௧௦) என்றதனால் மகரங்கெடுத்து எங்கை செவி தலை புறம் என முடிக்க. தொடக்கங் குறுகுவனவற்றிற்கு இச் சூத்திரத்தான் மெல்லெழுத்து மிகுக்க.

உருபியல் நிலையும் என்பதனான் வேற்றுமையாதல் பெறுதற்கவும் பின்னும் வேற்றுமையாயினென்ற மிகையானே படர்க்கைப்பெயரும் முன்னிலைப்பெயரும் இயல்புகணத்து ஞகாரமும் நகாரமும் வந்துழித் தம்முச்சாரியையும் நும்முச்சாரியையும் பெறுதலும் மகரங்கெட்டு உம்முப் பெறுதலும் ஆவயினான என்றதனான் ஒற்று இரட்டுதலுங் கொள்க. எல்லார்தஞ்ஞாணும் எல்லீர் நுஞ்ஞாணும் நூலும் என வரும்.

இனித் தொடக்கங் குறுகுவனவற்றிற்கும் அவ்விரண்டு இலேசானும்* மகரங்கெடுதலும் ஒற்று இரட்டுதலுங் கொள்க. தஞ்ஞாண் நஞ்ஞாண் எஞ்ஞாண் நூல் என வரும்.

---

* இரண்டு இலேசு (1) வேற்றுமையாயின் (2) ஆவயினான என்பன.

இன்னும் ஆவயினை என்றதனானே எல்லார்தம் எல்லீர் நும் என நின்றவற்றின் முன்னர் ஏனை மணி யாழ் வட்டு அடை என்பன வந்துழி மகரங் கெடாமையும் உம்முப் பெறுதலுங் கொள்க.

இன்னும் இதனானே தொடக்கங் குறுகுவனவற்றிற்குந் தம்மணி யாழ் வட்டு அடை என மகரங் கெடாமையுங் கொள்க.

இன்னும் இதனானே தமகாணம் நமகாணம் எமகாணம் நுமகாணம் என உருபீற்றுச் செய்கைகளுங் கொள்க.

இன்னும் இதனானே நும் என்பதற்கு மகரத்தை மெல்லொற்றாக்கி நுங்கை செவி தலை புறம் என வருதலும், நுஞ்ஞாண் என ஒற்றிரட்டுதலும், நும்வலி என மகரம் கெடாது நிற்றலுங் கொள்க.

இன்னும் இதனானே எல்லார்கையும் எல்லீர்கையும் எனத் தம்மும் நும்மும் பெறாது நிற்றலுங் கொள்க. (உ0)

அல்வழியில் அவை

௩உக. அல்லது கிளப்பின் இயற்கை யாகும்.

இது முற்கூறிய மூன்று பெயர்க்கும் அல்வழி முடிபு கூறுகின்றது.

(இ - ள்.) அல்லது கிளப்பின் இயற்கை யாகும்—அம்மூன்று பெயரும் அல்வழியைச் சொல்லுமிடத்து இயல்பாம் முடியும்.

ஈண்டு இயற்கையென்றது சாரியை பெறுமை நோக்கி. இவற்றின் ஈறுதிரிதல் 'அல்வழி யெல்லாம்' (எழு - கஙச) என்பதனுள எல்லாமென்றதனாற் கொள்க.

(எ - டு.) எல்லாருங்குறியர் சிறியர் தீயர் பெரியர் எனவும், எல்லீருங் குறியீர் சிறியீர் தீயீர் பெரியீர் எனவும், தாங்குறியர் சிறியர் தீயர் பெரியர் எனவும, தாங்குறிய சிறிய தீய பெரிய எனவும், நாங் குறியம் சிறியம் தீயம் பெரியம் எனவும், யாங்குறியேம் சிறியேம் தீயேம் பெரியேம் எனவும் வரும்.

இன்னும் எல்லாமென்றதனானே இவற்றின் முன்னர் ஞகார நகாரம் வந்தால் அவை அவ்வொற்றாய்த் திரிதல் கொள்க. எல்லாருஞ் ஞான்றார் நீண்டார், எல்லீருஞ் ஞான்றீர் நீண்டீர் எனவும், தாஞ் ஞான்றார் நீண்டார் எனவும், நாஞ் ஞான்றாம் நீண்டாம் எனவும், யாஞ் ஞான்றேம் நீண்டேம் எனவும் வரும்.

இனி எல்லாரும் வந்தார் யாத்தார் அடைந்தார், எல்லீரும் வந்தீர் யாத்தீர் அடைந்தீர் எனவும், தாம் வந்தார் யாத்தார் அடைந்தார் எனவும், நாம் வருதும் யாத்தும் அடைதும், யாம்வருவேம் யாப்பேம் அடைவேம் எனவும் ஏனைக் கணங்களின் முன்னர் மகரந் திரியாது நிற்றலும் 'உயிரீ றாகிய உயர்திணைப் பெயரும்' (எழு - கருகூ) என்பதனான் முடியும். (உக)

'எல்லாம்' என்னும் விரவுப் பெயர்

௩உஉ. அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
எல்லா மெனும்பெயர் உருபியல் நிலையும
வேற்றுமை யல்வழிச் சாரியை நிலையாது.

இஃது இவ் வீற்றுள் விரவுப்பெயருள் ஒன்றற்கு அல்வழிக்கண்ணும் வேற்றுமைக் கண்ணும் உருபியலோடு மாட்டெறிந்து எய்தாத தெய்துவித்தது.

(இ - ள்.) அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும் அல்வழிக்கட் சொல்லினும் வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கட் சொலலினும், எல்லாமெனும் பெயர் உருபியல் நிலையும்—எல்லா மென்னும் விரவுப் பெயர்* உருபு புணர்ச்சியின் இயல்பிலே நின்று முடியும், வேற்றுமை யல்வழிச் சாரியை நிலையாது—அப்பெயர் வேற்றுமைப் பொருட் புணர்ச்சியலலாத இடத்து வற்றுச் சாரியை நில்லாதாய் முடியும; எ - று.

உருபியல் நிலையும் என்ற மாட்டேறு அல்வழிக்கண் உம்முப் பெற்று நிற்றலும் பொருட் புணர்ச்சிக்கண் வற்றும் உம்மும் பெற்று நிற்றலும் உணர்த்திற்று.

உம்முச்சாரியை ஒன்றுமே பெற்று முடிகின்ற வேற்றுமையோடு உடனோதி அதுவும் வற்றுப் பெறுமாறுபோல மாட்டெறிந்த மிகை யானே வன்கணத்து அல்வழிக்கண் நிலைமொழி மகரக்கேடும் வருமொழி வல்லெழுத்துப் பேறும், மென்கணத்து மகரங்கெட்டு உம்முப் பெற்றுப் பெறாதும வருதலும், ஏனைக் கணத்து மகரங்கெட்டு உம்முப் பெற்றும் மகரங் கெடாதும் உம்முப் பெறாதும் வருதலுங் கொள்க.

(உ - ம்) எல்லாக் குறியவும் சிறியவும் தீயவும் பெரியவும் எனவும், எல்லா ஞாணும் நூலும் மணியும் எனவும், எல்லாஞான்றன நீண்டன மாண்டன எனவும், எல்லா யாழும் வட்டும் அடையும் எனவும், எல்லாம் வாடின ஆடின எனவும் வரும் இனி வேற்றுமைக் கண் எல்லாவற்றுக் கோடும் செவியும் தலையும் புறமும் என இவை வற்றும் உம்மும் பெற்றன. இவற்றிற்கு மகரம் வற்றின் மிசை யொற்றென்று கெடுக்க. இனி மென்கணத்துக்கண் எல்லாவற்று ஞாணும் நூலும் மணியும் எனவும் ஏனைக் கணத்துக்கண் எல்லாவற்றி யாப்பும வலியும் அடையும் எனவும் வரும். ஏனைக் கணமும் வற்றும் உம்மும் பெற்றன. (உள)

அதற்குமேலும் ஒரு முடிபு

௩உ௩. மேல்லெழுத்து மிகினும் மான மில்லை.

இஃது ஒருசார் வல்லெழுத்தை விலக்கி மெல்லெழுத்து விதித்தவின் எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது.

(இ - ள்.) மெல்லெழுத்து மிகினும் மான மில்லை—அவ் வெல்லா மென்பது அல்வழிக்கண் மேல் இலேசினுற் கூறிய வல்லெழுத்தே யன்றி மெல்லெழுத்து மிகவு முடியினுங் குற்றமில்லை; எ - று.

---

* எல்லாம எனபது, எல்லா மாந்தரும் எல்லா மரமும் மாந்தரெல்லாம் மரமெல்லாம், என நிலைமொழியாயும் வருமொழியாயும் இருதிணையிலும் செல்லுதலின் விரவுப் பெயராயிற்று. எல்லாம் எனனும் தனமைப் பன்மைப் பெயரும் எல்லாம் எனனும் விரவுப் பெயரும் வெவ்வேறு.

எனவே, வல்லெழுத்து மிகுதலே பெரும்பான்மையாயிற்று. முற் கூறிய செய்கைமேலே இது கூறினமையின் மகரக் கேடும் உம்முப் பேறுங் கொள்க.

எல்லாங் குறியவும் சிறியவும் தீயவும் பெரியவும் என வரும்.

மானமில்லை என்றதனுன் உயர்திணைக்கண் வன்கணத்து மகரங் கெட்டு வல்லெழுத்து மிக்கு இறுதி உம்முப் பெற்று முடிதலும், இயல்பு கணத்துக்கண் மகரங் கெட்டு உம்முப் பெறறு முடிதலுங் கொள்க. எல்லாக் கொல்லரும் சான்ருேரும் தச்சரும் பார்ப்பாரும் குறியரும் சிறியரும் தீயரும் பெரியரும் எனவும், எல்லா ஞான்ருேரும் நாய்கரும் மணியகாரரும் வணிகரும் அரசரும் எனவும் வரும்.

இன்னும் இதனுனே உயர்திணைக்கண் எல்லாங்குறியரும் சிறியரும் தீயரும் பெரியரும் என மகரங் கெட்டு மெல்லெழுத்து மிக்கு உம்முப் பெறுதலும், எல்லாங் குறியர் சிறியர் தீயர் பெரியர் எனவும், குறியீர் குறியம்* என உம்முப் பெருது வருதலுங் கொள்க.

இன்னும் இதனுனே இடைக்கணத்தும் உயிர்க்கணத்தும் மகரங் கெடாது உம்மின்றி வருதலுங் கொள்க. எல்லாம் வந்தேம் அடைந்தேம் என வரும். (உஅ)

அதற்கு உயர்திணை முடிபு

௩உ௯. உயர்திணை யாயின் உருபியல் நிலையும்.

இஃது எல்லா மென்பதற்கு உயர்திணை முடிபு கூறுகின்றது.

(இ - ள்.) உயர்திணையாயின் உருபியல் நிலையும் — எல்லா மென்பது உயர்திணையாய நிறகுமாயின உருபு புணர்ச்சியின் இயல்பிற்ருய் இடைக்கண் நமமும் இறுதிக்கண் உம்மும்பெற்று முடியும்; எ - று.

உருபியலில் 'எல்லா மென்னு மிறுதி முன்னர்—வற்றென் சாரியை' (எழு-௧அ௯) வகுத்ததனுன் வற்றின்மிசை யொற்றென்று மகரங் கெடுத்த அதிகாரத்தான் 'உயர்திணை யாயி னம்மிடை வரும்' (எழு-௧௯0) என நம்மின் முன்னும் மகரங் கெடுத்தார், அதனேடு ஈண்டு மாட்டெறிதலின் அதுகொண்டு ஈண்டும் மகரங் கெடுக்க. 'அம்மினிறுதி' (எழு-௧உ௯ என்பழித் 'தன்மெய்' என்றதனுன் நம்முச் சாரியையினது மகரந் திரிதல் கொள்க.

(உ - டு.) எல்லாநங் கையும் செவியும் தலையும் புறமும் என ஒட்டுக.

வருமொழி வரையாது கூறலின் எல்லாநஞ்ஞாற்சியும் நீட்சியும் என ஏற்பனவற்ருேடு முடிபு அறிந்து ஒட்டுக. (உ௯)

வேற்றுமையிற் 'நும்' என்னும் பெயர்

௩உ௫. நும்மெ ஞெருபெயர்† வல்லெழுத்து மிகுமே.

---

* எல்லீரங் குறியீர் எல்லாங் குறியம் என ஒட்டுக. குறியீர் முன்னிலை, குறியம் தன்மை.

† நும் என்பது நூம் என்னும் வழக்கற்ற பழம்பெயரின் வேற்றுமைக் குறுக்கம். எம் தம் என்னும் பிறவிடக் குறுக்கங்கள் போன்றே

இது மகர ஈற்றிற்கு வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து விதித்தது.

(இ - ள்.) நும்மென் ஒருபெயர் மெல்லெழுத்து மிகும் — நும்மென்று சொல்லப்படுகின்ற விரவுப்பெயர் பொருட்புணர்ச்சிக்கண் மெல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(எ - டு.) நுங்கை செவி தலை புறம் என வரும். 'மகரவிறுதி' (எழு-கூகO) என்பதனான் மகரங்கெடுக்க.

ஒன்றென முடித்த லென்பதனான் உங்கை என வருவதூஉங் கொள்க. 'துவர' (எழு-கூகO) என்றதனான் ஞகர நகரங்கள் வந்துழி மகரங் கெடுதலும் ஒரு பெயர் என்றதனான் ஒற்று மிகுதலுங் கொள்க. நுஞ்ஞாண் நூல் என வரும். இன்னும் ஒரு பெயர் என்றதனான் நும்மணி யாழ் வட்டு அடை என மகரங் கெடாமையுங் கொள்க. (கூO)

அல்வழியில் 'நும்' என்னும் பெயர்

௩௨௬. அல்லதன் மருங்கிற் சொல்லுங் காலை
உக்கெட நின்ற மெய்வயின் ஈ வர
இ இடை நிலைஇ ஈறுகெட ரகரம்
நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே
அப்பால் மொழிவயின் இயற்கை யாகும்.

இது நும்மென்பதற்கு அல்வழி முடிபு கூறுகின்றது.

(இ - ள்.) அல்லதன் மருங்கிற் சொல்லுங்காலை — நும்மென் பதனை அல்வழிக்கண் கூறுமிடத்து, உ கெட நின்ற மெய்வயின் ஈ வர — நகரத்துள உகரங்கெட்டுப் போக ஒழிந்து நின்ற நகர வொற்றிடத்தே ஈகாரம் வந்துநிற்ப, இ இடைநிலைஇ ஈறு கெட — ஓர் இகரம் இடையிலே வந்து நிலைபெற்று மகரமாகிய ஈறு கெட்டுபபோக, புள்ளி ரகரம் நிற்றல் வேண்டும் — ஆண்டுப் புள்ளி பெற்று ஒரு ரகரம் வந்து நிற்றலை விரும்பும் ஆசிரியன், அப்பால் மொழிவயின் — அக் கூற்றினையுடைய நிலைமொழியிடத்து, இயற்கையாகும் — வருஞ்சொல் இயல்பாய் முடியும்; எ - று.

(எ - டு.) நீயிர் குறியிர் சிறியிர் தீயிர் பெரியிர் எனவரும்.

---

நும் என்பதும் உருபு பெற்றும் பெறாதும் ஆறும் வேற்றுமைப் பொருள் தரும்.

* நும் என்னும் வேற்றுமைத் திரிபுச் சொல் யா எழுவாய், வேற்றுமையில் நீயிர் என்றாகும் என இந்நூற்பாவிற் கூறியிருப்பது தமிழியல்புக்கும் உத்திக்கும் பொருந்தாது. 'நும வேறு. நீயிர் வேறு. நீன் என்னும் முன்னிலை யொருமைப் பெயர் ஈறுகெட்டு நீ என வழங்குவதே இர் ஈறு பெற்று நீயிர் என்னும் பன்மைப் பெயராகும்.

சொல்லுங்காலை யென்றதனானே நீயிர் ஞான்றீர் நீண்டீர் மாண்டீர் யாத்தீர் வாடினீர் அடைந்தீர் என ஏனைக்கணத்திலும் ஒட்டுக. (௯௧)

### மகர ஈற்றுந் தொழிற்பெயர்

௩௨௭. தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல.

இது வேற்றுமைக்கண் மகரங்கெட்டு வல்லெழுத்து மிக்கும் அல்வழிக்கண் மெல்லெழுத்தாய்த் திரிந்தும் வருமென எய்தியதனை விலக்கி ஞகர ஈற்றுத் தொழிற்பெயர் போல நிற்குமெனப் பிறிது விதி வகுத்தது.

(இ - ள்.) தொழிற்பெயரெல்லாம்—மகர ஈற்றுத் தொழிற்பெயரெல்லாம், தொழிற்பெயர் இயல—ஞகார ஈற்றுத் தொழிற்பெயர் போல அல்வழியினும் வேற்றுமையினும் வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும் இயல்புகணத்து உகரமும் பெற்று முடியும்; எ - று.

(எ - டு) செம்முக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், செம்முக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் வரும். 'தும்முச் செறுப்ப' (குறள்-௧௩௧௮) என்பதும் அது. இவை 'குறியதன் முன்னர்த் தன்னுரு விரட்டல்' (எழு-௧௬௦).

எல்லா மென்றதனன் உகரம் பெறாது நாட்டங்கடிது ஆட்டங்கடிது என மெல்லெழுத்தாய் அல்வழிக்கண் திரிதலும் நாட்டக்கடுமை ஆட்டக்கடுமை என வேற்றுமைக்கண் வல்லெழுத்து மிகுதலுங் கொள்க. (௯௨)

### 'ஈம்' 'கம்' 'உரும்' என்னும் பெயர்கள்

௩௨௮. ஈமுங் கம்மும் உருமென் கிளவியும்
ஆமுப் பெயரு மவற்றோ ரன்ன.

இது பொருட்பெயருட் சில தொழிற்பெயரோடு ஒத்து முடியும் என எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ - ள்.) ஈமுங் கம்மும் உருமென் கிளவியும் ஆமுப்பெயரும்—ஈமென்னுஞ் சொல்லுங் கமமென்னுஞ் சொல்லும் உருமென்னுஞ் சொல்லுமாகிய அம்மூன்று பெயரும், அவற்றோரன்ன—முற்கூறிய தொழிற்பெயரோடு ஒரு தன்மையவாய் வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும் இயல்புகணத்து உகரமும் பெற்று முடியும்; எ - று.

ஈம் என்பது சுடுகாடு, கம்—தொழில்.

(எ - டு.) ஈமுக்கடிது கம்முக்கடிது உருமுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், ஈமுக்கடுமை கம்முக்கடுமை உருமுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் ஒட்டுக.

கிளவியென்றதனான் வேற்றுமைக்கண்ணும் அல்வழிக்கண்ணும் உயிர் வருவழி உகரம்பெறாது ஈமடைவு ஈமடைந்தது என நிற்றலுங் கொள்க.

தன்னின முடித்த லென்பதனான் அம்மு தம்மு நம்மு எனச் சாரியைக் கண்ணும் உகரம் வருதல் கொள்க. (௩௯)

'ஈம்' 'கம்' என்னும் இருபெயர்க்கும் சாரியை

௩௨௯. வேற்றுமை யாயின் ஏனை யிரண்டும்
தோற்றம் வேண்டும் அக்கென் சாரியை.

இது மேல் முடிபு கூறிய மூன்றனுள் இரண்டிற்கும் வேற்றுமைக்கண் வேறொரு முடிபு கூறுகின்றது.

(இ - ள்) வேற்றுமையாயின் — வேற்றுமைப் பொருட் புணர்ச்சியாயின், ஏனை இரண்டும தோற்றம வேண்டும் அக்கென் சாரியை — இறுதியில் உருமொழிந்த இரண்டும் அக்கென்னுஞ் சாரியைத் தோன்றி முடிதலே வேண்டும ஆசிரியன்; எ - று.

(எ - டு.) ஈமக்குடம் கம்மக்குடம் சாடி தூதை பானை எனவும், ஞாற்சி நெருப்பு மாட்சி விறகு எனவும் ஒட்டுக.

அக்கு வகுப்பவே நிலைமொழித் தொழிலாகிய உகரங்கெட்டு முற் கூறிய வல்லெழுத்து விலக்கப்படாமையின் நின்று முடிந்தது.

வன்கணத்திற்கு முன்னின்ற சூத்திரத்திற் கூறியது குணவேற்று மைக் கென்றும் ஈண்டுக் கூறியது பொருட்புணர்ச்சிக் கென்றுங் கொள்க. (௪௰)

மகரம் குறுகுமிடம்

௩௩௦. வகார மிசையும் மகாரங் குறுகும்.

இது முன்னர் 'அரையளவு குறுகல்' (எழு-௧௩) எனவும், 'னகாரை முன்னர்' (எழு-௫௨) எனவுங் கூறிய மகரம் இருமொழிக் கண்ணும் குறுகுமென அதன் ஈற்றகத்து எய்தாததெய்துவிக்கின்றது.

(இ - ள்.) வகாரமிசையும் மகாரங் குறுகும்—மகாரம் ஒரு மொழிக்கண்ணேயன்றி வகாரத்தினமேலுங் குறுகும்; எ - று.

(எ - டு.) நிலம் வலிது; வரும் வண்ணக்கன் என வரும். (௪௧)

மகர ஈற்று நாட்பெயர்

௩௩௧. நாட்பெயர்க் கிளவி மேற்கிளந் தன்ன
அத்தும் ஆன்மிசை வரைநிலை யின்றே
ஒற்றுமெய் கெடுதல் என்மனார் புலவர்.

இஃது இவ் வீற்று நாட்பெயர்க்கு வேற்றுமை முடிபு கூறு கின்றது.

(இ - ள்.) நாட்பெயர்க் கிளவி மேற் கிளந்தன்ன—மகர ஈற்று நாட்பெயர் இகர ஈற்று நாட்பெயர் போல ஆன் சாரியை

பெற்று முடியும், அத்தும் ஆன்மிசைவரைநிலை இன்று—அத்துச் சாரியை ஆனசாரியை மேலும் பிறசாரியை மேலும் வருதல் நீக்கு நிலைமையின்று, ஒற்று மெய்கெடுதல் என்மனார் புலவர்—ஆண்டு நிலைமொழி மகர ஒற்றுக் கெடுக என்று கூறுவர் புலவர்; எ - று.

உம்மையை ஆன்மிசையுமென மாறுக.

(எ - டு.) மகத்தாற்கொண்டான் ஓணத்தாற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என்க. ஏனைநாட்களோடும் ஒட்டுக. மகர ஒற்றுக் கெடுத்து 'அத்தி னகர மகரமுனை யில்லை' (எழு - ௧௨௫) என அகரங் கெடுத்துக் 'குற்றிய லுகரமு மற்றென மொழிப' (எழு - ௧௩௦) என ஆனேற்றி 'ஆனி னகரமும்' (எழு ௧௨௪) என்றதனான் றகரமாக்கி முடிக்க. மகத்துஞான்று கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என ஞான்றென்னுஞ் சாரியைமேல் அத்து வந்தது.

வரையாது கூறினமையின் இம்முடிபு நான்கு கணத்துங் கொள்க. மகத்தான் ஞாற்றினான் நிறுத்தினான் மாய்ந்தான் வந்தான் அடைந்தான் என வரும். (௩௬)

### வேற்றுமையில் னகர ஈறு

௩௩௨. னகார இறுதி வல்லெழுத் தியையின்
றகார மாகும் வேற்றுமைப் பொருட்கே.

இது நிறுத்த முறையானே னகர இறுதி வேற்றுமைக்கண் புணருமாறு கூறுகின்றது.

(இ - ள்.) னகார இறுதி வல்லெழுத்து இயையின் றகாரமாகும்—னகார ஈற்றுப்பெயர் வல்லெழுத்து முதனமொழி வருமொழியாய் வந்து இயையின் றகாரமாகும், வேற்றுமைப் பொருட்கு—வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண்; எ - று.

(எ - டு.) பொற்குடம் சாடி தூதை பானை என வரும். (௩௭)

### சில னகர ஈற்றுச் சொற்கள்

௩௩௩. மன்னுஞ் சின்னும் ஆனும் ஈனும்
பின்னும் முன்னும் வினையெஞ்சு கிளவியும்
அன்ன இயல என்மனார் புலவர்.

இஃது அவ் வீற்று அசைநிலை இடைச்சொற்களும் ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உணரநின்ற இடைச்சொற்களும் வினையெச்சமும் முடியுமாறு கூறுகின்றது.

(இ - ள்.) மன்னுஞ் சின்னும் ஆனும் ஈனும் பின்னும் முன்னும் வினையெஞ்சு கிளவியும—மனனென்னுஞ் சொல்லுஞ் சினனென்னுஞ் சொல்லும் ஆனென்னுஞ் சொல்லும் ஈனென்னுஞ் சொல்லும் பின்னென்னுஞ் சொல்லும் முன்னென்னுஞ்

சொல்லும் வினையெச்சமாகிய சொல்லும், அன்ன இயல என்மனார் புலவர்—முற்கூறிய இயல்பினை யுடையவாய் னகரம் றகரமாய் முடியுமென்று சொல்லுவர் புலவர்; எ - று.

(எ - டு.) 'அதுமற் கொண்கன் றேரே' 'காப்பும் பூண்டிசிற் கடையும் போகலே' (அகம்-எ) எனவும், ஆற்கொண்டான் ஈற்கொண்டான் பிற்கொண்டான் முற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவும், வரிற் கொள்ளும் செல்லும் தரும் போம் எனவும் வரும்.

பெயராந்தன்மையவாகிய ஆன்* ஈன்† என்பனவற்றை முற்கூறாத தனான் ஆன் கொண்டான் ஈன் கொண்டான் எனத் திரியாமையுங் கொள்க.

பின் முன் என்பன பெயரும் உருபும் வினையெச்சமுமாய் நிற்றலின் பெயர் ஈண்டுக் கூறினார். ஏனைய உருபியலுள்ளும் வினையெஞ்சு கிளவி யென்பதன்கண்ணும் முடியும் அப்பெயரை முற்கூறாததனாற் பின் கொண்டான் முன்கொண்டான் எனத் திரியாமையுங் கொள்க.

இயலவென்றதனான் ஊன்‡ என்னுஞ் சுட்டு ஊன் கொண்டானென இயல்பாய் முடிதலும் கொள்க. (கூஅ)

'வயின்' என்னுஞ் சொல்

கூகூச. சுட்டுமுதல் வயினும் எகரமுதல் வயினும்
அப்பண்பு நிலையும இயற்கைய என்ப.

இஃது இவ் வீற்றுள் ஏழாம்வேற்றுமை இடப்பொருள் உணர்த்தும் இடைச்சொற்கு முடிபு கூறுகின்றது.

(இ - ள்.) சுட்டு முதல் வயினும்—சுட்டெழுத்தினை முதலாகவுடைய வயினென்னுஞ் சொல்லும், எகரமுதல் வயினும்—எகரமாகிய முதல் வினாவினையுடைய வயினென்னுஞ் சொல்லும், அப்பண்பு நிலையும் இயற்கைய என்ப—மேல் னகரம் றகரமாமென்ற தன்மை நிலைபெற்று முடியும் இயல்பையுடைய வென்று கூறுவார் ஆசிரியர்; எ - று.

(எ - டு.) அவ்வயிற்கொண்டான் இவ்வயிற்கொண்டான் உவ்வயிற்கொண்டான் எவ்வயிற்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வரும்.

இயற்கை என்றதனால் திரியாது இயல்பாய் முடிவனவுங் கொள்க. (கூக)

'குயின்' என்னுஞ் சொல்

கூகூரு. குயினேன் கிளவி இயற்கை யாகும்.

இது னகாரந் திரியாது இயல்பாகும் என்றலின் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

(இ - ள்.) குயினென் கிளவி இயற்கை யாகும்—குயினென்னுஞ் சொல் திரியாது இயல்பாய் முடியும்; எ - று.

---

* ஆன் – அங்கு. † ஈன் – இங்கு. ‡ ஊன் – உங்கு, உவ்விடம்.

(எ - டு.) குயின்குழாம் செலவு தோற்றம் பறைவு என வரும். குயினென்பது மேகம். அஃது அஃறிணைப் பெயர்.

தொகைமரபினுள் உயர்திணைப்பெயரும் விரவுப்பெயரும் இயல்பாக வென்றார்.

குயின் வினையுமாம்.*

இயற்கை என்றதனாற் கான்கோழி கோன்குணம் வான்கரை என வருவனவுங் கொள்க. (௬0)

'எகின்' என்னும் மரப்பெயர்

௩௩௬. எகின்மர மாயின் ஆண்மர இயற்றே.

இது திரிபு விலக்கி அம்மு வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

(இ - ள்.) எகின் மரமாயின்—எகினென்பது புள்ளன்றி மரப் பெயராயின், ஆண்மர இயற்று—ஆண்மரத்தின் இயல்பிற்றாய் அம்முப்பெற்று முடியும்; எ - று.

(எ - டு.) எகினங்கோடு செதிள் தோல் பூ என வரும். (௬௧)

'எகின்' என்னும் பிற உயிரி(பிராணி)யின் பெயர்

௩௩௭. ஏனை எகினே யகரம் வருமே
வல்லெழுத் தியற்கை மிகுதல் வேண்டும்.

இதுவும் அது, திரிபு விலக்கி அகரம் விதித்தலின்.

(இ - ள்.) ஏனை எகினே அகரம் வரும்—மரமல்லாத எகின் நிலைமொழிக்கண் அகரம்பெற்று முடியும், வல்லெழுத்தியற்கை மிகுதல் வேண்டும—ஆண்டு வருமொழி வல்லெழுத்தியல்பு மிக்கு முடிதலை வேண்டும் ஆசிரியன்; எ - று.

(எ - டு.) எகினக்கால் செவி தலை புறம் என வரும்.

மேலைச் சூத்திரத்தோடு இதனை ஒன்றாக ஓதாததனான் இயல்பு கணத்தும் அகரப்பேறு கொள்க. எகினஞாற்சி நீட்சி மாட்சி வலிமை யாப்பு அடைவு என வரும்.

இயற்கை யென்றதனான் அகரத்தோடு மெல்லெழுத்துப் பேறுங் கொள்க. எகினங்கால் செவி தலை புறம் என வரும்.

இனிச் சிறுபான்மை எகின் சேவல் - எகினச் சேவல் பெடை என்பன ஆறனுருபு விரிவுழி ஈண்டை இலேசான் முடிக்க. பண்பு கருதிய வழி† இவ்வோத்தினை புறனடையான் முடிக்க. (௬௨)

* குயினுதல் - துளைத்தல்.

† எகினாகிய சேவல் எகினமாகிய சேவல் என விரிப்பின் இருபெயரொட்டுப் பண்புத் தொகையாம்.

## கிளைப் பெயர்

௩௩௮. கிளைப்பெய ரெல்லாங் கிளைப்பெய ரியல.*

இது னகரந் திரிதலை விலக்கி இயல்பாக என்றலின் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

(இ - ள்.) கிளைப்பெயரெல்லாம்—னகர ஈற்றுக் கிளைப்பெய ரெல்லாம், கிளைபபெயர் இயல—ணகர ஈற்றுக் கிளைப்பெயர் போலத் திரியாது இயல்பாய் முடியும்; எ - று.

(எ - டு.) எயின்குடி சேரி தோட்டம் பாடி என வரும். எயின் வந்தது என்று அஃறிணைக்கும் எய்துதலின் தொகை மரபினுள் முடியாதாயிற்று, ஆண்டு உயர்திணைக்கே கூறுதலின்.

இனி எல்லா மென்றதனனே எயினக்கன்னி பிள்ளை என அக்கும் வல்லெழுத்தும் பெறுதலும், எயின வாழ்வு என வல்லெழுத்துப் பெறாமையும் கொள்க.

இன்னும் இதனானே பார்ப்பனக்கன்னி குமரி சேரி பிள்ளை என ஆகாரங் குறுகி அக்கும் வல்லெழுத்தும் கொடுத்தும், பார்ப்பன வாழ்க்கை என வல்லெழுத்துக் கொடாதும் முடிக்க.

இன்னும் இதனானே நான்கு கணத்துக் கண்ணும் வெள்ளா ளனென நின்றதனை அன்கெடுத்துப் பிரித்து ணகார வொற்றினை ணகார வொற்றாக்கி வெள்ளாண்குமரி பிள்ளை மாந்தர் வாழ்க்கை ஒழுக்கம் என முடிக்க.

இன்னும் இதனானே முதலெழுத்தை நீட்டி ளகார வொற்றினைக் கெடுத்து வேளாளென முடிக்க.

இதனானே பொருந வாழ்க்கையும் முடிக்க.

வேட்டுவக் குமரி யென்பது மரூஉ வழக்கு.* (௪௧)

## 'மீன்' என்னுஞ் சொல்

௩௩௯. மீனென் கிளவி வல்லெழுத் துறழ்வே.

இதுவும் அது. தன் திரிபு வல்லெழுத்திஞெடு உறழ்க என்றலின்.

(இ - ள்.) மீனென்கிளவி வல்லெழுத்து உறழ்வு—மீனென் னுஞ் சொல் திரிபு வல்லெழுத்திஞெடு உறழ்ந்து முடியும்; எ - று.

(எ - டு.) மீன்கண் மீற்கண், மீன்சினை மீற்சினை, மீன்றலை மீற்றலை, மீன்புறம் மீற்புறம் என வரும். (௪௨)

## 'தேன்' என்னுஞ் சொல்

௩௪௦. தேனென் கிளவி வல்லெழுத் தியையின்
மேனிலை ஒத்தலும் வல்லெழுத்து மிகுதலும்
ஆமுறை யிரண்டும் உரிமையு முடைத்தே
வல்லெழுத்து மிகுவழி இறுதி யில்லை.

* வேடக்குமரி என்பது வேட்டுவக் குமரி என மருவிற்று.

இதுவும் அது, மேலதனோடு மாட்டெறிதலின்.

(இ - ள்.) தேன் என் கிளவி வல்லெழுத்து இயையின்— தேனென்னுஞ்சொல் வல்லெழுத்து முதன்மொழி வருமொழியாய் வரின், மேல் நிலை ஒத்தலும — மீனென்பதற்குக் கூறிய திரிபுறழ்ச்சி நிலை ஒத்து முடிதலும், வல்லெழுத்து மிகுதலும்— வருமொழி வல்லெழுத்து மிக்கு முடிதலுமாகிய, ஆமுறை இரண்டும உரிமையும உடைத்து—அம் முறைமையினையுடைய இரண்டினையும் உரித்தாதலையும உடைத்து, வல்லெழுத்து மிகுவழி இறுதியில்லை — வல்லெழுத்து மிக்கு வருமிடத்து இறுதியில் நின்ற னகரங் கெடும்; எ - று.

உரிமையுமென்னும் உம்மை 'மெல்லெழுத்து மிகினும்' (எழு-௩௪௪) என மேல் வருகின்றதனை நோக்கிற்று.

(எ – டு.) தேன்குடம் தேற்குடம் சாடி தூதை பானை என மேனிலை ஒத்தன. தேக்குடம் சாடி தூதை பானை என னகரங்கெட்டு வல்லெழுத்து மிக்கன. (௪௩)

அதற்கு, மேலும் முடிபுகள்

௩௪௪. மெல்லெழுத்து மிகினும் மான மில்லை.

இதுவும் அது, உறழ்ச்சியும் வல்லெழுத்தும் விலக்கி மெல்லெழுத்து விதித்தலின்.

(இ - ள்.) மெல்லெழுத்து மிகினும் மானமில்லை — முற் கூறிய தேனென்கிளவி வல்லெழுத்து வந்தால் அவ்வல்லெழுத்து மிகுதலே யன்றி மெல்லெழுத்து மிகினுங் குற்றமில்லை; எ - று.

னகரக்கேடு அதிகாரத்தாற் கொள்க.

(எ - டு.) தேங்குடம் சாடி தூதை பானை என வரும். (௪௪)

௩௪௫. மெல்லெழுத் தியையின் இறுதியோ டுறழும்.

இது தொகைமரபினுள் 'வேற்றுமைக் கண்ணும் வல்லெழுத் தல்வழி' (எழு-௧௪௯) என்பதனுற் கூறிய இயல்பை விலக்கி உறழுமென்றலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ - ள்.) மெல்லெழுத்து இயையின் — அத் தேனென் கிளவி மெல்லெழுத்து முதன்மொழி வந்து இயையின்; இறுதியொடு உறழும்—நிலைமொழியிறுதியின் னகர வொற்றுக் கெடுதலுங் கெடாமையுமாகிய உறழ்ச்சியாய் முடியும்; எ - று.

(எ – டு.) தேன்ஞெரி தேஞெரி தேனுனி தேநுனி தேன்மொழி தேமொழி என வரும்.

மேல் 'ஆமுறை' (எழு-௩௪௩) என்றதனன் தேஞெரி தேஞ்ஞெரி தேநுனி தேந்நுனி தேமொழி தேம்மொழி என னகரங்கெட்டுத் தத்தம் மெல்லெழுத்து மிக்கும் மிகாதும் முடிந்தனவுங் கொள்க.

இனி மேல் 'மானமில்லை' (எழு-௩௪௪) என்றதனுன் ஈறு கெட்டு மெல்லெழுத்து மிகாது இயல்பாய் முடிவனவுங் கொண்டு தேனெரி தேநுனி தேமொழி என்பன காட்டின் அவை முற்கூறியவற்றுள் அடங்குமென்க. (௪௭)

'தேன்' முன் 'இருல்'

௩௪௯. இருஅல் தோற்றம் இயற்கை யாகும்.

இஃது அத்தேனென்பதற்கு உயிர்க்கணத்து ஒருமொழி முடிபு வேற்றுமை கூறுகின்றது.

(இ - ள்.) இரு அல் தோற்றம் — தேனென்னுஞ் சொல் இருலென்னும் வருமொழியது தோற்றத்துக்கண், இயற்கை யாகும்—நிலைமொழியின் னகரங் கெடாதே நின்று இயல்பாய் முடியும்; எ - று.

(எ - டு.) தேனிருல் என வரும். (௪௮)

அதற்கு, மேலும் ஒரு முடிபு

௩௪௪. ஒற்றுமிகு தகரமொடு நிற்றலு முரித்தே.

இதுவும் அதற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ - ள்.) ஒற்றுமிகு தகரமொடு நிற்றலும் உரித்து—அத்தேனென்பது இருலொடு புணருமிடத்துப பிறிதுமொரு தகரத் தோடு நின்று முடிதலும் உரித்து; எ - று.

'வல்லெழுத்து மிகுவழி யிறுதி யில்லை' (எழு-௩௪௦) என்றதனுன் நிலைமொழி ஈறு கெடுக்க. தகரம் மிகுமென்னுது ஒற்றுமிகு தகர மென்றதனுன் ஈரொற் றுக்குக.

(எ - டு.) தேத்திருல் என வரும்.

மேலைச் சூத்திரத்தோடு இதனை யொன்ருக ஓதாததனுற் பிற வரு மொழிக்கண்ணும் இப் முடிபு கொள்க. தேத்தடை தேத்தீ என வரும்.

தோற்ற மென்றதனுல் தேனடை தேனீ என்னும் இயல்புங் கொள்க (௪௯)

'மின்' 'பின்' 'பன்' 'கன்' என்னும் சொற்கள்

௩௪௫. மின்னும் பின்னும் பன்னும் கன்னும்
அந்நாற் சொல்லுந் தொழிற்பெய ரியல.

இஃது அல்வழிக்கண் இயல்பாயும் வேற்றுமைக்கண் திரிந்தும் வரும் என எய்துவித்த முடிபை விலக்கித் தொழிற்பெய ரியல்பா மெனப் பிறிது விதி வகுத்தது.

(இ - ள்.) மின்னும் பின்னும் பன்னுங் கன்னும் அந்நாற் சொல்லும்—மின்னென்னுஞ் சொல்லும் பின்னென்னுஞ் சொல் லும் பன்னென்னுஞ் சொல்லுங் கன்னென்னுஞ் சொல்லுமாகிய அந்நான்கு சொல்லும், தொழிற்பெயர் இயல—அல்வழியினும்

வேற்றுமையினும் ஞகார ஈற்றுத் தொழிற்பெயர்போல வன்கணத்து உகரமும் வல்லெழுத்தும், மென்கணத்தும் இடைக்கணத்தும் உகரமும் பெற்று முடியும்; எ - று.

(எ - டு) 'மின்னுச்செய் விளக்கத்துப் பின்னுப்பிணி யவிழ்ந்த' (புறம் - ௩௭) எனவும், பன்னுக்கடிது கன்னுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், மின்னுக்கடுமை பின்னுக்கடுமை பன்னுக்கடுமை கன்னுக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் வரும்.

தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல என்று ஓதாது கிளந்தோதினர், இவை தொழினிலைக் கண்ணன்றி வேறு தம்பொருளுணர நின்ற வழியும் இம்முடிபு எய்து மென்றற்கு.

மின்னென்பது மின்னுதற் றொழிலும் 'மின்னு நிமிர்ந் தன்ன' என மின்னெனப்படுவதொரு பொருளும் உணர்த்தும். ஏனையவும் அன்ன. (௬0)

'கன்' என்னும் சொல்லுக்கு மேலும் ஒரு முடிபு

௩௪௯. வேற்றுமை யாயின் ஏனை யெகினொடு
தோற்ற மொக்குங் கன்னென் கிளவி.

இது நிலைமொழிக்கண் உகரம் விலக்கி அகரம் வகுத்தலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ - ள்.) வேற்றுமையாயின் ஏனை எகினொடு தோற்றம் ஒக்கும்—வேற்றுமைப் பொருட் புணர்ச்சியாயின் ஒழிந்த மரமல்லாத எகினோடு தோற்றம் ஒத்து அகரமும் வல்லெழுத்தும் பெற்று முடியும்; கன் என் கிளவி—கன்னெனுஞ் சொல்; எ - று.

(எ - டு) கன்னக்*குடம் சாடி தூதை பானை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை என வரும். கன்னக்கடுமை எனக் குணவேற்றுமையுஞ் சிறுபான்மை கொள்க.

தோற்ற மென்றதனால் அல்வழிக்கண் வன்கணத்து அகரமும் மெல்லெழுத்தும் ஏனைக்கணத்து அகரமுங் கொள்க. கன்னங்கடிது சிறிது தீது பெரிது எனவும், கன்னஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும் வரும். கன்னங்கடுமை எனக் குணவேற்றுமைக்கண்ணும் இவ்விதி கொள்க.

'பொன்னேர் வரைப்பிற் கன்னந்† தூக்கி' (ஐங்குறு. உ௪௭) என்பதோவெனின், அது மகர ஈற்றுப் பொருட்பெயர். (௬௧)

இயற்பெயர் முன் 'தந்தை' என்னும் சொல்

௩௫0. இயற்பெயா முன்னர்த் தந்தை முறைவரின்
முதற்கண் மெய்கெட அகரம் நிலையும்
மெய்யொழித் தன்கெடும் அவ்வியற் பெயரே.

---

* கன்னம் - கன்னாரத் தொழில்.

† கன்னம் - நோய் தணியும்பொருட்டுக் கோயிற்கு நேர்த்திக்கடனாகச் செய்து கொடுக்கும் சிறு படிமம்.

இஃது 'அஃறிணை விரவுப்பெய ரியல்புமா ருளவே' (எழு - ௧௫௫) என்றதற்கு ஈண்டுத் திரிபு கூறலின் எய்தாத தெய்வித்தது.

(இ - ள்.) இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின் — இவ் வீற்று விரவுப்பெயருள் இயற்பெயரின் முன்னர்த் தந்தை யென்னும் முறைப்பெயர் வருமொழியாய் வருமாயின், முதற்கண் மெய்கெட அகரம் நிலையும்—அத் தந்தை யென்பதன் முதற்கணின்ற தகர வொற்றுக்கெட அதன்மே லேறிநின்ற அகரங் கெடாது நிற்கும், அவ் வியற்பெயர் மெய்யொழித்து அன்கெடும் —அந்நிலை மொழியாகிய இயற்பெயர் அன்னென்னுஞ் சொல்லின் அகரம் ஏறிநின்ற மெய்யை ஒழித்து அவ்வன் தான் கெட்டு முடியும்; எ - று.

(எ - டு.) சாத்தந்தை கொற்றந்தை என வரும்.

முதற்கண் மெய்யென்றதனால் சாத்தன் றந்தை கொற்றன் றந்தை என்னும் இயல்பு முடிபுங் கொளக. (௫௨)

அதற்கு, மேலும் ஒரு முடிபு

௩௪௮. ஆதனும் பூதனுங் கூறிய இயல்பொடு
பெயரொற் றகரம் துவரக் கெடுமே.

இது மேலதற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ - ள்.) ஆதனும் பூதனும்—முற்கூறிய இயற்பெயருள் ஆதனும் பூதனும் என்னும் இயற்பெயர்கள் தந்தை யென்னும் முறைப்பெயரோடு முடியுங்கால், கூறிய இயல்பொடு—முற்கூறிய நிலைமொழி அன் கெடுதலும் வருமொழித் தகரவொற்றுக் கெடுதலுமாகிய செய்கைகளுடனே, பெயரொற்று அகரந் துவரக் கெடும—நிலைமொழிப் பெயரில் அன்கெட நின்ற தகர வொற்றும் வருமொழியில் தகரவொற்றுக்கெட நின்ற அகரமும் முற்றக் கெட்டு முடியும் ; எ - று.

(எ - டு.) ஆந்தை பூந்தை என வரும்.

இயல்பென்றதனாற் பெயரொற்றும் அகரமுங் கெடாதே ஆதந்தை பூதந்தை என வருதலுங் கொள்க.

இனித் துவர வென்றதனான் அழான் புழான் என நிறுத்தித் தந்தை என வருவித்து நிலைமொழி னகரமும் வருமொழித் தகரமும் அகரமுங் கெடுத்து அழாந்தை புழாந்தை எனவும் முடிக்க. (௫௩)

அதற்கு வேறொரு முடிபு

௩௪௯. சிறப்போடு வருவழி யியற்கை யாகும்.

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ - ள்.) சிறப்பொடு வருவழி—அவ்வியற்பெயர் பண்பு அடுத்து வரும்வழி, இயற்கையாகும்—முற்கூறிய இருவகைச் செய்கையுந் தவிர்ந்து இயல்பாய் முடியும்; எ - று.

(எ - டு.) பெருஞ்சாத்தன் றந்தை பெருங்கொற்றன் றந்தை என வரும். கொற்றங்கொற்றன் றந்தை சாத்தங்கொற்றன் றந்தை என்றாற்போல்வன பண்பன்றி அடை அடுத்தனவாதலின் புறனடையான் முடிக்க. (௩௪)

இயற்பெயர் முன் 'மகன்' முதலிய பிற பெயர்கள்

௩௫௦. அப்பெயர் மெய்யொழித் தன்கெடு வழியும்
நிற்றலு முரித்தே அம்மென் சாரியை
மக்கள் முறைதொகூஉம் மருங்கி னான.

இது மேலதற்கு வேறொரு வருமொழிக்கண் எய்தாத தெய்து வித்தது.

(இ - ள்.) அப்பெயர் மக்கள் ஆன முறை தொகூஉம் மருங்கினும்—அவ்வியற்பெயர் முன்னர்த் தந்தை யன்றி மகனுகிய முறைப்பெயர் வந்து தொகுமிடத்தினும், மெய்யொழித்து அன் கெடுவழி அம்மென் சாரியை நிற்றலும் உரித்து—அவ்வியற் பெயரில் தான் ஏறிய மெய்நிற்க அன்கெட்டு அம்முச்சாரியை வந்து நிற்றலும் உரித்து; எ - று.

ஆன என்பதனை மக்களோடும், உம்மையை மருங்கினோடுங் கூட்டுக. முறைதொகூஉ மருங்கினென்றது இன்னாற்கு மகனென்னும் முறைப்பெயராய்ச் சேருமிடத் தென்றவாறு.

(எ - டு.) கொற்றங்கொற்றன், சாத்தங்கொற்றன் என நிலைமொழி அன் கெட்டுழி அம்மு வந்தது. இவற்றிற்கு அதுவெனுருபு விரியாது அதன் உடைமைப்பொருள் விரிக்க. இது முறைப்பெயர்.

இனி உம்மையாற் கொற்றங்குடி சாத்தங்குடி எனப் பிற பெயர் தொக்கனவுங் கொள்க.

மெய்யொழித் தென்றதனனே கொற்றமங்கலம் சாத்தமங்கலம் என்பனவற்றின்கண் அம்மின் மகரங்கெடுதலும் வேட்டமங்கலம்* வேட்டங்குடி என்பனவற்றின் நிலைமொழியொற்று இரட்டுதலுங் கொள்க. (௩௫)

'தான்' 'பேன்' 'கோன்' என்னும் இயற்பெயர்கள்

௩௫௧. தானும் பேனுங் கோனு மென்னும்
ஆமுறை யியற்பெயர் திரிபிட னிலவே.

இது மேலதற்கு ஒருவழி எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது

(இ - ள்.) தானும் பேனுங் கோனும் என்னும் ஆ முறை இயற்பெயர்—அவ்வியற்பெயருள் தானும் பேனுங் கோனு

* வேட்டமங்கலம்-வேடமங்கலம் என்பது நிலைமொழி யொற்று இரட்டித்தது.

மென்னும் அம்முறையினையுடைய இயற்பெயர்கள் தந்தையொடும் மக்கள் முறைமையொடும் புணரும்வழி, திரிபிடனில—முற்கூறிய திரிபுகளின்றி இயல்பாய் முடியும்; எ - று.

(உ - ம்) தான்றந்தை பேன்றந்தை கோன்றந்தை எனவும், தான் கொற்றன் பேன்கொற்றன் கோன்கொற்றன் எனவும் வரும். பேன் கோன் என்பன முற்காலத்து வழக்கு. இவை தொகைமரபினுள் 'அஃறிணை விரவுப்பெயர்' (எழு-௧௫௫) என்புழி இயல்பாயினவேனும் ஈண்டு இவ் வீற்றிற்குத் திரிபு கூறுதலின் அதனையும் விலக்கி இயல்பா மென்பதூஉங் கூறினார். (௩௪)

## 'தான்' 'யான்' என்னும் சொற்கள்

௩௫௨. தான்யா னெனும்பெயர் உருபியல் நிலையும்.

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது, தொகைமரபினுள் 'அஃறிணை விரவுப்பெயர்' (எழு-௧௫௫) என்பதனானே 'இயல்பாய் நின்ற தான் என்பதனையும் 'உயிரீறாகிய' (எழு-௧௫௩) என்பதனால் இயல்பாய் நின்ற யானென்பதனையும் அவ் வியல்பு விலக்கி உருபியலோடு மாட்டெறிதலின்.

(இ - ள்.) தான் யான் எனும்பெயர்—தானென்னும் விரவுப் பெயரும் யானென்னும் உயர் திணைப்பெயரும் உருபியல் நிலையும் —உருபியலிற் கூறிய இயல்பிலே நிலைபெற்றுத் தானென்பது நெடு முதல் குறுகித் தன்னென்றும் யானென்பது ஆகாரம் எகரமாய் யகரங்கெட்டு என்னென்றும முடியும; எ -று

(உ – ம்.) தன்கை என்கை செவி தலை புறம் என வரும்.

வருமொழி வரையாது கூறினமையின் இயல்புகணத்துக்கண்ணுந் தன்ஞாண் என்ஞாண் நூல் மணி யாழ் வட்டு அடை ஆடை எனவரும்.

## அல்வழியில் அச்சொற்கள்

௩௫௩. வேற்றுமை யல்வழிக் குறுகலுந் திரிதலுந்
தோற்ற மில்லை யென்மனார் புலவர்.

இஃது அல்வழிக்கண் இயல்பாக என்றலின் எய்தாத தெய்து வித்தது.

(இ - ள்.) வேற்றுமை அல்வழி — முற்கூறிய தான் யானென்பன வேற்றுமைப் புணர்ச்சியல்லாதவிடத்து, குறுகலுந் திரிதலுந் தோற்றமில்லை என்மனார் புலவர்—தானென்பது நெடு முதல் குறுகுதலும் யானென்பது அவ்வாறு திரிதலுந் தோற்ற மின்றி இயல பாய் முடியுமென்று கூறுவர் புலவர்; எ - று.

(உ – ம்.) தான்குறியன் சிறியன் தீயன் பெரியன் ஞான்றான் நீண் டான் மாண்டான் வலியன் எனவும், யான் குறியேன் சிறியேன தீயேன் பெரியேன் ஞான்றேன் நீண்டேன் மாண்டேன் வலியேன் எனவும் வரும்.

தோற்றமென்றதனான் வேற்றுமைக்கண் அவ்வாறன்றி னகரந்திரி தலுங் கொள்க. தற்புகழ் தற்பாடி, எற்புகழ் எற்பாடி என வரும். (௩௫)

'அழன்' என்னுஞ் சொல்

௩௫௪. அழனென் இறுதிகெட வல்லெழுத்து மிகுமே.

இது வேற்றுமைக்கண் அகரந் திரியாது கெடுக என்றலின் எய்தியது விலக்கப் பிறிதுவிதி வகுத்தது.

(இ - ள்.) அழன என் இறுதிகெட—அழனென்னுஞ் சொல் தன் ஈற்று னகரங் கெட, வல்லெழுத்து மிகும்—வல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(எ - டு.) அழக்குடம் சாடி தூதை பானை எனவரும். அழக்குட மென்பது பிணக்குடத்தை. (௩௯)

'முன்' என்பதற்கு முன் 'இல்'

௩௫௫. முன்னென் கிளவி முன்னர்த் தோன்றும்
இல்லென் கிளவிமிசை றகர மொற்றல்
தொல்லியல் மருங்கின் மரீஇய மரபே.

இது 'மருவின்றொகுதி' (எழு-௧௧௧) என்பதனாற் கூறிய இலக்கண மரூஉக்களில் ஒன்றற்கு முடிபு கூறுகின்றது.

(இ - ள்) முன் என் கிளவி முன்னர்த் தோன்றும் இல் என் கிளவிமிசை முன்னென்னுஞ் சொலின் முன்னே வரும் இல்லெனுஞ் சொல்லின்மேலே, றகரம் ஒற்றல்—ஒரு றகர வொற்று வந்து நின்று முடிதல், தொல்லியல் மருங்கின மரீஇய மரபு—தொன்மையதாகிய இயல்பினையுடைய வழக்கிடத்து மருவி வந்த இலக்கண முடிபு; எ - று.

(எ - டு.) முன்றில் எனவரும். இல்முன் என நிற்கற்பாலது முன்றிலென்று தலைதடுமாறுதலின் மரூஉவாயிற்று. முன்னென்பதற்கு ஒற்றிரட்டுதல் இலக்கணமேனும் அதுவன்றித் தனக்கு இனமாய தொரு றகரவொற்றுப் பெறுதலின் வேறு முடிபாயிற்று. (௪0)

'பொன்' என்னுஞ் சொல்

௩௫௬. பொன்னென கிளவி யீறுகெட முறையின்
முன்னர்த் தோன்றும் லகார மகாரம்
செய்யுள் மருங்கில தொடரிய லான.*

இஃது அவ் வீற்றுப்பெயரொன்றற்குச் செய்யுள் முடிபு கூறுதலின் எய்தாத தெய்துவித்தது.

---

*பொல் – பொன் = அழகு அழகிய உலோகம் என்றுமாம். பொல் + அம் = பொலம். பொல் + பு = பொற்பு = அழகு. பொல்லுதல் = பொருந்துதல், அழகாயிருத்தல். ஒ. நோ: ஒப்பித்தல் = பொருந்தச் செய்தல், அலங்கரித்தல். பொல்லாத-பொல்லா = பொருந்தாத, அழகில்லாத. "பொல்லாக் கருங்காக்கை" என்று காரிகை யாசிரியருங் கூறுதல் காண்க.

(இ - ள்.) பொன் என் கிளவி ஈறு கெட—பொன்னென்னுஞ் சொல் தன்னீருகிய னகரங் கெடாநிற்க, முன்னர் லகார மகாரம் முறையிற் றோன்றும்—அதன் முன்னர் லகரமும் மகரவொற்றும் முறையானே வந்து நிற்கும், செய்யுள் மருங்கில் தொடரியலான—அங்ஙனம் நிற்பது செய்யுளிடத்துச் சொற்கள் தம்முள் தொடர்ச்சிப்படும் இயல்பின்கண்; எ - று.

முறையினென்றதனுன் மகரம் ஒற்றதல் கொள்க.

(உ - ம்.) "பொலம்படப் பொலிந்த கொய்சுவற் புரவி" (மலைபடு-௫௭௪) என வரும்.

தொடரியலான என்றதனனே வன்கணத்துக்கண்ணும் லகரம் நிற்க மகரம் வல்லெழுத்திறகேற்ற மெல்லெழுத்தாகத் திரிதல் கொள்க. 'பொலங்கலஞ் சுமந்த பூண்டாங் கிளமுலை' (அகம்-௧௧) 'பொலஞ்சுடராழி பூண்ட தேரே' 'பொலந்தேர்க் குட்டுவன்' என வரும்.

இன்னும் இதனனே 'பொலனறுந் தெரியல்' (புறம் - ௨௧) 'பொலமல ராவிரை' (கலி-௧௩௮) என்றாற்போல மகரங்கெட்டுப் பிறகணத்தொடு முடிதலுங் கொள்க. (௧௧)

## ௨. இடையொற்று ஈறுகள்

### வேற்றுமையில் யகர ஈறு

௩௫௭. யகர இறுதி வேற்றுமைப் பொருள்வயின்
வல்லெழுத் தியையின் அவ்வெழுத்து மிகுமே.

இது முறையானே யகர ஈற்றிற்கு வேற்றுமைமுடிபு கூறுகின்றது.

(இ - ள்.) யகர இறுதி வேற்றுமைப்பொருள்வயின்—யகர ஈற்றுப்பெயர் வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண், வல்லெழுத்து மிகும்—வல்லெழுத்து முதன்மொழி வந்து இயையின் அவ் வல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(உ - ம்.) நாய்க்கால் செவி தலை புறம் என வரும். (௧௨)

### 'தாய்' என்னும் சொல்

௩௫௮. தாயென் கிளவி யியற்கை யாகும்.

இது விரவுப்பெயருள் ஒன்றற்கு எய்திய வல்லெழுத்து விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ - ள்.) தாயென் கிளவி இயற்கையாகும்—தாயென்னுஞ் சொல் வல்லெழுத்து மிகாது இயல்பாய் முடியும்; எ - று.

(உ - ம்.) தாய்கை செவி தலை புறம் எனவரும்.

மேலைச் சூத்திரத்தான் மிகுதியுங் கூறுதலின் அஃறிணை விரவுப் பெயருள் அடங்காதாயிற்று. (௧௩)

அதற்கு, மேலும் ஒரு முடிபு

௩௫௯. மகன்வினை கிளப்பின் முதனிலை யியற்றே.

இஃது எய்தாத தெய்துவித்தது. தாயென்பது அடையடுத்துழி வல்லெழுத்து மிகுக என்றலின்.

(இ - ள்.) மகன் வினை கிளப்பின்—தாயென்னுஞ் சொல் தனக்கு அடையாய முன்வந்த மகனது வினையைப் பின்னாக ஒருவன் கூறுமிடத்து. முதல் நிலை இயற்று — இவ்வீற்றுள் முதற்கட் கூறிய நிலைமையின் இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்துழி அவ்வல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(எ - டு.) மகன்றாய்க்கலாம் செரு துறத்தல் பகைத்தல் என வரும். மகன் தாயோடு கலாய்த்த கலாம் என விரியும். ஏனையவற்றிற்கும் ஏற்கும் உருபு விரிக்க. வினை ஈண்டுப் பகைமேற்று. (௬௪)

யகர ஈற்றிற்கு வேறு முடிபு

௩௬௦. மெல்லெழுத் துறழும் மொழியுமா ருளவே.

இஃது எய்தாத தெய்துவித்தது.

(இ - ள்) மெல்லெழுத்து உறழும் மொழியுமாருள — யகர ஈற்றுள் அதிகார வல்லெழுத்தினோடு மெல்லெழுத்து மிக்கு உறழ்ந்து முடிவனவும் உள; எ - று.

(எ - டு.) வேய்க்குறை வேய்ங்குறை செய்கை தலை புறம் என வரும். (௬௫)

அல்வழியில் யகர ஈறு

௩௬௧. அல்வழி யெல்லாம் இயல்பென மொழிப.

இஃது அவ் வீற்று அல்வழிக்கு எய்தாத தெய்துவித்தது.

(இ - ள்.) அல்வழி எல்லாம் இயல்பென மொழிப — யகர ஈற்று அல்வழியெல்லாம் இயல்பாய் முடியும் என்று கூறுவர் புலவர்; எ - று.

(எ - டு.) நாய்கடிது சிறிது தீது பெரிது என வரும்.

எல்லாமென்றதனால் அவ்வாய்க் கொண்டான் இவ்வாய்க்கொண்டான் உவ்வாய்க்கொண்டான் எவ்வாய்க்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என உருபின் பொருள்பட முடிவனவும், தாய்க்கொண்டான் தாய்ப்பெய்தான் என்றாற்போலும் வினையெச்சமும் பொய்ச்சொல் மெய்ச்சொல் எய்ப்பன்றி என்றாற்போலும் பண்புத்தொகையும், வேய்கடிது வேய்க்கடிது என்னும் அல்வழி யுறழ்ச்சி முடிவுங்கொள்க. (௬௬)

வேற்றுமையில் ரகர ஈறு

௩௬௨. ரகார இறுதி யகார இயற்றே.

இது நிறுத்த முறையானே ரகார ஈற்று வேற்றுமை முடிபு கூறு கின்றது.

(இ - ள்.) ரகார இறுதி — ரகார ஈற்றுப் பெயர் வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண், யகார இயற்று—யகார ஈற்று இயல்பிற்றாய் வல்லெழுத்து வந்துழி அவ் வல்லெழுத்து மிக்கு முடியும்; எ - று.

(எ - டு.) தேர்க்கால் செலவு தலை புறம் என வரும்.

இம்மாட்டேற்றினை யகர ஈற்று வேற்றுமை அல்வழி யென்னும் இரண்டையுங் கருதி மாட்டெறிந்தாரென்பார் அல்வழி முடிபும் ஈண்டுக் காட்டுவர். யாம் இவ்வோத்தின் புறனடையாற் காட்டுதும்.

இது ழகர ஈற்றிற்கும் ஒக்கும்.

மாட்டேற்றான் உறழ்ச்சியுங் கொள்க. வேர்க்குறை வேர்ங்குறை என வரும். (௬எ)

'ஆர்' 'வெதிர்' 'சார்' 'பீர்' என்னுஞ் சொற்கள்

௩௬௩. ஆரும் வெதிருஞ் சாரும் பீரும்
மெல்லெழுத்து மிகுதல் மெய்பெறத் தோன்றும்.

இஃது இவ் வீற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தது.

(இ - ள்.) ஆரும் வெதிருஞ் சாரும் பீரும் — ஆரென்னுஞ் சொல்லும் வெதிரெனனுஞ் சொல்லுஞ் சாரென்னுஞ் சொல்லும் பீரென்னுஞ் சொல்லும், மெல்லெழுத்து மிகுதல் மெய்பெறத் தோன்றும்—மெல்லெழுத்து மிக்கு முடிதல் மெய்ம்மை பெறத் தோன்றும்; எ - று.

(எ - டு.) ஆர்ங்கோடு வெதிர்ங்கோடு சார்ங்கோடு பீர்ங்கொடி செதிள் தோல் பூ என வரும்.

பீர் மரமென்பார் பீர்ங்கோடென்பர். 'பீர்வாய்ப் பிரிந்த நீர் சிறை முறைசெய்து' என்றாற்போலச் சான்றோர் பலருஞ் செய்யுள் செய்தவாறு காண்க.

மெய்பெற என்றதனான் 'ஆரங் கண்ணி யடுபோர்ச் சோழர்' (அகம் - ௬௯) என ஆர் அம்முப்பெறுதலும் 'மாரிப் பீரத் தலர்சிலர் கொண்டே' (குறு - ௯௮) எனப் பீர் அத்துப் பெறுதலுங் கொள்க. இதனை அதிகாரப் புறனடையான் முடிப்பாரும் உளர்.

இன்னும் இதனானே கூர்ங்கதிர்வேல் ஈர்ங்கோதை என்றாற்போல வுங் குதிர்ங்கோடு விலாங்கோடு அயிர்ங்கோடு துவர்ங்கோடு சிலிர்ங் கோடு என்றாற் போலவும் மெல்லெழுத்து மிகுவன கொள்க.

இன்னும் இதனானே துவரங்கோடு என அம்முப் பெறுதலுங் கொள்க. (௬அ)

'சார்' முன் 'காழ்'

௩௬௪. சாரேன் கிளவி காழ்வயின் வலிக்கும்.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தது.

(இ - ள்.) சார் என் கிளவி காழ்வயின் வலிக்கும் — சாரென்பது காழென்பதனோடு புணருமிடத்து வல்லெழுத்து மிக்குப் புணரும்; எ - று.

(எ - டு.) சார்க்காழ் என வரும். சாரினது வித்தென்பதே பொருள். இதனை வயிரமெனிற் கிளந்தோதுவா ரென்று உணர்க. (௬௯)

'பீர்' என்னுஞ் சொற்கு, மேலும் ஒரு முடிபு

௩௬௫. பீரேன் கிளவி அம்மொடுஞ் சிவணும்.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தது.

(இ - ள்.) பீர் என் கிளவி அம்மொடுஞ் சிவணும் — பீரென்னுஞ் சொல் மெல்லெழுத்தேயன்றி அம்முபெற்றும் முடியும்; எ - று.

(எ - டு.) பீரங்கொடி செதிள் தோல் பூ எனவும், 'பொன் போற் பீரமொடு பூத்த புதன்மலர்' (நெடுநல்வாடை—௧௪) எனவும் வரும். உம்மை இறந்தது தழீஇயிற்று. (௭0)

வேற்றுமையில் லகர ஈறு

௩௬௬. லகார இறுதி னகார இயற்றே.

இது முறையானே லகார ஈற்றை வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண் புணர்க்கின்றது.

(இ - ள்.) லகார இறுதி னகார இயற்று — லகார ஈற்றுப் பெயர் வன்கணம் வந்துழி னகார ஈறறு இயல்பிற்றாய் லகாரம் றகரமாய்த் திரிந்து முடியும்; எ - று.

(எ - டு.) கற்குறை சிறை தலை புறம், நெற்கதிர் சோறு தலை புறம் என வரும். (௭௧)

அதற்கு, மேலும் ஒரு முடிபு

௩௬௭. மேல்லெழுத் தியையின் னகார மாகும்.

இது னகார மென்றலின் அவற்றிற்கு எய்தாத தெய்துவித்தது.

(இ - ள்.) மெல்லெழுத்து இயையின் னகார மாகும்—அவ்விறு மென்கணம் வந்து இயையின் னகாரமாகத் திரிந்து முடியும்; எ - று.

(எ - டு.) கன்ஞெரி நுனி முரி என வரும்.

இச் சூத்திரத்தினை வேற்றுமையீறுதிக்கண் அல்வழியது எடுத்துக் கோடற்கட் சிங்கநோக்காக வைத்தமையான் அல்வழிக்கும் இம்முடிபு கொள்க. கன்ஞெரிந்தது நீண்டது மாண்டது என வரும். (எஉ)

அல்வழியில் லகர ஈறு

௩௬௮. அல்வழி யெல்லாம் உறழெண மொழிப.

இஃது அவ் வீற்று அல்வழி முடிபு கூறுகின்றது.

(இ - ள்.) அல்வழியெல்லாம் உறழெனமொழிப — இவ் வீற்று அல்வழிகளெல்லாந் தந்திரிபு வல்லெழுத்தினோடு உறழ்ந்து முடியுமென்று கூறுவர் புலவர்; எ - று.

(எ - டு.) கல்குறிது கற்குறிது சிறிது தீது பெரிது என வரும்.

எல்லா மென்றதனாற் கல்குறுமை கற்குறுமை சிறுமை தீமை பெருமை எனக் குணம்பற்றி வந்தவேற்றுமைக்கும் உறழ்ச்சி கொள்க.

இன்னும் இதனானே வினைச் சொல்லீறு திரிந்தனவும் உருபு திரிந்தனவுங் கொள்க. வந்தானாற் கொற்றன் பொருவானாற் போகான் எனவும், அத்தாற் கொண்டான் இத்தாற் கொண்டான் உத்தாற் கொண்டான்* எத்தாற் கொண்டான் எனவும் வரும்.

அக்காற் கொண்டான் என்றாற் போலப் பிறவும் முடிபு உள்ளன வெல்லாம் இதனான் முடித்துக் கொள்க. (எ௩)

லகர மெய் ஆய்த மாதல்

௩௬௯. தகரம் வரும்வழி ஆய்தம் நிலையலும்
புகரின் றென்மனார் புலமை யோரே.

இது லகரம் றகரமாய்த் திரிதலேயன்றி ஆய்தமாகத் திரியுமென்றலின் எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ - ள்.) தகரம் வருவழி ஆய்தம் நிலையலும் — தகரம் முதலாகிய மொழி வந்தால லகரம றகரமாய்த் திரிதலேயன்றி ஆய்தமாகத் திரிந்து நிற்றலும், புகர் இன்று என்மனார் புலமையோர்—குற்றமின்றெனறு சொல்லுவார் ஆசிரியர்; எ - று.

(எ - டு.) கஃறீது கற்றீது என வரும்.

புகரின் றென்றதனால் 'நெடியதனிறுதி' (எழு-௩எ0) என்பதனுள் வேறீது வேற்றீது என்னும் உறழ்ச்சி முடிபுங் கொள்க. (எ௪)

லகர ஈற்றிற்கு வேறு முடிபு

௩எ0. நெடியதன் இறுதி இயல்புமா ருளவே.

---

* அத்தால் இத்தால் உத்தால் என்பன முறையே அஃது இஃது உஃது என்பனவற்றின் திரிபான அத்து இத்து உத்து என்பனவற்றின் மூன்றும் வேற்றுமை.

இன் வருஉம்—ஆண்டு இரண்டல்லாத எண்ணுப் பெயர்க ளிடத்து முடிய இன்சாரியை இடைவந்து புணரும்; எ - று.

(எ - டு.) பதினொன்று பதின்மூன்று பதினான்கு பதினைந்து பதி னாறு பதினேழு பதினெட்டு என வரும்.

நிலைமொழி முற்கூறுதலாற் பிறவெண்ணின் முன்னர்ப் பிற பெயர் வந்துழியும் இன்பெறுதல் கொள்க ஒன்பதின் கூறு ஒன்பதின் பால் என வரும். முற்படவன்மையாற் பதினொன்கென்புழி வந்து இன்னின் னகரம் வருமொழிக்கட் கருவிசெய்து கெடுத்து முடிக்க. (உசு)

பத்தின் முன் இரண்டு

சஙச. பத்தனொற் றுக்கெட னகாரம் இரட்டல்
ஒத்த தென்ப இரண்டுவரு காலை.

இது மேல் இன்பெறுமென்று விலக்கிய இரண்டற்குப் பிறிது விதி கூறுகின்றது.

(இ - ள்.) பத்தன் ஒற்றுக் கெட னகாரம் இரட்டல்—பத் தென்னுஞ் சொல்லில் நின்ற தகர ஒற்றுக் கெட னகர ஒற்று இரட்டித்து வருதல், இரண்டு வருகாலை ஒத்ததென்ப—இரண் டென்னுமெண் வருங்காலத்திற் பொருந்திற் றென்பர் ஆசிரி யர்; எ - று.

(எ - டு.) பன்னிரண்டு என வரும்.

'குற்றியலுகர மெய்யொடுங் கெடும்' (எழு - சஙங) என்ற விதி இதற்கும் மேலனவற்றிற்குங் கொள்க. (உ௧)

பத்தின் முன் ஆயிரம்

சஙரு. ஆயிரம் வரினும் ஆயியல் திரியாது.

இஃது ஆயிரமென்னும் எண்ணுப்பெயர்வரின் வரும் முடிபு கூறு கின்றது.

(இ - ள்.) ஆயிரம் வரினும் ஆயியல் திரியாது—முற்கூறிய பத்தன் முன்னர் ஒன்று முதலியனவேயன்றி ஆயிரமென்னு மெண வந்தாலும் ஈறுகெட்டு இன்பெற்று முடியும் இயல்பில் திரியாது; எ - று.

(எ - டு.) பதினாயிரம் என வரும்.

உம்மை இறந்தது தழீஇயிற்று. (௬௦)

பத்தின் முன் நிறை அளவுப் பெயர்கள்

சஙசு. நிறையு மளவும் வருஉங் காலையுங்
குறையா தாகும் இன்னென் சாரியை.

இஃது எண்ணுப்பெயரோடு நிறைப்பெயரும் அளவுப்பெயரும் புணர்கின்ற புணர்ச்சி கூறுகின்றது.

(இ - ள்.) நிறையும் அளவும் வருஉங் காலையும்—முற்கூறிய பத்தென்பதன் முன்னர் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் வருங்காலத்தும், இன்னென் சாரியை குறையாதாகும்—அவ்வின் னென்னுஞ் சாரியை குறையாது வந்து முடியும்; எ - று.

(எ - டு.) பதின் கழஞ்சு தொடி பலம் எனவும், பதின்கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி எனவும், பதிற்றகல் பதிற்றுழக்கு எனவும் வரும்.

குறையாதாகுமென்றதனாற் பொருட் பெயரும் எண்ணுப்பெயரும் நிறைப்பெயரும் வந்துழியும் இன் கொடுத்து வேண்டுஞ்செய்கை செய்து முடிக்க. *பதிற்று வேலி யாண்டு அடுக்கு சூழும் எனவும், பதின்றிங்கள் எனவும், பதிற்றுத்தொடி எனவும் வரும். பதிற்றொன்று என்பது போல இரண்டுமுதற் பத்தளவும் ஒட்டுக.

இவ் வீற்றின் னகரம் றகரமாதல் 'அளவாகு மொழிமுதல்' (எழு. ௧௨௧) என்பதனுள் 'நிலைஇய' என்றதனால் முடிக்க. இவற்றிற்கு ஒற்றிரட்டுதலும் உகரம் வருதலும் வல்லெழுத்துப் பெறுதலும் 'ஒன்றுமுதலாக' (எழு-௪௩௩.) என்பதனுள் 'முற்ற' என்றதனாற் கொள்க. (௩௧)

எண்ணுப் பெயரோடு பத்து

௪௩எ. ஒன்றுமுத லொன்பான்† இறுதி முன்னர்
நின்ற பத்த னொற்றுக்கெட ஆய்தம்
வந்திடை நிலையும் இயற்கைத் தென்ப
கூறிய இயற்கை குற்றிய லுகரம்
ஆறன் இறுதி அல்வழி யான.

இஃது எண்ணுப் பெயரோடு பத்தென்னும் எண்ணுப்பெயர்க்கு முடிபு கூறுகின்றது.

(இ - ள்.) ஒன்றுமுதல் ஒன்பான இறுதிமுன்னர்—ஒன்றுமுதல் ஒன்பது ஈறாகக் கூறுகின்ற எண்ணுப் பெயர்களின் முன்னர், நின்ற பத்தன் ஒற்றுக்கெட—வருமொழியாக வந்து நின்ற பத்தென்னுஞ் சொல்லினது தகர ஒற்றுக்கெட, ஆய்தம் வந்து இடை நிலையும் இயற்கைத் தென்ப—ஆய்தமானது வந்து இடையே நிலைபெறும் இயல்பையுடைத்தென்று கூறுவர் ஆசிரியர், ஆறன் இறுதி அல்வழியான—அவற்றுள் ஆறென்னும் ஈறல்லாத விடத்து, குற்றியலுகரங் கூறிய இயற்கை—குற்றிய

*பதிற்று என்பதில் இற்று சாரியை என்பர் பவணந்தியார்.

† ஒன்பான் என்பது ஒன்பது என்பதன் மறுவடிவம். இஃது இன்று குறிக்கும் 9 என்னும் எண்ணுக்கு முதலாவது வழங்கின பெயர் தொண்டு என்பது.

லுகரம் முற்கூறிய இயற்கையாய் மெய்யொடுங்கெட்டு முடியும்; எ - று.

இங்ஙனம் வருமாறு மேற்சூத்திரங்களுட் காட்டுதும்.

(எ - டு.) வஃதென்றதனால் ஆய்தமாகத் திரியாது தகர ஒற்றுக் கெட்டு ஒருபது என்று நிற்றலுங்கொள்க. (௩௨)

அதன்கண், 'ஒன்று' இரண்டு என்னுஞ் சொற்கள்

௪௩௯. முதலீ ரெண்ணினொற்று ரகர மாகும்
உகரம் வருத லாவயி னான.

இது மேற்கூறியவற்றிற் சிலவற்றிற்கு நிலைமொழிச்செய்கை கூறுகின்றது.

(இ - ள்.) முதலீ ரெண்ணி னொற்று ரகரம் ஆகும்—அவற்றின் முதற்கண் நின்ற இரண்டெண்ணினுடைய னகர ஒற்றும் ணகர ஒற்றும் ரகர ஒற்றாகத் திரிந்து நிற்கும், ஆவயினான உகரம் வருதல்—அவ்விடத்து உகரம் வரும்; எ - று.

(எ - டு.) ஒருபஃது என வரும். ஒன்றென்பதன் ஈற்றுக் குற்றுகரம் மெய்யொடுங் கெடுத்து னகர ஒற்றினை ரகர ஒற்றாக்கி உகர பேற்றி ஒருவென நிறுத்தி நின்ற பதுவென்பதன் தகர ஒற்றுக் கெடுத்து ஆய்தமாக்கிப் பஃதென வருவித்து ஒருபஃது என முடிக்க. மேல் வருவனவற்றிற்குஞ் சூத்திரங்களாற் கூறுஞ் சிறப்புவிதி ஒழிந்தவற்றிற்கு இதுவே முடிபாகக் கொள்க. (௩௩)

'இரண்டு' என்பதற்கு மேலும் ஒரு முடிபு

௪௩௩. இடைநிலை ரகரம் இரண்டென் எண்ணிற்கு
நடைமருங் கின்றே பொருள்வயி னான.

இதுவும் அது.

(இ - ள்.) இரண்டெ னெண்ணிற்கு இடையில் ரகரம்—இரண்டென்னு மெண்ணிற்கு இடை நின்ற ரகரம், பொருள்வயினான—அம்மொழி பொருளை பெறும் இடத்து, நடைமருங்கின்று—நடக்கும் இடமின்றிக் கெடும்; எ - று.

(எ - டு.) இருபஃது என வரும். இதற்கு ரகர உயிர்மெய் இதனாற் கெடுத்து ஏனைய கூறியவாறே கூட்டி முடிக்க.

பொருளெனவே எண்ணல்லாப் பெயருங் கொள்க. இருகடல் இருவினை இருபிறப்பு என வரும். (௩௪)

'மூன்று' 'ஆறு'

௪௩௪. மூன்று மாறும் நெடுமுதல் குறுகும்.

இதுவும் அது.

(இ - ள்.) மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகும்—மூன்றென்னு மெண்ணும் ஆறென்னு மெண்ணும் நெடுமுதல் குறுகி முடியும்; எ - று.

(எ – டு.) அறு எனக் குறுக்கிப் பஃது என வருவித்து அறுபஃது என முடிக்க. (௧௫)

'மூன்று' என்பதற்கு மேலும் ஒரு முடிபு

சசக. மூன்ற னொற்றே பகார மாகும்.

இதுவும் அது.

(இ - ள்.) மூன்றன் ஒற்றே பகாரமாகும்—மூன்றென்னும் எண்ணின்கண் நின்ற னகர ஒற்றுப் பகர ஒற்றாய் முடியும்; எ - று.

(எ - டு.) முப்பஃது என வரும். (௧௬)

'நான்கு' என்னுஞ் சொல்

சசஉ. நான்க னொற்றே றகார மாகும்.

இதுவும் அது.

(இ - ள்.) நான்கன் ஒற்றே றகாரமாகும்—நான்கென்னும் எண்ணின்கண் நின்ற னகர ஒற்று றகர ஒற்றாய் முடியும்; எ - று.

(எ - டு.) நாற்பஃது என வரும். (௧௭)

'ஐந்து' என்னுஞ் சொல்

சசங. ஐந்த னொற்றே மகார மாகும்.

இதுவும் அது.

(இ - ள்.) ஐந்தனொற்றே மகாரமாகும்—ஐந்தென்னு மெண்ணின்கண் நின்ற நகர ஒற்று மகர ஒற்றாய் முடியும்; எ - று.

(எ - டு.) ஐம்பஃது என வரும்.

ஏழு குற்றியலுகர ஈறன்மை உருபியலுட் காண்க. (௧௮)

'எட்டு' என்னுஞ் சொல்

சசச. எட்ட னொற்றே ணகார மாகும்.

இதுவும் அது.

(இ - ள்.) எட்டனொற்றே ணகாரமாகும்—எட்டென்னு மெண்ணின்கண் நின்ற டகர ஒற்று ணகர ஒற்றாய் முடியும்; எ - று.

(எ - டு.) எண்பஃது என வரும். (௧௯)

### 'ஒன்பது' என்னுஞ் சொல்

சசடு. *ஒன்பான் ஒகரமிசைத் தகரம் ஒற்றும்
முந்தை யொற்றே ணகாரம் இரட்டும்
பஃதென் கிளவி ஆய்தபக ரங்கெட
நிற்றல் வேண்டு மூகாரக் கிளவி
ஒற்றிய தகரம் றகர மாகும்.

இஃது எய்தாத தெய்துவித்தது.

(இ - ள்.) ஒன்பான் ஒகரமிசைத் தகரம் ஒற்றும்—ஒன்பது என நிறுத்திப் பஃது என வருவித்து முடிக்குங்கால், நிலைமொழியாகிய ஒன்பதென்னும் எண்ணினது ஒகரத்திற்கு முன்னாக ஒரு தகர ஒற்றுத் தோன்றி நிற்கும், முந்தை ஒற்றே ணகாரம் இரட்டும்—முன் சொன்ன ஒகரத்திற்கு முன்னர் நின்ற னகர ஒற்று ணகர ஒற்றாய் இரட்டித்து நிற்கும், பஃதென் கிளவி ஆய்த

* இந்நூற்பா ஒன்பது × பஃது = தொண்ணூறு என முடிக்கின்றது. இம்முடிபு எவ்வகையிலும் பொருந்தாத தொன்றாம். ஒன்பது என்னும் எண்ணுக்குப் பழம்பெயர் தொண்டு என்பது 'தொண்டு தலையிட்ட' (தொல். 1358) என்று ஆசிரியரும், 'தொண்டுபடு திவவு' (மலைபடு, 21) என்று பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனாரும் கூறுதல் காண்க. தொண்டு என்னுஞ் சொல் தொல்காப்பியர் காலத்திலேயே வழக்கற்றுப் போய்விட்டது. அவர்காலத்திற்கு முன் தொண்டு தொண்பது தொண்ணூறு தொள்ளாயிரம் என்பன முறையே, 9, 90, 900, 9000 என்னும் எண்களைக் குறிக்கும் பெயர்களாயிருந்தன. 'தொண்டு' என்னும் ஒன்றாமிடப்பெயர் வழக்கறவே, தொண்பது என்னும் பத்தாமிடப் பெயர் ஒன்றாமிடத்திற்கும், தொண்ணூறு என்னும் நூறாமிடப்பெயர் பத்தாமிடத்திற்கும், தொள்ளாயிரம் என்னும் ஆயிரமாமிடப்பெயர் நூறாமிடத்திற்குமாக வழங்கத் தலைப்பட்டன. தொண்பது என்னும் பெயர் முறையே தொன்பது ஒன்பது என மருவிற்று. ஆயிரமாமிடப் பெயர் நூறாமிடத்திற்குமாக வழங்கவே, 9000 என்னும் எண்ணைக் குறிக்க ஒன்பது என்னும் பெயருடன் ஆயிரம் என்னும் பெயரைச் சேர்க்க வேண்டியதாயிற்று. முதற் பத்து எண்ணுப் பெயர்களில் ஒன்பது என்பதைத் தவிர, மற்றவையெல்லாம் ஒரு சொல்லாயிருப்பதையும், ஒன்பது என்பது இரு சொல்லாய்ப் பது (பத்து) என்று முடிவதையும் தொண்ணூறு என்பது நூறு என்றும் 'தொள்ளாயிரம் என்பது ஆயிரம் என்றும் முடிவதையும் நோக்குக. தொண்பது என்பதின் திரிபான ஒன்பது என்றும் சொல்லுக்குப் பொருந்தப் புகலும் முறைபற்றி, ஒன்று குறைந்த பத்து என்று பொருள் கூறுவர் சிலர். அதுவே அதன் பொருளாயின் 'தொண்ணூறு தொள்ளாயிரம் என்பவற்றிற்கும் அப்பொருள் ஏற்க வேண்டும். அங்ஙனம் ஏலாமையின் அது போலியுரையென மறுக்க. ஆகவே தொண்டு + பத்து = தொண்பது, தொண்டு + நூறு = தொண்ணூறு, தொண்டு + ஆயிரம் = தொள்ளாயிரம் என்று புணர்ப்பதே முறையென்றும், தொண்டு என்னும் எண்ணுப்பெயர் வழக்கற்றதினால் அதன் மேலிடப்பெயர்கள் மூன்றும் ஒவ்வோரிடமாய்த் தாழ்ந்துவந்து வழங்கின என்றும் அறிந்துகொள்க.

பகரங்கெட—வருமொழியாகிய பஃதென்னுஞ் சொல் தன்கண் ஆய்தமும் பகரமுங்கெட்டுப்போக, ஊகாரக் கிளவி நிற்றல் வேண்டும்—நிலைமொழியில் இரட்டிய ணகரத்தின் பின்னர் ஊகாரமாகிய எழுத்துவந்து நிற்றலை ஆசிரியன் விரும்பும், ஒற்றிய தகரம் றகரமாகும—வருமொழியாகிய பத்தென்பதன் ஈற்றின்மேலேறிய உகரங் கெடாது பிரிந்துநிற்ப ஒற்றாய் நின்ற தகரம் றகர ஒற்றாய் நிற்கும்; எ - று.

(எ - டு.) தொண்ணூறு என வரும். இதனை ஒற்றாய் வந்து நின்ற தகர ஒற்றின்மேல் நிலைமொழி ஒகரத்தை ஏறறித் தொவ்வாக்கி ணகர ஒற்று இரட்டி அதன்மேல் வருமொழிக்கட் பகரமும் ஆய்தமுங் கெட வந்த ஊகாரமேற்றித் தொண்ணூறவாக்கிப் பகரவாய்தமென்றத முறையின்றிக் கூற்றினான் நிலைமொழிக்கட் பகரமும் ஆய்தமுங் கெடுத்துக் குற்றியலுகரம் மெய்யொடுங் கெடுத்து வருமொழி இறுதித்தகர ஒற்றைத் திரிந்து நின்ற றகர ஒற்றின்மேலே நின்ற உகரமேற்றித் தொண்ணூறென முடிக்க. (சo)

அவ்வெண்ணுப் பெயர்கள் முன் அளவு நிறைப்பெயர்கள்

சசசு. அளந்தறி கிளவியும் நிறையின் கிளவியுங்
கிளந்த இயல தோன்றுங் காலை.

இது மேற்கூறிய ஒன்றுமுதல் ஒன்பானெண்களோடு அளவுப் பெயரும் நிறைப்பெயரும் முடியுமாறு கூறுகின்றது.

(இ - ள்) அளந்தறி கிளவியும் நிறையின் கிளவியுந் தோன்றுங் காலை—முற்கூறிய ஒன்றுமுதல் ஒன்பானகளின் முன்னர் அளந்தறியப்படும அளவுப பெயரும் நிறைப பெயரும் வந்து தோனறுங்காலத்து, கிளந்த இயல—ஆறன் ஈறு அல் வழிக் குற்றுகரம் மெய்யொடுங்கெட்டு முதலீரெண்ணி னொற்று ரகரமாய் உகரம வந்து இடைநிலை ரகரங்கெட்டு மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகி நானகனொற்று வனகணத்து றகரமாய் எட்டனொற்று ணகரமாய் முடியும; எ - று.

(எ - டு) ஒருகலம் இருகலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி எனவும், ஒருகழஞ்சு இருகழஞ்சு கஃசு தொடி பலம் எனவும் வரும் அகல் உழக்கு என்பன முன்னர் முடித்தும். இவை முதலீரெண்ணின் செய்கை.

தோன்றுங்காலையென்றதனான் இவ்வெண்ணின் முன்னர் எடுத்தோத்தானும் இலேசானும் முடியாதுநின்ற எண்ணுப்பெயர்களெல்லாம இவ்விதியும் பிறவிதியும் எய்துவித்து முடித்துக்கொள்க. ஒரு மூன்று ஒருநான்கு இருமூன்று இருநான்கு ஒருகால் இருகால் ஒரு முந்திரிகை இருமுந்திரிகை ஒருமுக்கால் இருமுக்கால் என்பன பிறவுங் கொணர்ந்து ஒட்டுக. இனிப் பிறவிதி எய்துவன ஓரொன்று ஓரிரண்டு ஓரைந்து ஓராறு ஓரேழு ஓரெட்டு ஓரொன்பது எனவும், ஈரொன்று ஈரிரண்டு ஈரைந்து ஈராறு ஈரேழு ஈரெட்டு ஈரொன்பது எனவும், மூவொன்று மூவிரண்டு மூவைந்து மூவாறு மூவேழு மூவெட்டு

மூவொன்பது எனவும், 'முதலீரெண்ணின் முன்உயிர்' (எழு-சஙஉ) என்னுஞ் சூத்திரத்தான் உயிர்க்கு எய்திய பிறவிதியும் 'மூன்றன் முத னிலை நீடலு முரித்து' (எழு சஙஎ) என்ற பிறவிதியும் பெற்றுப் பிற செய்கைகளும் பெற்று முடிந்தன. நாலொன்று நாலிரண்டு நாலைந்து நாலாறு நாலேழு நாலெட்டு நாலொன்பது என்பன 'நான்கனொற்றே லகாரமாகும்' (எழு-சஙஅ) என்ற விதிபெற்று முடிந்தன. பிறவும் இவ்வாறேயன்றி அளவும் நிறையுமன்றி வருவனவெல்லாம் இவ்வி லேசான் முடிக்க. (சக)

அதன்கண் 'மூன்று' என்னுஞ் சொல்

சசஎ. மூன்ற னொற்றே வந்த தொக்கும்.

இது மேல் மாட்டேற்றோடு ஒவ்வாததற்கு வேறு முடிபு கூறு கின்றது.

(இ - ள்.) மூன்றனொற்றே வந்த தொக்கும்—மூன்றுமெண் ணின்கணின்ற னகர ஒற்று வருமொழியாய் வந்த அளவுப்பெயர் நிறைப்பெயர்களின் முன்னர் வந்த வல்லொற்றோடு ஒத்த ஒற்றாய்த் திரிந்து முடியும்; எ - று.

(எ - டு.) முக்கலம் சாடி தூதை பானை எனவும், முக்கழஞ்சு கஃசு தொடி பலம் எனவும் வரும்.

'நான்க னொற்றே றகார மாகும்' (சசஉ) என்ற முன்னை மாட் டேறு நிற்றலின் நாற்கலம் சாடி தூதை பானை எனவும், நாற்கழஞ்சு தொடி பலம் எனவும் வரும். (சஉ)

'ஐந்து' என்னுஞ் சொல்

சசஅ. ஐந்த னொற்றே மெல்லெழுத் தாகும்.

இதுவும் அது.

(இ - ள்.) ஐந்தனொற்றே மெல்லெழுத்தாகும்—ஐந்தாவதன் கண் நின்ற நகர ஒற்று வருமொழி வல்லெழுத்துக்கு ஏற்ற மெல் லெழுத்தாகத் திரிந்து முடியும்; எ - று.

(எ - டு.) ஐங்கலம் சாடி தூதை பானை எனவும், ஐங்கழஞ்சு தொடி பலம் எனவும் வரும். ஏகாரம் ஈற்றசை. (சங)

அவ்விரண்டின் மேல் முடிபுகட்கு வரையறை

சசகூ. கசதப முதன்மொழி வரூஉங் காலை.

இது முற்கூறிய மூன்றற்கும் ஐந்தற்கும் வருமொழி வரையறுக் கின்றது.

(இ - ள்.) கசதப முதன்மொழி வரூஉங் காலை—மூன்ற னொற்று வந்ததொப்பதூஉம் ஐந்தனொற்று மெல்லெழுத் தாவதூஉம் அவ்வளவுபெயர் ஒன்பதினும் வன்கணமாகிய கசதபக்கள் முதன் மொழியாய் வந்த இடத்து; எ - று.

அது முன்னர்க் காட்டினும். ஆறு 'நெடு முதல் குறுகும்' (எழு-சசO) என்ற மாட்டேற்றானே ஆறு நெடுமுதல் குறுகின்றது.

(உ-ம்.) அறுகலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி எனவும், அறுகழஞ்சு தொடி பலம் எனவும் வரும். அகல் உழக்கு என்பன மேற் காட்டினும். ஏழு குற்றுகர ஈறன்மையின் மாட்டேறு ஏலாதாயிற்று. (சஎ)

'எட்டு' என்னுஞ் சொல்

சஅO. நமவ என்னும் மூன்றொடு சிவணி
அகரம் வரினும் எட்டன்மு னியல்பே.

இது வேண்டாது கூறி* வேண்டியது முடிக்கின்றது,† 'ஞநமயவ' (எழு-கசஎ) என்னுஞ் சூத்திரத்துட் கூறியவற்றைக் கூறுதலின்.

(இ-ள்.) எட்டன்முன்—எட்டென்பதன் முன்னர், நமவ என்னும் மூன்றொடு சிவணி அகரம் வரினும—அளவுப்பெயர்களின் முன்னர் மென்கணத்து இரண்டும் இடைக்கணத்து ஒன்றுமாகிய நமவ என்னும் மூன்றனோடு பொருந்தி உயிர்க் கணத்து அகரம் வரினும், உம்மையான் உயிர்க்கணத்து உகரம் வரினுங் கூறாத வல்லெழுத்துக்கள் வரினும், இயல்பு—முற் கூறியவாறே டகாரம் ணகாரமாய் வேறொரு விகாரமின்றி இயல்பாய் முடியும; எ-று.

நமவவென்னும் மூன்றும் வந்தாற்போல அகரம் வரினு மென்பது பொருள்

(உ-ம்.) எண்ணாழி மண்டை வட்டி எனவும் எண்ணகல் எண்ணுழக்கு எனவும், எணகலம் சாடி தூதை பானை எனவும் வரும்.

ஒன்றென முடித்தலான் வன்கணத்து நிறைப்பெயருங் கொள்க. எண்கழஞ்சு தொடி பலம் என வரும்.

இவ்வேண்டா கூறலான் எண்ணக லெனக் குற்றுகர ஈறுய்க் கேடுந் திரிவும் பெற்று உயிர்வரு மொழியான தொடர்மொழிக்கண் ஒற்றிரட்டுதல் கொள்க. (சகூ)

'ஐந்து' 'மூன்று' என்னும் இரண்டு சொற்களுக்கும் ஒத்த முடிபு

சஅக. ஐந்தும் மூன்றும் நமவரு காலை
வந்த தோக்கும் ஒற்றியல் நிலையே.

இதுவும் மேல் மாட்டேற்றோடு ஒவ்வா முடிபு கூறுகின்றது.

(இ-ள்.) ஐந்தும் மூன்றும் நம வருகாலை—ஐந்தென்னு மெண்ணும் மூன்றென்னுமெண்ணும நகர முதன்மொழியும் மகர முதனமொழியும் வருமொழியாய் வருங்காலத்து, ஒற்றியல் நிலை—

---

* வேண்டாது கூறல்—ஞநமயவ (எழு-கசஎ) என்னும் நூற்பாவிற் கூறியதைக் கூறல்.

† வேண்டியது முடித்தல் – உயிர்முதன் மொழி வருமிடத்து நிலை மொழி யீற்று மெய் இரட்டுதலைக் கொள்ளுதல்.

நிலைமொழிக்கண் நின்ற ஒற்று நடக்கும் நிலைமை கூறின், வந்தது ஒக்கும்—மேற் கூறியவாறே மகாரமும் பகாரமு மாகாது வருமொழி முதல் வந்த ஒற்றொடு ஒத்த ஒற்றும் முடியும்; எ - று.

(எ - டு.) ஐந்நாழி ஐம்மண்டை மூந்நாழி மும்மண்டை என வரும்.

மூன்றும் ஐந்தும் என்னாத முறையன்றிக் கூற்றினால் நானாழி நான்மண்டை என்புழி நிலைமொழி னகரம் றகரமாகாது. நின்றவாறே நின்று முடிதலும் வருமொழி முதனின்ற நகரம் னகரமாய்த் திரிய நிலைமொழி நகரங் கெடுதலுங் கொள்க. (சசு)

'மூன்று' 'நான்கு' 'ஐந்து' முன் வகரமுதன் மொழி

மூன்ற னொற்றே வகரம் வருவழித்
தோன்றிய வகரத் துருவா கும்மே.

இதுவும் அது.

(இ - ள்.) மூன்றனொற்று — மூன்றுமெண்ணின்கணின்ற னகர ஒற்று, வகரம் வருவழி—வகரமுதனமொழி வருமிடத்து, தோன்றிய வகரத்து உருவாகும் — அவ்வருமொழியாய்த் தோன்றிய வகரத்தின வடிவாய் முடியும்; எ - று.

(எ - டு.) முவ்வட்டி என வரும்.

தோன்றிய என்றதனானே முதல் நீண்டு வகர ஒற்றின்றி மூவட்டி என்றுமாம். (சஎ)

சறுஅ. நான்க னொற்றே லகார மாகும்.

இதுவும அது.

(இ - ள்.) நான்கனொற்று-நான்காமெண்ணின்கணின்ற னகர ஒற்று, லகாரமாகும்—வகர முதன்மொழி வந்தால லகர ஒற்றாகத் திரிந்து முடியும்; எ - று.

(எ - டு.) நால்வட்டி என வரும். (சஅ)

சறுச. ஐந்த னொற்றே முந்தையது கெடுமே.

இதுவும் அது.

(இ - ள்.) ஐந்தனொற்று—ஐந்தாமெண்ணின்கணின்ற நகர ஒற்று, முந்தையது கெடும்—வகர முதன்மொழி வந்தால் முன்னின்ற வடிவு கெட்டு முடியும்; எ - று.

(எ - டு.) ஐவட்டி என வரும்.

முந்தை யென்றதனால் நகர ஒற்றுக் கெடாது வகர ஒற்றாகத் திரிந்து ஐவ்வட்டியெனவும் சிறுபான்மை வரும். (சகூ)

'ஒரு' 'இரு' முன் உயிர்முதன் மொழி

சுருரு. முதலீ ரெண்ணின்முன் உயிர்வரு காலைத்
தவலென மொழிப உகரக் கிளவி
முதனிலை நீட லாவயி னான.

இது மாட்டேற்றான்* எய்திய உகரத்திற்குக் கேடு கூறி முதனீள்க என்றலின், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுகின்றது.

(இ - ள்.) முதலீரெண்ணின் முன் உயிர் வருகாலை—ஒரு இரு என முடிந்து நின்ற இரண்டெண்ணின் முன்னர் உயிர் முதன் மொழி வருமொழியாம் வருங்காலத்து, உகரக்கிளவி தவலென மொழிப—நிலைமொழியுகரமாகிய எழுத்துக் கெடுதலா மென்று சொல்லுவர் புலவர், ஆவயினான முதனிலை நீடல்—அவ்விரண் டெண்ணின்கணின்ற முதலெழுத்துக்கள் நீண்டு முடியும்; எ - று.

(எ - டு.) ஓரகல் ஈரகல் ஒருழக்கு ஈருழக்கு என வரும். (௯௦)

'மூன்று' 'நான்கு' 'ஐந்து' முன் உயிர்முதன் மொழி

சுருக. மூன்றும் நான்கும் ஐந்தென் கிளவியும்
தோன்றிய வகரத் தியற்கை யாகும்.

இதுவும் அது.

(இ - ள்.) மூன்றும் நான்கும் ஐந்தென் கிளவியும்—மூன் றென்னுமெண்ணும் நான்கென்னுமெண்ணும் ஐந்தென்னுமெண் ணும், தோன்றிய வகரத்து இயற்கையாகும—முன்னர்த் தோன்றி நின்ற வகரம் வருமொழிக்குக் கூறிய இயல்பாக மூன்றின்கண் வகர ஒற்றுயும், நான்கின்கண் லகர ஒற்றுயும, ஐந்தின்கண் ஒற்றுக் கெட்டும் முடியும்; எ - று.

(எ - டு.) முவ்வகல் முவ்வுழக்கு என இதற்குத் தோன்றிய என்றதனால் ஒற்றிரட்டுதல் கொள்க. நாலகல் நாலுழக்கு ஐயகல் ஐயுழக்கு என வரும்.

தோன்றிய என்றதனால் மேல் மூன்றென்பது முதல் நீண்ட இடத்து நிலைமொழி னகரவொற்றுக் கெடுத்துக்கொள்க. இயற்கை யென்றதனால் தொடர்மொழிக்கண் ஒற்றிரட்டுதல் கொள்க. 'மூன்றனொற்றே' முதலிய மூன்று சூத்திரமுங் கொணர்ந்து முடிக்க. (௯௧)

அவற்றுள் 'மூன்று' என்பதற்கு மேலும் ஒரு முடிபு

சுருஎ. மூன்றன் முதனிலை நீடலு முரித்தே
உழக்கென் கிளவி வழக்கத் தான.

---

* மாட்டேறு 'அளந்தறிகிளவியும்'—(சுக) என்னும் நூற்பாவிற் கூறியது.

இது முன்னர்க் குறுகுமென்றதனை நீண்டுமுடிக என்றலின் எய்தியது விலக்கிற்று.

(இ - ள்.) மூன்றன் முதனிலை நீடலும் உரித்து—மூன் றென்னு மெண்ணின் முதனின்ற எழுத்து நீண்டு முடிதலும் உரித்து, அஃதியாண்டெனின், உழக்கு எனகிளவி வழக்கத்தான —உழக்கென்னுஞ் சொல் முடியும் வழக்கிடத்து; எ - று.

(எ - டு.) மூவுழக்கு என வரும்.

வழக்கத்தான என்பதனான் அகலென் கிளவிக்கு முதனிலை நீடலுங் கொள்க. மூவகல் என வரும். இன்னும் அதனானே நிலை மொழி னகர ஒற்றுக் கெடுக்க.

மூவுழக்கு மூழாக்கென்னும் மருமுடிபு இவ்வோத்தின் புறனடை யான் முடிக்க. (௯௨)

ஆறு' என்பதற்கும் அம் முடிபு

௪௫௩. ஆறென் கிளவி முதல்நீ டும்மே.

இதுவும் அது.

(இ - ள்.) ஆறென் கிளவி—ஆறென்னு மெண்ணுப்பெயர் அகல் உழக்கு என்பன வரின, முதல் நீடும—முன்னர்க் குறுகி நின்ற முதலெழுத்து நீண்டு முடியும்; எ - று.

அறுவென்னாது ஆறென்றார், திரிந்ததன்றிரிபது என்னும் நயத்தால்.

(எ - டு.) ஆறகல் ஆறுழக்கு என வரும். (௯௩)

'ஒன்பது' என்னுஞ் சொல்

௪௫௪. ஒன்பா னிறுதி உருபுநிலை திரியா
தின்பெறல் வேண்டுஞ் சாரியை மொழியே.

இது குற்றுகரம் மெய்யொடுங் கெடாது நின்று இன் பெறுக என்றலின் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

(இ - ள்.) ஒன்பான் இறுதி உருபுநிலை திரியாது—அளவும் நிறையும் வருவழி ஒனபதெனனும் எண்ணின் இறுதிக் குற்றுகரந் தன் வடிவு நிலை திரியாது நின்று, சாரியை மொழி இனபெறல் வேண்டும்—சாரியைச் சொல்லாகிய இன் பெற்று முடிதலை விரும்பும் ஆசிரியன்; எ - று.

(எ - டு.) ஒன்பதின்கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு எனவும், கழஞ்சு தொடி பலம் எனவும் வரும்.

சாரியைமொழி யென்றதனான் இன்றோடு உகரமும் வல் லெழுத்துங் கொடுத்துச் செய்கை செய்து முடிக்க. ஒன்பதிற்றுக்கலம் சாடி என எல்லாவற்றோடும் ஒட்டுக.

உருபென்பதனான் ஒன்பதிற்றென ஒற்றிரட்டுதல் எல்லாவற்றிற்குங் கொள்க.

இன்னும் இதனானே ஒன்பதினாழி யென்புழி வந்த இன்னின் னகரக் கேடுங் கொள்க. 'அளவாகுமொழி முதல்' (எழு-௧௨௧) என்பதனானும் 'நிலையிய' என்னும் இலேசானும் இன்னின் னகரம் றகரமாதல் கொள்க. (௩௯)

ஒன்று முதல் ஒன்பது எண்முன் நூறு

௪௬௦. நூறுமுன் வரினுங் கூறிய இயல்பே.

இஃது ஒன்றுமுதல் ஒன்பான் எண்களோடு நூறென்பதனைப் புணர்க்கின்றது.

(இ - ள்.) முன்—ஒன்றுமுதல் ஒன்பான் எண்களின், முன்னர், நூறுவரினும்—நூறென்னு மெண்ணுப்பெயர் வந்தாலும், கூறிய இயல்பு—மேற் பத்தென்பதனோடு புணரும் வழிக் கூறிய இயல்பு எய்தி முடியும்; எ - று.

அது குற்றுகரம் மெய்யொடுங்கெட்டு மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகி முதலிரெண்ணி னொற்று ரகரமாய் உகரம் பெற்று இடைநிலை ரகரம் இரண்டன்கட் கெட்டு முடிதலாம்.

(உ - ம்.) ஒருநூறு இருநூறு அறுநூறு எண்ணூறு என வரும். இவை மாட்டேற்றான் முடிந்தன. மாட்டேறு ஒவ்வாதன மேற்கூறி முடிப்ப. (௪௦)

அதன்கண் 'மூன்று' என்னுஞ் சொல்

௪௬௧. மூன்ற னொற்றே நகார மாகும்.

இது மாட்டேற்றோடு ஒவ்வாததற்கு வேறு முடிபு கூறுகின்றது.

(இ - ள்.) மூன்றனொற்றே நகாரமாகும்—மூன்றுமெண்ணின் கணின்ற னகரவொற்று நகரவொற்றாகும்; எ - று.

(உ - ம்.) முந்நூறு என வரும். (௪௧)

அதன்கண் 'நான்கு' 'ஐந்து'

௪௬௨. நான்கும் ஐந்தும் ஒற்றுமெய் திரியா.

இதுவும் அது.

(இ - ள்.) நான்கும் ஐந்தும் ஒற்று மெய் திரியா—நான் கென்னு மெண்ணும் ஐந்தெனுமெண்ணுந் தம்மொற்றுக்கள் நிலை திரியாது முடியும்; எ - று.

(உ - ம்.) நானூறு என வரும்.

'மெய்'யென்றதனான் நானூறென்புழி வருமொழி நகரத்துள் ஊகாரம் பிரித்து 'லனவென வரூஉம்' (எழு-௧௪௯) என்பதனான் னகர வொற்றாக்கி ஊகாரமேற்றி நிலைமொழி னகரங் கெடுத்துக் கொள்க. (௪௨)

**அதன்கண், 'ஒன்பது' என்னுஞ் சொல்**

௪௬௩. ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே
முந்தை யொற்றே ளகாரம் இரட்டும்
நூறென் கிளவி நகார மெய்கெட
ஊஆ வாகும் இயற்கைத் தென்ப
ஆயிடை வருதல் இகார ரகாரம்
ஈறுமெய் கெடுத்து மகர மொற்றும்.

இதுவும் அது.

(இ - ள்.) ஒன்பான் முதனிலை முந்து கிளந்தற்று—ஒன்பதென்னுமெண்ணின் முதனின்ற ஒகரம் மேற் பத்தென்பதனோடு புணரும்வழிக் கூறியவாறு போல ஒரு தகரம் ஒற்றி அதன்மேல் ஏறி முடியும், முந்தை ஒற்றே ளகாரம் இரட்டும்—அவ்வொகாரத்தின் முனனின்ற னகர ஒற்று ளகர ஒற்றாய் இரட்டித்து நிற்கும். நூறென்கிளவி நகார மெய்கெட ஊஆவாகும் இயற்கைத் தென்ப—வருமொழியாகிய நூறென்னுமெண்ணுப்பெயர் நகரமாகிய மெய் கெட அதன்மேல் ஏறிய ஊகாரம் ஆகாரமாம் இயல்பையுடைத் தென்பர் புலவர், ஆயிடை இகர ரகரம் வருதல்—அம்மொழியிடை ஓர் இகரமும் ரகாரமும் வருக, ஈறு மெய்கெடுத்து மகரம் ஒற்றும்—ஈறாகிய குற்றுகரத்தினையும் அஃது ஏறிநின்ற றகர ஒற்றினையும் கெடுத்து ஒரு மகர ஒற்று வந்து முடியும்; எ - று.

மெய்யென்பதனான் நிலைமொழிக்கட் பகரங் கெடுக்க.

(உ - ம்.) தொள்ளாயிரம் என வரும்.

இதனை ஒன்பதென்னும் ஒகரத்தின் முன்னர் வந்த தகர ஒற்றின் மேலே ஒகரத்தையேற்றிப் பகரங் கெடுத்துக் குற்றியலுகரம் மெய்யொடுங் கெடுத்து நின்ற னகர ஒற்றினை இரண்டு ளகர ஒற்றாக்கி நூறென்பதன் நகரங்கெடுத்து ஊகாரம் ஆகாரமாக்கி ளகரத்தின் மேலேற்றி இகரமும் ரகரமும் வருவித்து விகாரப்பட்ட உயிராகிய ஆகாரத்தின்முன் உடம்படுமெய் யகாரம் வருவித்து றகர உகரங் கெடுத்து மகர ஒற்று வருவித்து முடிக்க. (௩௮)

**'ஒன்று' 'இரண்டு' முன் ஆயிரம்**

௪௬௪. ஆயிரக் கிளவி வரூஉங் காலை
முதலீ ரெண்ணின் உகரங் கெடுமே.

இஃது அவ்வொன்றுமுதல் ஒன்பான் எண்களோடு ஆயிரம் முடியுமாறு கூறுகின்றது.

---

* இந்நூற்பா ஒன்பது × நூறு = தொள்ளாயிரம் எனப் புணர்க்கின்றது. ஒன்பா னொகரமிசை (எழு-௪௪௫) என்னும் நூற்பாவிற்குக் கூறிய அடிக்குறிப்பை இதற்குங் கொள்க.

(இ - ள்.) ஆயிரக்கிளவி வருஉங் காலை—ஆயிரமென்னுஞ் சொல் ஒன்றுமுதல் ஒன்பான் எண்கள் முன் வருங்காலத்து, முதல் ஈரெண்ணின உகரங் கெடும்—ஒரு இரு எனனும் இரண் டெண்ணினகட் பெற்று நின்ற உகரங்கெட்டு முடியும்; எ - று.

உகரங்கெடுமெனவே ஏனையன முன்னர்க் கூறியவாறே நிற்றல் பெற்றும்.

,(எ - டு.) ஓராயிரம் இராயிர்ம் ஏன வரும். (௬௯)

அவற்றிற்கு, மேலும் ஒரு முடிபு

௪௬௫. முதனிலை நீடினும் மான மில்லை.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

(இ - ள்.) முதனிலை நீடினும மானமில்லை—அம்முதலீரெண் ணின் முதற்கணின்ற ஒகார இகாரங்கள் நீண்டுமுடியினுங் குற்ற மில்லை; எ - று.

(எ – டு.) ஓராயிரம், ஈராயிரம் என வரும். (௭0)

‘மூன்று’ முன் ஆயிரம்

௪௬௬. மூன்ற னொற்றே வகார மாகும்.

இது மூன்றென்னுமெண் ஆயிரத்தோடு புணருமாறு கூறுகின்றது.

(இ - ள்.) மூன்றனொற்றே வகாரமாகும்—மூன்றென்னு மெண்ணின்கணின்ற னகர ஒற்று வகர ஒற்றாகத் திரிந்து முடியும; எ - று.

(எ – டு.) முவ்வாயிரம் என வரும்.

முன்னிற் சூத்திரத்து நிலை என்றதனான் இதனை முதனிலை நீட்டி வகர ஒற்றுக் கெடுத்து மூவாயிரம் என முடிக்க. (௭௧)

‘நான்கு’ முன் ஆயிரம்

௪௬௭. நான்க னொற்றே லகார மாகும்.

இது நான்கென்னுமெண் அதனோடு புணருமாறு கூறுகின்றது.

(இ - ள்.) நான்கனொற்றே லகாரமாகும் — நான்கென்னு மெண்ணின்கணின்ற னகர ஒற்று லகர ஒற்றாகத் திரிந்து முடியும்; எ - று.

(எ - டு.) நாலாயிரம் என வரும். (௭௨)

‘ஐந்து’ முன் ஆயிரம்

௪௬௮. ஐந்த னொற்றே யகார மாகும்.

இஃது ஐந்தென்னுமெண் அதனோடு புணருமாறு கூறுகின்றது.

(இ - ள்.) ஐந்தனொற்றே யகாரமாகும் — ஐந்தென்னுமெண்ணின்கணின்ற நகர ஒற்று யகர ஒற்றாகத் திரிந்து முடியும்; எ - று.

(எ - டு.) ஐயாயிரம் என வரும். (சுஅ)

**'ஆறு' முன் ஆயிரம்**

சசுகூ. ஆறன் மருங்கிற் குற்றிய லுகரம்
ஈறுமெய் ஒழியக் கெடுதல் வேண்டும்.

இஃது ஆறென்னுமெண் அதனோடு புணருமாறு கூறுகின்றது.

(இ - ள்.) ஆறன் மருங்கிற் குற்றியலுகரம் — ஆறென்னுமெண்ணின்கணின்ற குற்றியலுகரம் நெடுமுதல் குறுகி அறுவென முற்றுகரமாய் நிற்றலின், மெய் ஒழிய ஈறு கெடுதல் வேண்டும் — அது தானேறிய மெய்யாகிய றகர ஒற்றுக்கெடாது நிற்ப முற்றுகரமாகிய ஈறு தான் கெட்டுப் புணர்தலை விரும்பும் ஆசிரியன்; எ - று.

(எ - டு.) அறுயிரம் என வரும்.

முன்னர் 'நெடுமுதல் குறுகும்' (எழு-சசு0) என்றவழி அறுவென நின்ற முற்றுகரத்திற்கே ஈண்டுக் கேடு கூறினாரென்பது பெற்றாம். என்னை? குற்றியலுகரமாயின் ஏற முடிதலின். இது குற்றுகரந் திரிந்து முற்றுகரமாய் நிற்றலின் ஈண்டு முடிபு கூறினார். முற்றியலுகரம் ஈறுமெய் யொழியக் கெடுமெனவே குற்றுகரங் கெடாது ஏறிமுடியுமென்பது அருத்தாபத்தியாற் பெறுதும். ஆருயிரம் என வரும்.

மருங்கென்றதனாற் பிற பொருட்பெயர்க்கண்ணும் நெடுமுதல் குறுகாது நின்று முடிதல் கொள்க. ஆருகுவதே என வரும். (சுசு)

**'ஒன்பது' முன் ஆயிரம்**

சஎ0. ஒன்பா னிறுதி உருபுநிலை திரியா
தின்பெறல் வேண்டுஞ் சாரியை மரபே.

இஃது ஒன்பதென்னுமெண் அதனோடு புணருமாறு கூறுகின்றது.

(இ - ள்.) ஒன்பான் இறுதி — ஒன்பதென்னுமெண்ணின் இறுதிக் குற்றுகரம், உருபுநிலை திரியாது — தன் வடிவுநிலை திரிந்து கெடாது. சாரியை மரபு இன் பெறல்வேண்டும் — சாரியையாகிய மரபினையுடைய இன் பெற்று முடிதலை விரும்பும் ஆசிரியன்; எ - று.

(எ - டு.) ஒன்பதினாயிரம் என வரும்.

உருபென்றும் நிலையென்றுஞ் சாரியை மரபென்றுங் கூறிய மிகையால் ஆயிரமல்லாத பிறவெண்ணின் கண்ணும் பொருட் பெயரிடத்தும் இன்னும்

உகரமும் வல்லெழுத்தும் பெற்று முடியும் முடிபு கொள்க. ஒன்பதிற்றுக் கோடி* ஒன்பதிற்றொன்பது ஒன்பதிற்றுத்தடக்கை ஒன்பதிற்றெழுத்து என வரும்.

இன்னும் இவ்விலேசானே வேறொரு முடிபின்மையிற் கூறு தொழிந்த எண்ணுயிர மென்றவழி ஒற்றிரட்டுதலும் ஈண்டுக் கூறிய வற்றிற்கு ஒற்றிரட்டுதலுங் கொள்க. 'அளவாகு மொழி முதல்' (எழு சுஉஉ) என்பதனுள் 'நிலைஇய' என்றதனான் னகரம் றகரமாதல்† கொள்க. (௬௪)

ஒன்றுமுதல் ஒன்பது எண் முன் 'நூறாயிரம்'

சஎ௬. நூறா யிரமுன் வரூஉங் காலை
நூற னியற்கை முதனிலைக் கிளவி.

இஃது ஒன்றுமுதல் ஒன்பான் எண்களோடு நூறென்னுமெண் அடையாக அடுத்த ஆயிரம் முடியுமாறு கூறுகின்றது.

(இ - ள்.) நூறாயிரம் முன் வரூஉங் காலை—நூறாயிரமென்னும் அடையடுத்த மொழி ஒன்று முதல் ஒன்பான் எண்கள முன் வருமொழியாய் வருங்காலத்து, முதனிலைக் கிளவி நூறென் இயற்கை—ஒன்றென்னும் முதனிலைக் கிளவி ஒன்று முன் நூறென்னு மெண்ணொடு முடிந்தாற்போல விகாரமெய்தி முடியும், எனவே வழிநிலைக் கிளவியாகிய இரண்டு முதலிய எண்கள் விகாரமெய்தியும் எய்தாது இயல்பாயும் முடியும்; (எ - று)

(எ - டு) ஒரு நூறாயிரம் என வரும். ஏனையன இருநூறாயிரம் இரண்டு நூறாயிரம், மூந்நூறாயிரம் மூன்று நூறாயிரம், நானூறாயிரம் நான்கு நூறாயிரம், ஐந்நூறாயிரம் ஐந்து நூறாயிரம், அறுநூறாயிரம் ஆறுநூறாயிரம், எண்ணூறாயிரம் எட்டு நூறாயிரம், ஒன்பது நூறாயிரம் என வரும. இவ்விகாரபபட்டனவற்றிற்குக் குற்றுகரம் மெய்யொடுங் கெடுத்து முதலீரெண்ணி னொற்று ரகரமாக்கி உகரம் வருவித்த மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுக்கி மூன்றனொற்று நகாரமாக்கி நான்கும் ஐந்தும் ஒற்றுமெய் திரியா வாக்கி எட்டனொற்று ணகாரமாக்கி இலேசுகளாற்கொண்ட செய்கைகளில் வேண்டுவனவுங் கொணர்ந்துமுடிக்க.

---

* இலக்கம் கோடியென்னும் எண்ணுப் பெயர்கள் இவ்வியலிற் கூறப்படாமையால் பழந் தமிழர்க்கு 99999 வரைதான் எண்ணத் தெரிந்திருந்தது என்று சிலர் கொள்வர். இலக்கம் கோடி என்பன குற்றியலுகரச்சொற்களல்லவென்றும் குற்றுகரச் சொற்களே இவ்வியலிற் புணர்த்துக் காட்டப்படுவன வென்றும, இலக்கத்தின் மறு பெயரான நூறாயிரம் என்னும் சொல்லும் பத்து நூறாயிரம் வரை புணர்த்தற்கிடமும் அடுத்த (எழு-சஎ௬). நூற்பாவிற் கூறப்பட்டுள வென்றும், இலக்கம் கோடி என்னும் பெயர்கள் முறையே பெரிய இலக்கம் அடைசி யெண் என்று பொருள்படும் தனித்தமிழ்ச் சொற்களே என்றும் அறிந்து கொள்க.

† னகரம் றகரமாதல், ஒன்பதிற்றுக்கோடி ஒன்பதிற்றொன்பது முதலியவற்றில்.

ஏற்புழிக்கோட லென்பதனால் தொள்ளாயிரமென்ற முடிபினோடு மாட்டேறு சென்றதேனும் அவ்வாறு முடியாதென்று கொள்க. முன்னென்பதனன் இன் சாரியை பெற்று ஒன்பதினாறாயிரம் என்றுமாம். நிலையென்றதனன் மூன்றும் ஆறும் இயல்பாக முடிவுழி கெடுமுதல் குறுகாமை கொள்க. (சுகூ)

## நூறு முன் ஒன்று முதல் ஒன்பது எண்கள்

சஎஉ. நூறென் கிளவி ஒன்றுமுத லொன்பாற்கு
ஈறுசினை யொழிய இனவொற்று மிகுமே.

இது நூறென்பதனோடு ஒன்று முதல் ஒன்பான்களைப் புணர்க்கின்றது.

(இ - ள்.) நூறு என் கிளவி—நூறென்னு மெண்ணுப் பெயர், ஒன்று முதல் ஒன்பாற்கு—ஒன்றுமுதல ஒன்பான் எண்களோடு புணருமிடத்து, ஈறு சினை யொழிய—ஈறாகிய குற்றுகரந் தன்னாற் பற்றப்பட்ட மெய்யொடுங் கெடாதுநிற்ப, இன ஒற்று மிகும்—அச் சினைக்கு இனமாகிய றகர ஒற்று மிகுது முடியும்; எ - று.

(எ - டு) நூற்றொன்று என வரும். இரண்டு முதல் ஒன்பது அளவுஞ் செய்கை யறிந்து ஒட்டுக.

ஈறுசினை என்று ஓதிய மிகையான் நூறென்பதனோடு பிற எண்ணும் பிறபொருட் பெயரும் இவ் விதியும் பிறவிதியும் எய்தி முடிதல் கொள்க. நூற்றுப்பத்து நூற்றுக்கோடி நூற்றுத் தொண்ணூறு எனவும், நூற்றுக்குறை நூற்றிதழ்த்தாமரை நூற்றுக் காணம் நூற்றுக்கான் மண்டபம் எனவும் இன ஒற்று மிக்கன கொள்க. இன்னும் இதனானே இருநூற்றொன்று, இரண்டு நூற்றொன்று என நூறு அடையடுத்த வழியுங் கொள்க. (சுஎ)

## நூறு முன் 'ஒருபஃது' முதலியன

சஎங. அவையூர் பத்தினும் அத்தொழிற் றாகும்.

இஃது அந்நூறென்பதனோடு ஒன்றுமுதல் ஒன்பான் எண்கள் அடையடுத்தவழிப் புணருமாறு கூறுகின்றது.

(இ - ள்.) அவையூர் பத்தினும்—அந்நூறென்பது நின்று மூற்கூறிய ஒன்றுமுதல் ஒன்பான எண்களை ஊர்ந்து வந்த பத்தென்பதனோடு புணருமிடத்தும், அத்தொழிற்றாகும்—ஈறு சினையொழிய இன ஒற்று மிக்கு முடியும், எ - று.

(எ - டு.) நூற்றொருபஃது இருபஃது முப்பஃது நாற்பஃது ஐம்பஃது அறுபஃது எழுபஃது எண்பஃது என வரும். மற்று நூற்றொன்பது அவை ஊரப்பட்டு வந்தது அன்மை உணர்க.

ஆகுமென்றதனன் ஒருநூற்றொருபஃது இருநூற்றொருபஃது என நிலைமொழி அடையடுத்து முடியும் முடிபுங் கொள்க. (சுஅ)

நூறு முன், அளவுப்பெயர் நிறைப்பெயர்

௪௭௪. அளவும் நிறையும் ஆயியல் திரியாது
குற்றிய லுகரமும் வல்லெழுத் தியற்கையும்
முற்கிளந் தன்ன என்மனார் புலவர்.

இது நாறென்பதனோடு அளவுப்பெயரும் நிறைப்பெயரும் முடியு மாறு கூறுகின்றது.

(இ - ள்.) அளவும் நிறையும் ஆயியல் திரியாது—நாறென் பதனோடு அளவுபபெயரும் நிறைபபெயரும் புணருமிடத்து முற்கூறிய இயல்பிற் றிரியாது இன ஒற்று மிக்கு முடியும், குற் றிய லுகரமும் வல்லெழுத்தியற்கையும்—அவ்விடத்துக் குற்றிய லுகரங் கெடாமையும் இன ஒற்று மிக்கு வன்றொடர்மொழி யாய் நிற்றலின் வருமொழி வல்லெழுத்து மிகும் இயல்பும், முற் கிளந்தனன என்மனார் புலவர்—'வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து மிகுமே' (எழு - ௪௨௬) என வன்றொடர் மொழிக் குக் கூறிய தன்மையவாய் முடியுமென்று கூறுவர் புலவர்; எ - று.

(எ - டு.) நூற்றுக்கலம்சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு எனவும் கழஞ்சு தொடி பலம் எனவும் வரும்.

திரியாதென்றதனால் நாறென்பது அடையடுத்த வழியும் இவ்விதி கொள்க. அஃது ஒருநூற்றுக்கலம் இருநூற்றுக்கலம் என வரும். (௩௩)

'ஒருபஃது' முதலியவற்றின் முன் ஒன்று முதல் ஒன்பது எண்கள்

௪௭௫. ஒன்று முத லாகிய பத்தூர் கிளவி
ஒன்றுமுத லொன்பாற் கொற்றிடை மிகுமே
நின்ற ஆய்தங் கெடுதல் வேண்டும்.

இஃது ஒன்று முதல் எட்டு ஈறாகிய எண்கள் அடையாக அடுத்த பத்தனோடும் ஒன்று முதல் ஒன்பான் எண்களைப் புணர்க்கின்றது.

(இ - ள்.) ஒன்று முதலாகிய பத்து ஊர் கிளவி—ஒன்று முதல் எட்டு ஈறாகப் பத்தென்னும் எண் ஏறி ஒரு சொல்லாகி நின்ற ஒரு பஃது முதலிய எண்கள், ஒன்று முதல் ஒன்பாற்கு—ஒன்றுமுதல் ஒன்பான் எண்கள் வருமொழியாய் வந்து புணரும் இடத்து, நின்ற ஆய்தங் கெடுதல் வேண்டும்—பஃதெனபதன் கண் நின்ற ஆய்தங் கெட்டு முடிதலை விரும்பும் ஆசிரியன், ஒற்று இடைமிகும்—ஆண்டு இன ஒற்றாகிய ஒரு தகர ஒற்று இடைமிக்கு முடியும்; எ - று.

(எ - டு.) ஒருபத்தொன்று இருபத்தொன்று ஒருபத்திரண்டு இரு பத்திரண்டு என எல்லாவற்றோடும் ஒட்டுக. இவற்றுள் ஒருபத்

தொன்று ஒருபத்திரண்டு என்னும் எண்கள் அதிகாரத்தால் நின்ற நூறென்பதனோடும் அடுத்து வருமென்று* உணர்க. (௭0)

அவற்றின் முன் 'ஆயிரம்'

௪௭௩. ஆயிரம் வரினே இன்னென் சாரியை
ஆவயி னொற்றிடை மிகுத லில்லை.

இஃது ஒருபஃது முதலியவற்றோடு ஆயிரத்தைப் புணர்க்கின்றது.

(இ - ள்.) ஆயிரம் வரின் இன்னென் சாரியை—அவ்வொன்று முதலாகிய பத்து ஊர் கிளவி முன் ஆயிரம் வந்து புணருமிடத்து இன்சாரியை பெறும், ஆவயின் ஒற்று இடை மிகுதல் இல்லை—அவ்விடத்துத் தகர ஒற்று இடையில் மிகாது; எ - று.

(எ - டு.) ஒருபதினாயிரம் இருபதினாயிரம் என எண்பதின்காறும் ஓட்டுக. இவை நூற்றொருபதினாயிரம் எனவும் வரும்.

ஆவயின் என்றதனால் நூறாயிரத்தொருபத்திராயிரம் என்றாற் போல அத்துப் பெறுதலும் பிறவுங் கொள்க. (௭௧)

அவற்றின் முன் அளவுப் பெயர் நிறைப் பெயர்

௪௭௭. அளவும் நிறையும் ஆயியல் திரியா.

இஃது ஒன்று முதலாகிய பத்து ஊர் கிளவி முன்னர் அளவுப் பெயரும் நிறைப்பெயரும் புணர்க்கின்றது.

(இ - ள்.) அளவும் நிறையும் ஆயியல் திரியா—ஒருபஃது முதலிய எண்களின் முன்னர் அளவுப்பெயரும் நிறைப்பெயரும் வந்தால் ஒற்று இடைமிகாது இன்சாரியை பெற்று முடியும்; எ - று.

(எ - டு.) ஒருபதின்கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு எனவும், ஒருபதின கழஞ்சு தொடி பலம் எனவும் வரும். இவற்றிற்கு நூறு அடையடுத்து ஓட்டுக.

திரியா என்றதனான் ஒருபதிற்றுக்கலம் இருபதிற்றுக்கலம் என்னுந் தொடக்கத்தனவற்றின்கண் இன்னின் அகரம் றகரமாகத் திரிந்து இரட்டுதலும் உகரமும் வல்லெழுத்து பெறுதலுங் கொள்க. இன்னும் இதனானே ஒருபதினாழி என்றவழி வருமொழி நகரந் திரிந்தழி நிலைமொழி னகரக்கேடுங் கொள்க.

அளவு நிறையு மதனோ ரன்ன என்று பாடம் ஓதுவார் முன்னர்ச் சூத்திரத்து 'ஆவயின்' என்றதனானும் அதன் முன்னூர்ச் சூத்திரத்து 'நின்ற' என்றதனானும் இவற்றை முடிப்பார். (௭உ)

---

* நூறென்பதனோடு அடுத்துவருதல் - நூற்றொருபத்தொன்று நூற்றொருபத்திரண்டு என வருதல்.

### ஒன்று முதல் எண்முன் பொருட்பெயர்

சஎஅ. முதனிலை எண்ணின்முன் வல்லெழுத்து வரினும்
ஞநமத் தோன்றினும் யவவந் தியையினும்
முதனிலை யியற்கை என்மனார் புலவர்.

இஃது ஒன்றுமுதல் ஒன்பான் எண்களோடு பொருட் பெயரைப் புணர்க்கின்றது.

(இ - ள்.) முதனிலை எண்ணின்முன் வல்லெழுத்து வரினும்—ஒன்றென்னும் எண்ணின்முன் வல்லெழுத்து முதன் மொழி வரினும், ஞநம தோன்றினும்—ஞநமக்களாகிய மெல்லெழுத்து முதன்மொழி வரினும், யவவந்து இயையினும்—யவக்களாகிய இடையெழுத்து முதன்மொழி வரினும, முதனிலை இயற்கை என்மனார் புலவர்—அவ்வொன்று முதல் ஒன்பான் எண்களும் முன்னெய்திய முடிபு நிலைமை எய்தி முடியுமென்று கூறுவர் புலவர்; எ - று.

எனவே, வழிநிலையெண்ணாகிய இரண்டு முதலாகிய எண்கள் அம்மூன்று கணமும் முதன்மொழியாய் வரின் முதனிலை முடிபாகி விகாரம் எய்தியும் எய்தாது இயல்பாயும் முடியும்.

(உ - டு.) ஒருகல் சுனை துடி பறை ஞாண் நூல் மணி யாழ் வட்டு எனவும், இருகல் இரண்டுகல் சுனை துடி பறை ஞாண் நூல் மணி யாழ் வட்டு எனவும் ஒட்டுக. இவ்வெண்களிற் குற்றியலுகரம் மெய்யொடுங் கெட்டு முதலீரெண்ணின் ஒற்று ரகாரமாய் உகரம் வந்தது. இருகல், இருசுனை முதலியவற்றிற்கு இரண்டு என்பதன் இடைநிலை ரகாரங் கெடுக்க. முக்கல் மூன்றுகல் சுனை துடி பறை ஞாண் நூல் மணி யாழ் வட்டு என ஒட்டுக. இதற்கு நெடு முதல் குறுக்கி 'மூன்றனொற்றே வந்த தொக்கும்' (எழு-சசஎ) என்பதனுனீ முடிக்க. முன்னர் எண்ணுப் பெயரும் அளவுப் பெயரும் நிறைப்பெயரும் வருவழிக் கூறிய விகாரங்களிற் பொருட்பெயர்க்கும் ஏற்பன கொணர்ந்து முடித்து எல்லாவற்றிற்கும் நிலையென்றுதனுன் ஒற்றுத்திரித்து முடிக்க. அவை மூன்றற்கும் ஐந்தற்கும் ஞகரம் வருவழி ஞகர ஒற்றுதலும் மூன்றற்கு யகரம் வருவழி வகர ஒற்றுதலுமாம். நாற்கல் நான்குகல் சுனை துடி பறை; நான்ஞாண் நான்குஞாண் நூல் மணி யாழ் வட்டு; ஐங்கல் ஐந்துகல் சுனை துடி பறை; ஐஞ்ஞாண் ஐந்து ஞாண் நூல் மணி; ஐயாழ் ஐந்துயாழ் ஐவட்டு; ஐந்துவட்டு; அறுகல் ஆறுகல் சுனை துடி பறை ஞாண் நூல் மணி யாழ் வட்டு; எண்கல் எட்டுக்கல் சுனை துடி பறை; எண்ஞாண் எட்டுஞாண் நூல் மணி யாழ் வட்டு என ஒட்டுக. ஒன்பதின் கல் எனச் சென்றதேனும் வழக்கின்மையின் ஒழிக்க. இன்னும் மாட்டேயன்றி வருவனவற்றை முடிபு நிலை யென்றதனுன் முடிக்க (எக)

### அவற்றுடன் உயிர் முதல் மொழியும் யகரமும்

சஎகூ. அதனிலை உயிர்க்கும் யாவரு காலை
முதனிலை ஒகரம் ஓவா கும்மே
ரகாத் துகரந் துவராக் கெடுமே.

இஃது ஒன்றுமுதல் ஒன்பான் எண்களோடு பொருட்பெயருள் உயிர் முதல்மொழி முடியுமாறும் மேற்கூறிய யகாரம் வேறுபட முடியுமாறுங் கூறுகின்றது

(இ - ள்.) முதனிலைக்கு—ஒன்றென்னும் எண்ணின் திரிபாகிய ஒரு என்னும் எண்ணிற்கு, உயிரும் யாவும் வருகாலை—உயிர் முதன்மொழியும் யாமுதன்மொழியும் வருமொழியாய் வருங் காலத்து, அதன் நிலை—அம்முதனிலையின் தன்மை இவ்வாறும், ஒகரம் ஓவாகும்—ஒகரம் ஓகாரமாய் நீளும், ரகரத்து உகரந் துவரக் கெடும்—ரகரத்து மேனின்ற உகரம் முற்றக் கெட்டு முடியும்; எ - று.

நான்காவதனை முதனிலையோடு கூட்டி அதன்கண் நின்ற உம்மையை, உயிரோடும் யாவோடுங் கூட்டுக. எனவே வழிநிலையெண்கள் உயிர் முதன்மொழி வந்த இடத்து முற்கூறியவாறே இருவாற்றானும் முடியும்.

(எ - டு.) ஓரடை ஓரகம் ஓரிலை ஓரீட்டம் ஓருலை ஓரூசல் ஓரெழு ஓரேடு ஓரையம் ஓரொழுங்கு ஓரோலை ஓரௌவியம் என வரும். குற்றிய லுகரம் மெய்யொடுங் கெடுத்து முதலெண்ணின்றுற்று ரகரமாக்குக. ஓர் யாழ் ஓர் யானை என வரும். துவர என்றதனான் இரண்டென்னும் எண்ணின் இகரத்தை நீட்டி ரகரத்துள் உகரத்தைக் கெடுத்து ஈரசை ஈர்யானை எனவும் மூன்றென்னும் எண்ணின் னகரவொற்றுக் கெடுத்து மூவகை மூயானை எனவும் முடிக்க. இவை செய்யுண் முடிபு. இன்னும் இதனானே இங்ஙனம் வருவன பிறவும் அறிந்து முடித்துக் கொள்க. (எச)

இரண்டு முதல் ஒன்பது ஈறுக உள்ள எண்முன் 'மா' என்னுஞ்சொல்

சஎ0. இரண்டு முத லொன்பா னிறுதி முன்னர்
வழங்கியல் மாவென் கிளவி தோன்றின்
மகர அளவொடு நிகரலு முரித்தே.

இஃது இரண்டுமுதல் ஒன்பான் ஈறுக உள்ள எண்களின் முன்னர் அளவு முதலிய மூன்றற்கும் உரிய மாவென்பது புணருமாறு கூறுகின்றது.

(இ - ள்) இரண்டு முதல் ஒன்பான் இறுதி முன்னர்—இரண்டென்னுமெண் முதலாக ஒன்பதென்னுமெண் ஈறுக நின்ற எண்ணுப் பெயர்களின் முன்னர், வழங்கு இயல் மா என்கிளவி தோன்றின்—வழக்கின்கண்ணே நடந்த அளவு முதலியவற்றிற்கு உரிய மா வென்னுஞ் சொல் வருமொழியாய் வரின், மகர அளவொடு நிகரலும் உரித்து—அவ்வெண்ணுப் பெயர்களின் முன்னர்த் தந்து புணர்க்கப்படும் மண்டையென்னும் அளவுப் பெயரோடு ஒத்து விகாரப்பட்டு முடிதலும் உரித்து; உம்மையான் விகாரப்படாது இயல்பாய் முடிதலும் உரித்து; எ - று.

வழக்கியல் வழங்கியலென விகாரம். மகர அளவு மகரமுதன் மொழியாகிய அளவுப் பெயரெனப் பண்புத்தொகை., அஃது 'அளந்தறி கிளவியும்' (எழு - சசகூ) என்பதனுள் ஒரு மண்டை என முடித்ததாம்.

(உ - ம்.) இருமா மும்மா நான்மா ஐம்மா அறுமா எண்மா ஒன்பதின்மா* என முன்னர்க் கூறிய சூத்திரங்களான் விகாரப்படுத்தி முடிக்க. இனி உம்மையான் விகாரப்படுத்தாது இரண்டுமா மூன்றுமா நான்குமா ஐந்துமா ஆறுமா எட்டுமா ஒன்பதுமா என முடிக்க. புள்ளி மயங்கியலுள் 'அளவு நிறையும்' (எழு கூஅக) என்னுஞ் சூத்திரத்தான் நெடுமுதல் குறுகி உகரம் வந்து புணருமாறு கூறினார். அதனான் ஈண்டு எழுமா என முடிக்க. ஏழ்மாவென முடிதல் வழக்கன்று.

* இரண்டுமுதல் ஒன்பானென்று எடுத்தோதினமையின், ஒன்றற்கு ஒருமாவென்னும் முடிபேயன்றி ஒன்றுமா வென்னும் முடிபு இல்லையாயிற்று.

வழங்கியன்மா என்றார் விலங்குமாவை நீக்குதற்கு. (எகூ)

## ௬. அதிகாரப் புறனடை

### புள்ளி மயங்கியலுள் ஒழிந்துநின்ற மெய்யீறுகளின் செய்யுள் முடிபு

௪அ௩. லனவென வரூஉம் புள்ளி யிறுதிமுன்
உம்முங் கெழுவம் உளப்படப் பிறவும்
அன்ன மரபின் மொழியிடைத் தோன்றிச்
செய்யுட் டொடர்வயின் மெய்பெற நிலையும்
வேற்றுமை குறித்த பொருள்வயி னான.

இது புள்ளிமயங்கியலுள் ஒழிந்துநின்ற செய்யுண்முடிபு கூறுகின்றது.

(இ - ள்.) லன என வரூஉம் புள்ளி இறுதி முன்—லகார னகாரமென்று கூற வருகின்ற புள்ளியீற்றுச் சொற்களின் முன்னர், உம்முங் கெழுவும் உளப்பட—உம்மென்னுஞ் சாரியையுங் கெழுவென்னுஞ் சாரியையும் உட்பட, பிறவும் அன்ன மரபின் மொழியிடைத் தோன்றி—பிறசாரியையும் அப்பெற்றிப்பட்ட மரபினையுடைய மொழியிடத்தே தோன்றி, செய்யுள் தொடர்வயின் மெய் பெற நிலையும்—செய்யுட் சொற்களைத் தொடர்பு படுத்திக் கூறுமிடத்துப் பொருளபட நிற்கும், வேற்றுமை குறித்த பொருளவயினான—வேற்றுமையைக் குறித்த பொருட் புணர்ச்சிக்கண்; எ - று.

(உ - ம்.) 'வானவரி வில்லுந் திங்களும் போலும்' இதற்கு உம்மென்னுஞ் சாரியையின் மகரத்தை 'அம்மினிறுதி' (எழு-கஉக) என்னுஞ் சூத்திரத்துள் 'தன்மெய்' என்றதனாற் பிறசாரியையுந் திரியுமென நகர ஒற்றாக்கி நிலைமொழி லகர ஒற்றின்மேல் உயிரேற்றி முடிக்க. வில்லுந் திங்களும் போலுமென்பதற்கு வில்லிடைத்திங்கள் போலுமென ஏழனுருபு விரித்துப் பொருளுரைக்க. 'கல்கெழுகானவர் நல்குறு மகளே' (குறுந் எக). இதற்குக் கல்லைக் கெழீஇயின என உரைக்க. 'மாநிதிக் கிழவனும் போன்ம்' (அகம் - கூ) இதற்குக் கிழவனைப்போன்மென உரைக்க. இவ் வும்மை சிறப்பன்று. 'கான்கெழு நாடு' (அகம்-கஅ) இதற்குக் கானைக் கெழீஇய என உரைக்க.

இனி அன்னமரபின் மொழியிடை என்றதனுற் கெழுவென்றது பிற சொல்விடத்தே 'பணைகெழு பெருந்திறற் பல்வேல் மன்னர்' 'துறைகெழு மாந்தை' (நற்றிணை-௩௫) என இயல்பாக வருவனவும், 'வளங்கெழு திருநகர்' (அகம் – ௧௭) 'பயங்கெழு மாமழை' (புறம் – உ௬௬) என நிலைமொழி யீற்றெழுத்துத் திரிய வருவனவுங் கொள்க.

இன்னும் இதனானே இன்சாரியையது உகரக்கேடும் எகர நீட்சியுங் கொள்க. 'பூக்கேழ் தொடலை நுடங்க வெழுந்து' (அகம் – உ௮) 'துறைகேழ் ஊரன் கொடுமை நாணி' (ஐங்குறு – ௧௧) இவற்றிற்கு இரண்டாவதும் ஏற்புழி மூன்றாவதும் விரிக்க. 'செங்கேழ் மென்கொடி' (அகம்-௮0) என்புழிக் கெழுவென்னும் உரிச்சொல் 'எழுத்துப் பிரிந் திசைத்தல்' (சொல் – ௩௯௬) என்பதனான் நீண்டதென்று உணர்க. மெய் யென்றதனாற் பூக்கேழென்புழி வல்லொற்று மிகுதல் கொள்க.

இன்னுஞ் 'சான்றோர் செய்யுட்கட் பிறசாரியை பெற்று விகாரங்கள் எய்தி முடிவனவற்றிற்கெல்லாம் இச்சூத்திரமே விதியாக முடித்துக் கொள்க. (௭௪)

### எழுத்ததிகாரத்திற் புணர்க்கப்படாத சொற்கள்

௪௮௨. உயிரும் புள்ளியும் இறுதி யாகிக்
குறிப்பினும் பண்பினும் இசையினுந் தோன்றி
நெறிப்பட வாராக் குறைச்சொற் கிளவியும்
உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்
ஐம்பா லறியும் பண்புதொகு மொழியுஞ்
செய்யுஞ் செய்த என்னுங் கிளவியின்
மெய்யொருங் கியலுந் தொழில்தொகு மொழியும்
தம்மியல் கிளப்பின் தம்முன் தாம்வரூஉம்
எண்ணின் தொகுதி உளப்படப் பிறவும்
அன்னவை யெல்லாம் மருவின் பாத்திய
புணரியல் நிலையிடை உணரத் தோன்றா.

இஃது இவ்வதிகாரத்திற் புணர்க்கப்படாத சொற்கள் இவை யென அவற்றை எடுத்து உணர்த்துகின்றது.

(இ - ள்.) உயிரும் புள்ளியும் இறுதியாகி—கூறுங்கால் உயிரும் புள்ளியும் ஈறாக நிற்பதொரு சொல்லாகி, குறிப்பினும் பண்பினும் இசையினும் தோன்றி—குறிப்பினானும் பண்பினானும் இசையினானும் பிறந்து, நெறிப்பட வாராக் குறைச் சொற் கிளவியும்—ஒருவழிப்பட வாராத சொற்றன்மை குறைந்த சொற்களாகிய உரிச்சொற்களும், உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்—உயர்திணை அஃறிணை யென்னும் அவ்விரண்டிடத்தும் உளவாகிய, ஐம்பாலறியும் பண்புதொகு மொழியும்—ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என்னும் ஐந்துபாலினையும்

அறிதற்குக் காரணமாகிய பண்புகொள்பெயர் தொகுந்தொகைச் சொல்லும், செய்யுஞ் செய்த என்னுங் கிளவியின்—செய்யுஞ் செய்த என்னும் பெயரெச்சச் சொற்களினுடைய, மெய் ஒருங்கு இயலுந் தொழில் தொகுமொழியும்—காலங்காட்டும் உம்மும் அகரமும் ஒரு சொற்கண்ணே சேர நடக்கும் புடைபெயர்ச்சி தொக்கு நிற்குஞ் சொற்களும், தம் இயல் கிளப்பின்—தமது தன்மை கூறுமிடத்து, தம் முன் வரூஉம் எண்ணின் தொகுதி உளப்பட—நிறுத்தசொல்லுங் குறித்துவரு கிளவியுமாய் வாராது தமமுன்னர் தாமே வந்து நிற்கும் எண்ணுப் பெயரினது தொகு தியும் உளப்பட, அன்ன பிறவும் எல்லாம்—அத்தன்மையாகிய பிறவுமெல்லாம், மருவின் பாத்திய - உலகத்து மருவி நடந்த வழக் கினது பகுதியைத் தம் இலக்கணமாகவுடைய, புணரியல் நிலை இடை யுணரத் தோன்ற—ஒன்றனோடொன்று புணருதல் நடந்த தன்மை இடம் விளங்கத் தோன்ற; எ - று.

(எ - டு.) கண் விண்ண விணைத்தது விண் விணைத்தது இவை குறிப் புரிச்சொல்: ஆடை வெள்ள விளர்த்தது வெள்விளர்த்தது இவை பண் புரிச்சொல்; கடல் ஒல்ல வொலித்தது ஒல்லொலித்தது இவை இசை யுரிச்சொல். 'ஒல்லொலிநீர் பாய்வதே போலுந் துறைவன்' என்றார் செய்யுட்கண்ணும். இவை உயிரீறும் புள்ளியீறும் நிற்றலின் ஒன்றன்கண் அடக்கலாகாமையின் நெறிப்பட வாரா என்றார். விண்ண விணைத்தது தெறிப்புத் தோன்றத் தெறித்த தென்றும் விண்விணைத் தது தெறிப்புத் தெறித்ததென்றும் ஆம். ஏனையவற்றிற்கும் இவ்வாறே உணர்க. இங்ஙனம் நிற்றலிற் றன்மை குறைந்த சொல்லாயிற்று. 'வினையே குறிப்பே' (சொல்-உகூஅ) என்னுஞ் சூத்திரத்திற் கூறிய என என்பதனை இவற்றோடு கூட்டியவழி இடைச்சொல்லாதலின் விண் ணென விணைத்தது எனப் புணர்க்கப்படுமாறு உணர்க.

இனிக் கரும்பார்ப்பான் கரும்பார்ப்பனி கரும்பார்ப்பார் கருங் குதிரை கருங்குதிரைகள் என வரும் இவற்றுட் கரியனாகிய பார்ப்பான் கரியளாகிய பார்ப்பனி கரியராகிய பார்ப்பார் கரியதாகிய குதிரை கரியனவாகிய குதிரைகள் என ஐம்பாலினையும் உணர்த்தும் பண்பு கொள் பெயர் தொக்கவாறு காண்க. இவற்றுட் கருமை என்னும் பண்புப் பெயர் தொக்கதேற் கருமையாகிய பார்ப்பானென விரித்தல் வேண்டும்; அங்ஙனம் விரியாமையிற் பண்புகொள் பெயர் தொக்க தென்று உணர்க.

வெற்றிலை வெற்றுப்பிலி வெற்றடி வெற்றெனத் தொடுத்தல் என்றாற் போல்வனவற்றுள் வெறுவிதாகிய இலையென்பது பாக்குங் கோட்டு நூறுங் கூடாததாய பண்புணர்த்தி ஈறு தொகுதலின் மருவின் பாத்தியவாய் நின்று ஒற்றடுத்தது. வெறுவிதாகிய உப்பிலியென்றது சிறிதும் உப்பிலியென நின்றது. ஏனையவும் அன்ன. இங்ஙனம் ஐம்பாலுந் தொகுத்தற்கு உரிய முதனிலையாதலிற் புணர்த்தலாகாமை கூறினார்.

இனி ஆடரங்கு செய்குன்று புணர்பொழுது அரிவாள் கொல்யானை செல்செலவு என நிலம் முதலாகிய பெயரெச்சந்தொக்க வினைத்

தொகைகளை விரிக்குங்கால், ஆடினவரங்கு எனச் செய்த என்னும் பெயரெச்சத்து ஈறு விரிந்த அகர ஈறு இறப்பு உணர்த்தியும், ஆடு மரங்கு எனச் செய்யுமென்னும் பெயரெச்சத்து ஈறு விரிந்த உம் மீறு ஆடாநின்ற அரங்கு என நிகழ்வும் ஆடும் அரங்கு என எதிர்வும் உணர்த்தியும், அவற்றுறைய புடைபெயர்ச்சியைத் தோற்றுவித்து இரண்டு பெயரெச்சமும் ஒரு சொற்கண் ஒருங்கு தொக்கு நிற்றலின் அதனை ஒரு பெயரெச்சத்தின்கண் அடக்கிப் புணர்க்கலாகாமையிற் புணர்க்கலாகாதென்றார். உம்மிறுதி நிகழ்வும் எதிர்வும் உணர்த்து மாறு 'வினையின் தொகுதி' (சொல்-௪௧௫) என்னும் எச்சவியற் சூத்திரத்துட் கூறுதும். இவ் உம் ஈறு இரண்டு காலமும் ஒருங்குணர்த்துதற் சிறப்பு நோக்கிச் செய்த என்பதனை ஆசிரியர் முற்கூறுராயினர்.

இனிப் பத்து என நிறுத்திப் பத்தெனத் தந்து புணர்க்கப்படாது பப்பத்தெனவும் பஃபத்தெனவும் வழங்குமாறு உணர்க. ஒரோவொன் றென்பதும் அது. அதுதானே ஒரொன்றேரொன்றாகக் கொடு என்றாற் புணர்க்கப்படும்.

இனி அன்னபிறவும் என்றதனானே உண்டானென்புழி உண்ணென் னும் முதனிலையுங் காலங்காட்டும் டகரமும் இடனும் பாலும் உணர்த் தும் ஆனும் ஒன்றனோடொன்று புணர்க்கப்படா, அவை நிறுத்த சொல் லுங் குறித்துவரு கிளவியும் அன்மையின். கரியனென்புழிக் கருவென நிறுத்தி அன்னெனத் தந்து புணர்க்கப்படா, அஃது இன்னனென்னும் பொருள் தருதலின். ஏனை வினைச்சொற்களும் இவ்வாறே பிரித்துப் புணர்க்கலாகாமை உணர்க. இன்னும் அதனானே கொள்ளெனக் கொண்டான் என்புழிக் கொள்ளென்பதனை என என்பதனோடு புணர்க்கப்படாமையும் ஊரன் வெற்பன் முதலிய வினைப்பெயர்களும்* பிறவும் புணர்க்கப்படாமையுங் கொள்க இவ்வாசிரியரால் புணர்க்கப் படாத இச்சொற்களையும் வடநூற்கண் முடித்த அனகன் அனபாயன் அகளங்கன் முதலிய வடசொற்களையும் பின்னுள்ளோர்† முடித்தல் முதனூலோடு மாறுகொளக் கூறலாமென்று உணர்க. (௪௯)

## எழுத்ததிகாரத்திற்குப் புறனடை

௪௮௩. கிளந்த அல்ல செய்யுளுள் திரிநவும்
வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும்
விளம்பிய இயற்கையின் வேறுபடத் தோன்றின்
வழங்கியல் மருங்கி னுணர்ந்தனர் ஒழுக்கல்
நன்மதி நாட்டத் தென்மனார் புலவர்.

இஃது இவ் வதிகாரத்து எடுத்தோத்தானும் இலேசானும் முடியாது நின்றவற்றை யெல்லாம் இதனானே முடிக்க என அதிகாரப் புறனடை கூறுகின்றது.

(இ - ள்.) கிளந்த அல்ல செய்யுளுள் திரிநவும்—முன்னர் எடுத்தோதப்பட்டன அல்லாத சொற்கள் செய்யுளிடத்துத்

* ஊரன் வெற்பன் என்னும் திணைத்தலைவர் பெயர்களை வினைப் பெயர்களென்று இங்குக் கூறியிருப்பது பொருந்தாது.

† பின்னுள்ளோர் - நன்னூலார் சின்னூலார் வீரசோழியகாரர் முதலியோர்.

திரிந்து முடிவனவும், வழங்கியல் மருங்கின் மருவொடு திரிகவும்— நால்வகை* வழக்கும் நடக்குமிடத்து மருவுதலோடு திரிந்து முடிவனவும், விளம்பிய இயற்கையின் வேறுபடத் தோன்றின்— முன்னர்க் கூறிய இலக்கண முறைமையினின்றும் வேறுபடத் தோனறுமாயின அவற்றை, நன்மதி நாட்டத்து—நல்ல அறிவினது ஆராய்ச்சியாலே, வழங்கியன் மருங்கின்—வழக்கு முடிந்து நடக்குமிடத்தே, உணர்ந்தனர், ஒழுக்கல் என்மனார் புலவர்— முடிபுவேறுபாடுகளை அறிந்து நடாத்துக என்று கூறுவர் புலவர்; எ - று.

(எ டு.) 'தடவுத்திரை' என உகரமும் வல்லெழுத்தும் பெற்றுந் 'தடவுநிலை' (புறம்-கசO) என உகரம் பெற்றும் அகர ஈற்று உரிச்சொல் வந்தது. அதவத்தங் கனி என வேற்றுமைக்கண் அகர ஈறு அத்துப் பெற்றது. கசதபத் தோன்றின் என அகர ஈற்றின் முன்னர்த் தகரங் கொடுக்க.

'நறவங் கண்ணி நற்போர்ச் செம்பியன்
குரவ நீடிய கொன்றையங் கானல்'

என ஆகார இறுதி குறியதனிறுதிச் சினைகெட்டு இருவழியும் அம்மூப் பெற்றன.

'முளவுமா தொலைச்சிய பைந்நிணப் பிளவைப்
பிணவுநாய் முடுக்கிய தடியொடு விரைஇ' (மலைபடு-கஎஎ)

என அவ்வீறு அவ்வழிக்கண் அம்முப் பெறாத முடிபுபெற்றன. 'திண்வளி விசித்த முழவொ டாகுளி' (மலைபடு-௩) 'சுறவெறிமீன்' 'இரவழங்கு சிறு நெறி' (அகம்-௩கஅ) இவை உகரம் பெறாமல் வந்தன. 'கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை (அகம் ௬எ) என இகர ஈறு வேற்றுமைக்கண் அம்முப் பெற்றன. 'தீயினன்ன வொண்செங்காந்தள்' (மலைபடு-கசஙூ) என ஈகார ஈறு வேற்றுமைக்கண் இன் பெற்றது. 'நல்லொழுக்கங் காக்குந் திருவத்தவர்' (நாலடி-ஙஎ) என உகர ஈறு வேற்றுமைக்கண் அத்துப்பெற்றது. 'எப்பெற்ற மான்பிணை போல' (சிந்தா-உகசுஙூ) என ஏகார ஈறு வேற்றுமைக்கண் எகரம் பெறாது வந்தது. 'கைத்துண்டாம் போழ்தே' (நாலடி-கக) 'கைத்தில்லர் நல்லர்' (நான்மணிக்கடிகை-சக) எனவும், 'புன்னையங்கானல்' (அகம் - அ0) 'முல்லையந்தொடையல்' எனவும ஐகார ஈறு வேற்றுமைக்கண் அத்தும் அம்மும் பெற்றன. 'அண்ணல்கோயில் வண்ணமே' (சிந்தா. நாமகள். கஉகூ என ஓகார ஈறு யகர உடம்படுமெய் பெற்றது.

இனி 'அஞ்செவி* நிறைய வாலின' (முல்லைப்-அக) என அல்வழிக்கட் ககரமும் அகரமுங் கெட்டன. 'மரவம் பாவை வயிருரப் பருகி' 'மரவ காகம் வணங்கி மாந்கணம்' என இருவழியும் மகரம் விகாரப்பட்டு அம்முப் பெற்றன. 'காரெதிர் கானம் பாடினே மாக' (புறம்-கசச) 'பொன்னந் திகிரி முன் சமத் துருட்டி' 'பொன்னங் குவட்டித் பொலிவெய்தி' என னகர ஈறு இருவழியும் அம்முப் பெற்றன 'வேர்பிணி வெதிரத்துக் கால் பொரு நாலிசை' (நற்றி-கஉ) என ரகர ஈறுவேற்றுமைக்கண் அத்துப்பெற்றது. 'காவலந் தண்

* அகம்+செவி=அஞ்செவி.

பொழில்' (பெரும்பாண்-சகூ) 'கானலம் பெருந்துறை' (ஐங்குறு கூஅ) என லகர ஈறு வேற்றுமைக்கண் அம்முப் பெற்றன. 'நெய்தலஞ் சிறுபறை' இஃது அல்வழிக்கண் அம்முப் பெற்றது. 'ஆயிடையிருபே ராண்மை செய்த பூசல்' (குறுந்-சகூ) என்புழி ஆயிடை என்பது உருபாதலின் 'நீட வருதல்' (எழு-எ0அ) என்பதனன் முடியாது நீண்டு வகர ஒற்று வேறுபட முடிந்தது. தெம்முனை எனத் தெவ்வென்புழி வகரங்கெட்டு மகர ஒற்றுப்பெற்று முடிந்தது. அ என்னுஞ் சுட்டு 'அன்றியனைத்தும்' எனத் திரிந்தது. 'முதிர் கோங்கின் முகை' (குறிஞ்சிக்கலி-உ0) எனவும் 'காய்மாண்ட தெங்கின் பழம்' (சிந்தா-கூக) எனவுங் குற்றுகர ஈறு இன்பெறுதலுங் கொள்க. 'தொண்டு தலையிட்ட பத்துக்குறை' என ணகரம் இரட்டாது தகர ஒற்று டகர ஒற்றாய்க் குற்றியலுகரம் ஏறி முடிந்தது.

இங்ஙனஞ் செய்யுளுட் பிறவுந் திரிவன உளவேனும் இப்புறனடையான் முடிக்க. அருமருந்தானென்பது ரகரவுகரங் கெட்டு அருமந்தானென முடிந்தது. சோழனுடு சோணுடு என அன் கெட்டு முடிந்தது. பாண்டி நாடும் அது. தொண்டைமானுடு தொண்டை நாடென ஈற்றெழுத்துச் சில கெட்டு முடிந்தது. மலையமானுடு மலாடு என முதலெழுத்தொழிந்தன பலவுங் கெட்டு முடிந்தது. பொதுவிலென்பது பொதியிலென உகரந் திரிந்து இகரமாய் யகர உடம்படுமெய் பெற்று முடிந்தது. பிறவும் இவ்வாறு திரிந்து மருவி வழங்குவன எல்லாம் இப்புறனடையான் அமைத்துக் கொள்க. (எஅ)

### குற்றியலுகரப் புணரியல் முற்றிற்று.

### எழுத்ததிகாரம் முற்றிற்று.

நூலின் மரபு மொழிமரபு நுண்பிறப்பு
மேலைப்புணர்ச்சி தொகைமரபு—பாலாம்
உருபியலின் பின்னுயிர் புள்ளி மயக்கந்
தெரிவரிய குற்றுகரஞ் செப்பு.

எழுத்ததி காரத்துச் சூத்திரங்க ளெல்லாம்
ஒழுக்கிய ஒன்பதோத் துள்ளும்—வழுக்கின்றி
நானூற் றிருநாற்பான் மூன்றென்று நாவலர்கள்
மேனூற்று வைத்தார் விரித்து.

---

* ஒன்பது என்னுஞ் சொல் தொண்டு எனத் திரிந்தது என்பது நச்சினர்க்கினியர் கருத்து. இதன் தவறு முன்னர்க் காட்டப்பட்டது.

# தொல்காப்பியம்

## எழுத்ததிகாரம்

---

### நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : பக்க எண்]

# மேற்கோள் செய்யுள் அகரவரிசை

[எண் : பக்க எண்]

# அருஞ்சொற்பொருள் விளக்கம்

[எண் - பக்க எண்]

யாயும் (விகாரமாயும்) வருதல் கஅ
உறழ்வு - உறழ்ச்சி க0௧
ஊ - ஊன் ககக
ஏஃகிய - எஃகு கருவியால் எற்றி நொய்தாக்கப்பட்ட கக
எடுத்தல்-உயர்த்தியொலித்தல் க௯
எதோளி - எங்கு க0௬
எயின் - எயினர், வேடர் உ00
எரு - காய்ந்த சாணம் ககக
எழு - கோட்டை வாயிலிற் குறுக்காய்ப் போடப்படும் மரம் க௯உ
ஏ - அம்பு ககஅ
ஏது - காரணம் ௬க
ஏறு - காளை உ௬௪
ஒட்டுப் பெயர் - தொடர்ச்சொற் பெயர் எ௯
ஒருஞார் - ஓர் அளவு கக௬
ஒரு துவலி - ஓர் அளவு கக௬
ஒருபுடைச் சேறல் - ஒரு பகுங்கு தழுவுதல் எ௬
ஒழிபு - நூலில் அல்லது நூற் பகுதியிற் சொல்லப்படாத ஒழிந்த செய்திகள் ௪௬
ஒற்ற - பொருந்த ௬எ
ஒற்றளபெடை - மெய்யெழுத்து நீண்டொலித்தல் உ௬
ஒற்று - மெய் க0௧
ஒன்றியற் கிழமைப்பட்டு நிற்றல் - உடையவனிடத்தினின்று பிரிக்கப்படாத உடைமையாயிருத்தல் ௬க
ஓ-மதகு நீர் தாங்கும் பலகை களச
ஓணம் - ஒருநாள் ககஎ
ஓத்து - இலக்கண நூலின் சிறு பிரிவு கஉ
ஓத்து - விதி எஅ
ஓரடை - ஓரளவு ககக
ஓரா-ஒருவகை மீன் கஎஉ
ஓலம் போழ-வார்ந்த அல்லது கிழிந்த ஓலை களக
கஃசு ¼ பலம் கக௬
கடாவிடை விறை க0
கடி சூத்திரம் - தாலி க0
கடிசொல்-விலக்கப்படுஞ்சொல் ௯௪
கணவிரி - ஒரு மரம் க௯௬
கப்பி-ஒருவனது இயற்பெயர் க௯௬
கருவி - புணர்ச்சி ஏதுவான இலக்கணம் க௯
கலம் - 12 மரக்கால் ககக
கலாம்-சண்டை உ0௬
கலை - ஆண்மான் கஎ௬
கழஞ்சு-20 மஞ்சாடி (⅙அவுன்சு) கக௬ ககக
கழல் - கழற்சிக்காய் ௬
கன் - கன்னார் தொழில் உ0உ
கன்னல்-தோண்டல், நாழிகை வட்டில் உக௬
கா - 100 பலம் கக௯
காணி-ஓர் எண் $\frac{1}{80}$, 100 குழி நிலம் ஒரு மஞ்சாடி க௯௬
காண்டிகை - சுருக்கவுரை கஉ
காந்தருவம் - இன்னிசை க0
காழ் - விதை, வயிரம் உகக
கிளவி - சொல் எ௪
குண்டிகை - குடுக்கை ௬
குமரி - கன்னி, இளமை உ00
குமிழ் - ஒரு மரம் உக௬
குரீஇ - குருவி உ
குறிச்சி - மலைநாட்டூர் உ
குறியிட்டாளுதல் - பெயரிட்டு வழங்குதல் உ0
கூதாளி - ஒரு மரம் க௯௬
கூறை - ஆடை, சேலை கக
கேட்டாமூலம்-கேட்டையும் மூலமும் கஎஉ
கொண்மூ - மேகம் கக௬, கக௪
கொழு - கலப்பைக்காறு, கொழுப்பு உ
கொள் - காணம், ஒரு நிறை கக௬
கோடு - தனித்தெழுதப்படும் கொம்பு உ௬
கோட்டுநூறு - சங்குச் சுண்ணாம்பு உ௬
கோட்பட்டான்-பிடிக்கப்பட்டான், கொலைப்பட்டான் க0௯
கோலிகக்கருவி-கோலிகர் என்னும் நெசவாளரின் கருவி க0௬
சந்தம் - வண்ணம் ௬
சாடி - ஒரு முகத்தலளவு கக௬
சார் - ஒரு மரம் உகக
சிங்கநோக்கு-சிங்கம் முன்னும் பின்னும் நோக்கிச் செல்லு

தல்போல, ஒரு நூற்பா முன்னும் பின்னும் உள்ள நூற்பாக்களைத் தழுவுதல் உகஉ
சினை - சொல்லுக்குறுப்பாகிய எழுத்து கூஅ
சீரகம் - ஒரு நிறை கககூ
சூத்திரம் - நூற்பா கூஅ
சூர் - அச்சம் க0௩
செதிள் - மரப்பட்டை க௩க
செப்பலோசை-வெண்பாவிற்குரிய ஓசை உகூ
செம்மு - தூர்த்தல், புடமிடும் மருந்தைப் பொதிதல், வயிற்றுப் பொருமல், பை நிறைத்து மூட்டுதல் கக௩
செய்கை - புணர்ச்சி கூ
செரு - போர் ககச
செவிடு -⅛ ஆழாக்கு கககூ
செற்று - சினந்து தடுத்து, அழித்து உகூஅ
சென்னி - சோழன், ஒருவனது இயற்பெயருமாம் கூ௩க
சே - மரம், காளை கசுஅ
சோ - ஒருவகை அரண் கஎச
சோதி - ஓர் நாள் க௩க
ஞாயிறு - கதிரவன் எ
ஞெகிழி - கொள்ளிக்கட்டை கூச
ஞெமை - ஒரு மரம் கஎஉ
தகர் - ஆட்டுக்கடா உஉஎ
தசை - சதை கசு௩
தரங்கம் - அலை கக
தளா - ஒரு மரம் கசஎ
தாது - நீறு, பூந்தாது ககச
தாமம் - மாலை கக௩
தாமரை - ஒரு பேரெண் உஉஉ
தாய் - தாவி உ0க
திங்கள் - நிலா உ
திங்கள் - மாதம் கூஅ, க௧0
திட்டாத்துக்குளம்-ஓர் ஊர் கசக
திரும் - திரும்புதல் கூகூ
தில்லை - ஒரு செடி கமஎ
தீர்த்தம் - திருநீர் நிலை அ
துலாம் - ஒரு நிறை (100 அல்லது 200 பலம்) கஅக
துவராபதி - துவாரகை க0
துன்னூசி - கலப்பைக்குத்தி, தையலூசி உ
தூக்கு - பாக்களைத் துணித்து நிறுக்குஞ் செய்யுளுறுப்பு கஎ
தூணி - 4 மரக்கால் க௩கூ
தூதுணை - ஒரு செடி கஎக
தூதை - ஒரு முகத்தலளவு ககக
தூதை ஒருவகைக் கலம் கஅக
தூய் - தூவி உ0க
தெவ் - பகை கூகூ
தெள்கு - தெள்ளுப் பூச்சி உகூ௩
தென்புலத்தார் - இறந்த முன்னோர் அ
தேற்றம் - உறுதி, நிச்சயம் ககஎ
தொடி - ஒரு பலம் கககூ, ககூ
தோரை - ஒருவகை மலைநெல், மூங்கிலரிசி கஅக
நமை - ஒரு மரம் கஎஉ
நலிதல் - இடைத்தரமாயொலித்தல் க௩
நாழி - படி ககக
நாள் - உடு, விண்மீன் அஎ
நாணம் - வாசனைப் பண்டம், கத்தூரி, புனுகு கசக
நிக்கந்தக் கோட்டம் - அருகன் கோயில் க0கூ
நிரைபசை - நிரையசையும் உகர வீறுங்கொண்ட ஈரசைச்சீர் உ0
நிலங்கடந்த நெடுமுடியண்ணல்-கண்ணபிரான் க0
நிறை - 100 பலம் கச௩
நீட்டுவழி நீட்டல் - நீட்டல் விகாரம் ககூக
நேர்பசை - நேரசையும் உகர வீறுங்கொண்ட ஈரசைச்சீர் உ0
படுத்தல் - தாழ்த்தி யொலித்தல் க௩
பணி - கட்டளையிடு கசஎ
பணை முள்ளில்லா மூங்கில், பருமை க0க
பதக்கு - பத்துப்படி க௩உ
பரசு - கோடாரி கூக
பரணி - ஒரு நாள் க௩க
பலம் - நிறை ககக
பறைவு - தேய்வு, அழிவு, ஒலிப்பு கககூ
பற்றுக்கோடு - சார்பு கூஅ
பனை - ஒரு பேரளவு கச௩
பன் - பன்னுதல் (கொய்தல் பஞ்செஃகுதல்) உ0உ

பாடு - ஓசை ௧௧௮
பானை - ஒரு முகத்தலளவை, 4செம்பு (எண்ணெயளவு) ௧௧௩
பிடா - ஒரு மரம் ௧௪௭
பின் - பின்னுதல் ௨௦௨
பிர் - பிர்க்கு ௨௧௦
புகர்-கபிலமாடு, புள்ளிமான் ௨௨௭
புமான் - ஓர் இயற்பெயர் ௨௦௪
புழுக்கல் - புழுங்கலரிசி ௨௨௭
புள்ளு - பறவையால் அறியும் நிமித்தம் ௨௨௫
புறனடை - நூலில் அல்லது நூற்பகுதியில் கூறப்படாதவற்றிற்குக் கூறும் முடிபு ௨௧௦
புற்கை-கஞ்சி, கரைத்தகூழ் ௧௫௧
புன்கு - புனமுருங்கை ௨௯௪
பூணி - ஓர் அளவு ௧௫௯
பூல் - ஒரு மரம் ௨௧௫
பூழி - புழுதி ௧௧௧
பெற்றம்-மாடு, காளை, எருமை ௧௩௯
பெற்றி-தன்மை ௨௩
பெயர்ப் பெயர் - தனிச்சொற் பெயர் ௭௫
பொருட் புணர்ச்சி - தனித்து வரும் சொற்கள் ஒன்றோடொன்று பொருட் பொருத்தமுறப் புணரும் புணர்ச்சி ௮௯
பொருந் - பொருந்துதல் ௯௯
பொருந் - பொருந்துதல், பொருநர் குலம் ௧௭௩
போத்து-மாடு, மரை, புலி, புல்வாய் இவற்றின் ஆண் ௨௨௭
போழ்-நறுக்கு, துண்டு, கிழிப்பு ௧௭௩

மகம் - ஒரு நாள் ௧௧௭
மண்டை-ஒருமுகத்தலளவை ௧௧௩
மா-ஒருநிறை, 100 குழிநிலம் ௧௧௩
மாட்டெறிதல் - ஒன்றன் இலக்கணத்தை இன்னொன்று தழுவுமாறு மாட்டிக் கூறுதல் ௧௭
மாட்டேற்றல் - ஒன்றன் இலக்கணத்தை இன்னொன்றும் தழுவுமாறு மாட்டிக் கூறுதல் ௨௭
மிகை - மிகைபடக் கூறிய பகுதி ௧௦௯
மிசை - முன்னெழுத்து ௧௧௭
மிடறு - தொண்டை ௯௦
முந்திரிகை - 1/320 ௨௪௭
முற்கு - குமுறல் (கர்ச்சனை), பல்லிசெய்வதுபோல் நாவாற் கொட்டும் ஒலியுமாம் ௮
முங்கா - கீரி ௧௪௫
மூலம் - ஒரு நாள் ௧௭௨
மூலாதாரம் - ஆறாதாரங்களுள் குய்யத்துக்கும் குதத்துக்கும் இடையில் நாலிதழ்த்தாமரை போலுள்ள நரம்புப் பின்னல் ௭௦
மெய்ம்மயக்கம் - மெய் தன் மெய்யோடும் பிற மெய்யோடும் கூடி நிற்றல் ௯௧
மென்கணம் - மெல்லினம் ௧௦௨
மொழிமாற்று - செய்யுளின் ஓரடியிலுள்ள சொற்கள் முறைமாறி நிற்றல் ௭௮
யா - ஒரு மரம் ௧௪௭
வங்கா - வளைந்த தாரை அல்லது ஊது கொம்பு ௧௪௫
வட்டி - 1 படி ௧௧௬
வரட்டாடு-வறட்டாடு (பால் கறவாத ஆடு) ௨௯௭
வருட - தடவ ௩௭
வரை - ஆட் காட்டி விரற் கணு விடை ௧௧௩
வரைநிலை - விலக்கும் நிலை ௮௩
வல் - ஒருவகைத் தாய விளையாட்டு, சூதாடு கருவி ௨௧௫
வழை - சுரபுன்னை ௧௭௨
வளி - காற்று, மூச்சு ௯௦, ௧௫௪
வள் - வார், கூர்மை ௨௨௫
வன்கணம் - வல்லினம் ௧௦௨
விகற்பித்தல் - உறழ்தல், பெருக்கல் ௭௩
விசும்பு - வெளி ௩
விச்சாவாதி - வித்தையால் திறமையாக வாதிப்பவன் ௧௭௨
விரவுப் பெயர் - இரு திணைப் பொதுப் பெயர் ௧௦௯
விலங்கு-எழுத்தோடு சேர்த்தெழுதப்படும் வளைவு ௨௩
விளை - சிழ்க்கை
வெதிர் - மூங்கில் ௧௦
வெரிந் - முதுகு ௧௭௩, ௧௮௦
வெள்ளம் - ஒரு பேரெண் ௨௨௨
வேட்கை - விருப்பம் ௧௭௪

# பின்னிணைப்பு

## க. குற்றியலுகரம் உயிரீறே

[புலவர் ஞா. தேவநேயனர், எம். ஏ.]

"எழுத்தெனப்படுப,

அகர முதல் னகர இறுவாய்

முப்பஃதென்ப;

சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே" (தொல். 1)

"அவைதாம்

குற்றியலிகரம் குற்றிய லுகரம்

ஆய்தம் என்ற

முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன" (தொல். 2)

என்றார் தொல்காப்பியர்.

இரண்டாம் நூற்பாவில், குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும் எனப் பிரித்துக் கூறாது "குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற முப்பாற்புள்ளியும்" என்று 'முப்பாற் புள்ளி' என்பது மூவெழுத்தையும் பொதுப்படத் தழுவுமாறு உம்மைத் தொகையாய்ச் சேர்த்துக் கூறியிருத்தலின், குற்றியலிகர குற்றியலுகரங்களும் ஆய்தம் போலப் பண்டைக்காலத்திற் புள்ளி பெற்றன என்பதுணரப்படும்.

நூற்பாவில் 'முப்பாற்புள்ளி' என்பது, புள்ளிபெற்ற மூவெழுத்துக்களையும் முப்புள்ளி வடிவான ஆய்தத்தையும் ஒருங்கே குறிப்பது "ஆமா கோனவ் வணையவும் பெறுமே" என்னும் நன்னூல் நூற்பாவின் 'ஆமா' என்பது போன்ற இரட்டுறலாகும்.

தொல்காப்பிய மரபியல் நூற்பா ககo இல், 'வாராததனான் வந்தது முடித்தல்' எனனும் உத்தியுரையில்,

"குற்றியலிகரத்தைப் புள்ளி யென்றலும் ஆட்சியுங் குறியீடும் ஒருங்கு நிகழ்ந்தனவாகலின் அவையும் இனி வாராமையான் வந்துழி வந்துழி அவ்வாறு ஆண்டானென்பது. இனிப் புள்ளியென மேல் ஆள வாராததனைப் புள்ளியென்று ஆள்வனவற்றோடு மடக்கங் கூறுதலென்பது 'அவைதாங் குற்றியலிகரங் குற்றியலுகர·மாய்தமென்ற·முப்பாற் புள்ளியுமெழுத்தோ ரன்ன' (தொல்-எழுத்-நூன் 2) என்புழிக் குற்றியலிகரம் புள்ளியென்று யாண்டும் ஆள வாராமையானும் அதனான் அவ்வழி வரவேண்டுசலானும் அங்ஙனம் புள்ளியென்று ஆளவருங் குற்றுகரத்தோடும் ஆய்தத்தோடும் உடன் கூறுதலாயிற்று; இங்ஙனம் உடன் கூறுக்காற் டள்ளியுங் குற்றிகரமுமெனச் சூத்திரம் பெறுதல் வேண்டுவதாவான் செல்லுமென்பது" என்றுரைத்தார் பேராசிரியர்.

சிவஞான முனிவர் தம் தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தியில்,

"ஒரு மொழியைச் சார்ந்துவரு மியல்பின்றித் தனித்தியங்கு மியல்பு தமக்கிலவென்றலின், அவை தம்மையே யெடுத்தோதிக் காட்டலாகாமையின், வருஞ் சூத்திரத்தான் அவற்றிற்கு வேறுவேறு பெயரிட்டு 'அவைதாங் குற்றியலிகரங் குற்றியலுகர மாய்தம் என்றும் அம் மூன்றும் • புள்ளி பெறுதல் பற்றிப் பொதுப்பெயராக முப்பாற் புள்ளியும்' என்றும், அவை தனித்தெழுதப்படாவாயினும் மொழியொடு சார்த்தி யெழுதப்படுதலின் எழுத்தென்னுங் குறியீட்டிற்குரியவென்பார், 'எழுத்தோ ரன்ன' என்றும் ஓதினர்" என்றார்.

நச்சினார்க்கினியரும், "அவைதாம்......எழுத்தோ ரன்ன" என்னும் சார்பெழுத்து நூற்பாவுரையின் இடையில்,

"ஆய்தமென்ற ஓசைதான் அடுப்புக்கூட்டுப்போல மூன்று புள்ளி வடிவிற்றென்பது உணர்த்தற்கு ஆய்தமென்ற முப்பாற் புள்ளியுமென்றார். அதனை இக்காலத்தார் நடுவு வாங்கியிட்டெழுதுப இதற்கு வடிவு கூறினார், ஏனை யொற்றுக்கள்போல உயிரேறாது ஓசை விகாரமாய் நிற்பதொன்றாகலின். எழுத்தியல் தழா ஓசைகள் போலக் கொள்ளினுங் கொள்ளற்க என்றற்கு எழுத்தேயா மென்றார். இதனைப் புள்ளி வடிவிற்றெனவே ஏனையெழுத்துக்களெல்லாம் வரிவடிவின வாதல் பெற்றாம்" என்று கூறினாரேனும், தொடக்கத்தில்,

"அவைதாம் – மேற்சார்ந்து வருமெனப்பட்டவைதாம், குற்றிய லிகரங் குற்றியலுகரம் ஆய்தமென்று சொல்லப்பட்ட மூன்று கூற்ற தாகிய புள்ளி வடிவுமாய்; எழுத்தோரன்ன - அவையும் முற்கூறிய முப் பதெழுத்தோடு ஒரு தன்மையவாய் வழங்கும் என்றவாறு" என்று மூவெழுத்தும் புள்ளிபெறுமென ஒரு தன்மைப்படவே உரைத்தார்.

மயிலைநாதர், "தொல்லை வடிவின" என்னும் நன்னூல் நூற் பாவுரையில்,

"ஆண்டு என்ற மிகையானே, தாது, ஏது என்றற்றொடக்கத்து ஆரிய மொழிகளும், எட்டு கொட்டு என்றற்றொடக்கத்துப் பொது மொழிகளும், குன்றியாது, நாடியாது எட்டியாண்டுளது என்றற் றொடக்கத்துப் புணர்மொழிப் பொருள்வேறுபாடுகளும், அறிதற் பொருட்டுக் குற்றுகரக், குற்றிகரங்களுக்கு மேற்புள்ளி கொடுப்பாரும் உளரெனக் கொள்க" என்று உரைத்தனர்.

"குற்றியலிகரமுங் குற்றியலுகரமும் புள்ளி பெற்று நிற்கும்; என்னை ?

'குற்றிய லிகரமுங் குற்றிய லுகரமு
மற்றவை தாமே புள்ளி பெறுமே'

என்பது சங்கயாப்பாகலின்" என்பது யாப்பருங்கல விருத்தி.
(பக்கம். 27).

மேற்கூறியவற்றால், குற்றியலிகர குற்றியலுகரங்கள் பண்டைக் காலத்தில் புள்ளியிட்டெழுதப்பட்டனவென்றும் அங்ஙனம் எழுதினது

அவற்றின் ஒலிக்குறுக்கத்தையும் 'நாடியாது' 'எட்டியாண்டு' முதலிய புணர்மொழிப் பொருள் வேறுபாட்டையும் காட்டற்கு என்றும் அறியப்படும்.

'நாடியாது' 'எட்டியாண்டு' என்பன, நாடி யாது, எட்டி யாண்டு என்றும் பொருள்படுமாதலின், அவை நாடு+யாது, எட்டு+யாண்டு என்னும் புணர்மொழிகள் என்று காட்டற்குக் குற்றியலிகரத்தின் மேற்புள்ளியிடப்பட்டதென்க

குற்றுகரத்தை மேற்சுன்னமிட்டுக் காட்டுவது இன்றும் மலையாள (சேர) நாட்டு வழக்கம். குற்றிகர குற்றுகரங்கள் புள்ளி பெறுமென்று நன்னூலிற் கூறப்படாமையால், 12 ஆம் நூற்றாண்டிற்கு முன்பே இவ் வழக்கு, சோழபாண்டிய நாடுகளில் ஒழிந்தது என்பதை அறியலாம். எகர ஏகாரங்கட்கும் ஒகர ஓகாரங்கட்கும் அவை சேர்ந்துள்ள உயிர் மெய்கட்கும் வரி வேறுபாடு தொல்காப்பியத்திலே கூறப்பட்டிருப்பி னும் 17 ஆம் நூற்றாண்டில் அவ்வெழுத்துக்கள் குறில் நெடில் வேறு பாடின்றி எழுதப்பட்டாற்போல, குற்றியலுகரமும் வேறுபாடின்றி யெழுதப்பட்டதென்க.

ஒரு பொருள் குறுகின் அப்பொருளேயன்றி வேறு பொருளாகாது; அதன் குறுக்கம் அளவு வேறுபாடேயன்றிப் பொருள் வேறு பாடன்று. அதுபோல், குற்றியலுகரமும் முற்றியலுகரம் போல உயிரேயன்றி மெய்யாகாது. இதனாலேயே,

'இகர உகரங் குறுகிநின்றன, விகாரவகையாற் புணர்ச்சி வேறு படுதலின், இவற்றை இங்ஙனங் குறியிட்டாளுதல் எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது. **சந்தனக்கோல் குறுகினும் பிரப்பங்கோ லாகாது அது போல உயிரது குறுக்கமும் உயிரேயாம்.** இவற்றைப் புணர்ச்சி வேற்றுமையும் பொருள் வேற்றுமையும் பற்றி வேறோர் எழுத்தாக வேண்டினார்' என்றார் **நச்சினார்க்கினியரும்**. பொருள் வேற்றுமை யென்றது பண்டைக் காலத்தில் கட்டு கொட்டு முதலிய சொற்கள் ஏவல் வினையாம் போது முற்றுகரவீறும் முதனிலைத் தொழிற்பெயராம்போது குற்றுகர வீறும் ஒலிக்கப்பட்டவை நோக்கி, "தருக்கு அணுக்கு என்பன வினைக்கண் வந்த முற்றுகரம்." (தொல். 36, உரை) 'காது கட்டு கத்து முறுக்கு தெருட்டு என்பன முற்றுகரமும் குற்றுகரமுமாய்ப் பொருள் வேறுபட்டு நின்றாற் போல" (தொல். 68, உரை.) என்று நச்சினார்க்கினியர் கூறுதல் காண்க. தொல்காப்பியர் தம் காலத்தில் குற்றுகரமும மெய்போலப் புள்ளி பெற்றதனாலேயே, புணரியலில்,

"மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்" (தொல். 104)

"குற்றிய லுகரமும் அற்றென மொழிப" (தொல். 105)

என்று மாட்டேற்றிக் கூறினர்.

இம்மாட்டேற்றைக் கவனியாது, "குற்றிய.....மொழிப," என் னும் நூற்பாவிற்கு "ஈற்றிற் குற்றிய லுகரமும் (புள்ளியீறு போல உயி ரேற இடம் கொடுக்கும்) அத்தன்மைத்து என்று சொல்லுவர்" என்று இளம்பூரணரும்,"ஈற்றுக்குற்றியலுகரமும்:புள்ளியீறுபோல உயிரேற இடம் கொடுக்குமென்று கூறுவர் புலவர்" என்று நச்சினார்க்கினியரும் உரை கூறுவது பொருந்தாது.'அற்றென மொழிப'என்னும் மாட்டேறு

"புள்ளியோடு நிலையல்" என்பதையே தழுவுமாயின் இவ்விருவரும் இங்ஙனம் உரைத்தற்கு இவர் காலத்திற்கு முன்பே குற்றியலுகரம் புள்ளி பெறும் வழக்கம வீழ்ந்தமையே காரணமாகும். இவர் கூறிய உரை இங்குப் பொருந்துமாயின் தொல்காப்பியர் நூன்மரபில்,

"மெய்யி னியற்கை புள்ளியோடு நிலையல்" (தோல். 15)

"எகர ஒகரத் தியற்கையும் அற்றே" (தோல். 16)

என்று கூறியவிடத்தும் பொருந்தவேண்டும்.

எகர ஒகரம் புள்ளியீறு போல உயிரேற இடங்கொடுத்தலின்மையானும், "எகர...அற்றே" என்னும் நூற்பாவிற்கு, "எகர ஒகரங்களது இயல்பும் அவ்வாறு புள்ளி பெறும் இயல்பிற்று" என்று இளம்பூரணரும் "எகர ஒகரங்களினது நிலையும் மெய்போலப் புள்ளி பெறும் இயல்பிற்று" என்று நச்சினார்க்கினியரும் உரை கூறுவதானும், "குற்றிய......மொழிப" என்னும் நூற்பாவிற்கும் குற்றுகரமும் மெய்போலப் புள்ளிபெறும் என்பதே உரையாகக் கோடல் பொருத்தமாம்.

இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும், ஈற்றுக் குற்றியலுகரமும் புள்ளியீறுபோல உயிரேற இடங்கொடுக்கு மென்று உரைத்தவிடத்தும், மாத்திரைக்குறுக்கத்தால் அங்ஙனம் இடங்கொடுக்குமென்னும் கருத்தினரேயன்றி மெய்யீறா யிருத்தலால் இடங்கொடுக்கும் என்னுங் கருத்தினரல்லர். "குற்றுகரத்திற்கு முன்னர் வந்த உயிரேறி முடிய அரை மாத்திரையாய் நிற்றலும், முற்றுகரத்திற்கு முன்னர் வந்த உயிரேறி முடியாமையுந் தம்முள் வேற்றுமை" (தொல். 36. உரை) என்று நச்சினார்க்கினியர் கூறுதல் காண்க.

இனி, தொல்காப்பியர் கருத்தை நோக்கின், அவர் குற்றியலுகரத்தை மெய்யீறென்று கொண்டார் என்று கொள்ளுதற்கு எள்ளளவும் இடமில்லை. அவர்,

"குற்றிய லுகர முறைப்பெயர் மருங்கின்
ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும்" (தோல். 67)

எனக் குற்றியலுகரம் மொழிமுதல் வருமென்றும் கூறினார். நுந்தை என்னும் சொல்லின் முதலில் (தொல்காப்பியர் கருத்தின்படி) உள்ள குற்றியலுகரம் மெய்யீறாயின், அச்சொல் ந்நந்தை என்று எழுதப் படல்வேண்டும். அங்ஙன மெழுதப்படாமையும், குற்றியலுகரத்தைத் தொல்காப்பியர் மெய்யென்று கொண்டிருப்பாராயின், அது,

"பன்னீ ருயிரும் மொழிமுத லாகும்" (தோல். 59)

"உயிர்மெய் அல்லன மொழிமுத லாகா" (தோல். 60)

என்று அவர் கூறியவற்றோடு முரணுதலும் நோக்குக.

மேலும், ஒரே யுகரம் ஓரிடத்துக் குற்றுகரமாகவும் ஓரிடத்து முற்றுகரமாகவும் ஒலிக்கப்படும். அங்ஙனம் ஒலிக்கப்படுபவற்றுள் சிலவற்றிற்குக் குற்றுகர முற்றுகரப் பொருள்வேறுபாடுண்டு. சிலவற்றிற்கில்லை.

"முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅ
தப்பெயர் மருங்கின் நிலையிய லான" (தொல். 68)

என்னும் நூற்பாவையும், அதன் உரையில்,

"காது கட்டு கத்து முருக்கு தெருட்டு என்பன முற்றுகரமும் குற்றுகரமுமாய்ப் பொருள் வேறுபட்டு நின்றாற்போல, நுந்தை யென்று இதழ் குவித்து முற்றக் கூறியவிடத்தும் இதழ் குவியாமற் குறையக் கூறியவிடத்தும் ஒரு பொருளே தந்தவாறு காண்க. நுந்தா யென்பதோ வெனின், அஃது இதழ் குவித்தே கூறவேண்டுதலிற் குற்றுகரமன்று. இயலென்றதனன் இடமும் பற்றுக்கோடும் இரண் டிற்கும் வேறுபாடின்றென்று கொள்க" என்று நச்சினார்க்கினியர் உரைத்திருப்பதையும் நோக்குக. இதனால், குற்றியலுகரம் மெய்யீ றாயின் முற்றியலுகரமும் மெய்யீறாய் உகரம் என்னும் உயிரே தமிழுக் கில்லை யென்று பெறப்படுதலும் அங்ஙனமின்மையும் அறிக.

செய்யுளியலில், இருவகை யுகரமு மொன்றாகக் கொண்டே,

"இருவகை யுகரமோ டியைந்தவை வரினே
நேர்பு நிரைபு மாகு மென்ப" (தொல். செய். 4)

என்றார் தொல்காப்பியர்.

இதன் உரையில், "இருவகை யுகர மென்பன, குற்றுகர முற்றுகரங்கள், அவற்றோடு மேற்கூறிய நேரசையும் நிரையசையும் ஒருசொல் விழுக்காடுபட இயைந்துவரின் நிறுத்த முறையானே நேரசையோ டொன்றி வந்த குற்றுகரமும் அதனோடு ஒன்றிவந்த முற்றுகரமும் நேர்பசை யெனப்படும்; நிரைபசையோ டொன்றிவந்த குற்றுகரமும் அதனோடொன்றி வந்த முற்றுகரமும் நிரைபசை எனப்படும் என்றவாறு........."

"முன்னர் நேரசை நான்கும் நிரையசை நான்குமென எண்வகை யான் அசைகூறி அவற்றுப்பின் இருவகை யுகரமும் வருமெனவே, அவை குற்றுகரத்தோடு எட்டும் முற்றுகரத்தோடு எட்டுமாகப் பதினாறு உதாரணப் பகுதியவாய்ச் சென்றதேனும், அவற்றுட் குற்றெழுத்துப் பின் வரும் உகரம் நேர்பசை யாகா தென்பது 'குறிலிணை யுகர மல்வழி யான' (தொல். செய். 4)என்புழிச் சொல்லு தும்; ஒழிந்தன குற்றுகர நேர்பசை மூன்றும் நிரைபசை நான்கு மாயின. உதாரணம்: வண்டு, நாகு, காம்பு, வரகு, குரங்கு, மலாடு, மலாட்டு; இவை குற்றுகரம் அடுத்து நேர்பும் நிரைபும் வந்தவாறு" என்று உரைத்தனர் பேராசிரியர். இதனால், குற்றுகரமும் முற்றுகரம் போல அலகுபெறுமென்றும் அசைக் குறுப்பாமென்றும் அறியப்படும்.

சொற்கள் இலக்கண முறையிலும் இலக்கிய முறையிலும் பல வகையாகத் திரிந்து, முன்பு முற்றுகரவீறா யிருந்தவை அல்லது உகர மல்லாத ஈறாயிருந்தவை பின்பு குற்றுகர வீறாகின்றன. அவ் வகைக ளாவன:—

க. **தொழிற் பெயர்** :—முதனிலைதிரிந்த தொழிற் பெயர் :—எ - டு : படு - பாடு, சுடு - சூடு.

விகுதிபெற்ற தொழிற் பெயர் :—எ - டு :. படி + பு = படிப்பு, முடி + சு = முடிச்சு.

உ. **வேற்றுமைப் பெயர்** :—எ - டு : யான் + கு = எனக்கு, அவர் + கு = அவர்க்கு.

௩. **குறிப்பு வினைமுற்று** :—எ - டு : தாள் + து = தாட்டு, கண் + து = கட்டு, பால் + து = பாற்று, அன் + து = அற்று.

௪. **பிறவினை** :—எ - டு : படு + து = படுத்து, நட + து = நடத்து, வாழ் + து = வாழ்த்து, பாய் + சு = பாய்ச்சு.

௫. **போலி** :—எ - டு : அண்டவு - அடவு - அடகு.

௬. **சொல் நீட்சி** :—எ - டு: திரும் - திரும்பு, பொருந் - பொருந்து, உரிஞ் - உரிஞ்சு, உடன் (உடல்) - உடம் - உடம்பு, பண் - பாண். பாடு, குன் - கொன் - கோன் - கோண் - கோடு, ஒளி - ஒளிர் - ஒளிறு, போ - போது.

மேற்காட்டிய பாடு படிப்பு எனக்கு தாட்டு படுத்து முதலிய சொற்கள், குற்றுகர வீற்றை மெய்யீறாகக் கொள்ளின், பாட் படிப் எனக் தாட் படுத் என்ற முதல் வடிவங்களினின்று தோன்றின வாகவன்றோ கொள்ளல் வேண்டும்! இஃது எத்துணைப் பேதமைபாகும்! மேலும், ஆட்டு பாட்டு கலக்கு விலக்கு முதலிய பிறவினைகளும் தொழிற் பெயர்களும் முதனிலையீற்று வலியிரட்டியும் முதனிலை யிடைமெலி வலித்தும் முறையே ஆடு பாடு கலங்கு விளங்கு என்னுஞ் சொற்களினின்று திரிந்திருக்கவும், அவற்றை ஆட் பாட் கலக் விளக் என்னும் வடிவங்களினின்று பிறந்தனவாகக் கொள்ளல் இளஞ்சிறாரும் எள்ளிநகையாடத் தக்க தொன்றன்றோ? ஒரு சில ஒலியடிச்சொற்களொழிந்த எல்லாச் சொற்களும் ஓரசையான வேர்ச் சொற்களினின்றே பிறந்தவை யாதலின், குற்றியலுகரத்தை மெய்யீறாகக் கொள்வாரெல்லாம் சொற்பிறப்பியலை எட்டுணையும் தாமறியா திருத்தலை முற்றுறக் காட்டுபவரேயாவர்.

குற்றுகரவீறு மெய்யீறாயின், அறுவகைக் குற்றியலுகரத் தொடர்களும் வல்லின மெய்யீற்றினவாதல் வேண்டும்.

"ஞணநம னயரல வழள என்னும்
அப்பதி னொன்றே புள்ளி யிறுதி" (தொல். 78)

என்று தொல்காப்பியர் பிரிநிலையேகாரங் கொடுத்துக் கூறினமை யானும், குற்றுகரவீறு தமிழ்ச்சொல்லில் ஓரிடத்தும் மெய்யீற்றாக எழுதப்படாமையானும், அஃதுண்மையன்மை வெள்ளிடைமலை.

கண் + யாது = கண்ணியாது என்பது போன்றே சுக்கு + யாது = சுக்கியாது என்று குற்றுகரமும் புணர்வதால், குற்றியலுகரத்தை மெய்யீறாகக் கொள்ளலாமே யெனின், கதவு + யாது = கதவியாது என்று முற்றுகரமும் அங்ஙனம் புணர்வதால் அதுவும் மெய்யீற்றாகக் கொள்ளப்பட்டு உகரவுயிரீற தமிழுக்கில்லையென்றாகும் என்று கூறி விடுக்க. தொல்காப்பியர் மொழி மரபியலில்,

"உச்ச காரம் இருமொழிக் குரித்தே"
"உப்ப காரம் ஒன்றேன மொழிப" (தொல். 75, 76)

என்று வரையறுத்தது உசு முசு தபு என்னும் மூன்று முற்றுகர வீற்றுச் சொற்களையே யன்றிக் குற்றுகரவீறறுச் சொற்களையன்று. சு, பு என்னும் இரு முற்றுகர ஈறுகளைக் கொண்ட சொற்கள் எத்தனை என்று வரையறுப்பதே மேற்கூறிய நூற்பாக்களின் நோக்கம். கு, டு, து, று, என்னும் நான்கு முற்றுகரவீற்றுச் சொற்களும் அறுவகைக் குற்றுகர வீற்றுச் சொற்களும் அளவிறந்தன வாதலின், அவற்றை வரையறுத்திலர் தொல்காப்பியர். இகு உகு செகு தகு தொகு நகு நெகு பகு புகு மிகு வகு விகு எனக் குகரவீறும், அடு இடு உடு எடு ஒடு கடு கெடு கொடு சுடு தடு தொடு நடு நெடு நொடு படு பீடு மடு வடு விடு என டுகரவீறும் கொண்ட முற்றுகரவீற்றுச் சொற்கள் பெருந்தொகையினவாயும் எண் வரம்பு படாதனவாயு மிருத்தல் காண்க. பிற முற்றுகரவீற்றுச் சொற்களும் இங்ஙனமே. குற்றுகரவீற்றுச் சொற்களோ வெனின், அகராதிகளாலும் வரையறுக்கப்படாத பல்லாயிரக் கணக்கின.

மேற்கூறிய நூற்பாக்களின் உரையில்,

"உகாரத்தோடு கூடிய சகாரம் இரண்டுமொழிக்கே ஈறும் என்றவாறு"

"எ - டு: உசு, இஃது உளுவின் பெயர். முசு, இது குரங்கினுள் ஒரு சாதி. பசு என்பதோவெனின், அஃது ஆரியச் சிதைவு. கச்சு குச்சு என்றாற் போல்வன குற்றுகரம். உகரம் ஏறிய சகரம் இரு மொழிக்கு ஈறுமெனவே ஏனை உயிர்கள் ஏறிய சகரம் பன் மொழிக்கு ஈறுமாயிற்று." (தொல். 75. உரை) என்றும்,

"உகரத்தோடு கூடிய பகரம் ஒருமொழிக்கல்லது பன்மொழிக்கு ஈறுகாதென்று கூறுவர் புலவர்"

"எ - டு: தபு என வரும்............உப்பு கப்பு என்றாற்போல்வன குற்றுகரம், உகரத்தோடு கூடிய பகரம் ஒன்றெனவே ஏனையுயிர்களோடு கூடிய பகரம் பன்மொழிக்கு ஈறாய்ப் பல பொருள் தருமென்றூராயிற்று" (தொல். 76. உரை) என்றும் நச்சினார்க்கினியர் கூறியிருத்தலை நோக்குக.

இதுகாறுங் கூறியவற்றால், குற்றியலுகரம் உயிரீறே யென்றும், தொல்காப்பியர் ஓரிடத்தும் குற்றியலுகரத்தை மெய்யீற்றாகக் கொண்டிலரென்றும் இயற்கையும் எளிமையும் தனிமையும் தாய்மையும் சான்ற தமிழியல்பையறியாத ஆரியவழியியலாரே தம் மொழியைப் போன்றே தமிழும் ஆரிய வழித்தென்று மயங்கி, தமிழை வடமொழி வழித்தாகக் காட்டக்கருதி அதற்கு முதற்படியாகக் குற்றுகர வீற்றை மெய்யீறாகக் கூறி யிடர்ப்பட்டுப் பின்பு அவ்விடர்ப்பாட்டினின்று நீங்கப் பண்டைத் தமிழ்ச் சொற்கள் வல்லின மெய்யிலும் இற்றனவென்றும், வலியிரட்டல் என ஒருதிரிவு முறையும் அரவு என ஒரு தொழிற்பெயர் விகுதி இல்லையென்றும் சொல்லியல் நூலுக்கும் மொழி நூலுக்கும் முற்றும் மாறாகத் தத்தம் உளந் திரிந்தவாறே உரைப்பரென்றும் தெற்றெனத் தெரிந்துகொள்க.

## உ. நச்சினார்க்கினியர் இளம்பூரணரோடு மாறுபடும் இடங்கள்

1. **சிறப்புப்பாயிரம் :**

வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்.

**இளம்பூரணர் :**

(இ - ள்.) வட வேங்கடம் தென்குமரி அ இடைத் தமிழ் கூறும் நல் உலகத்து வழக்கும் செய்யுளும் அ இரு முதலின் - வடக்கின்கண்ணுளதாகிய வேங்கடமும் தெற்கின்கண்ணுளதாகிய குமரியுமாகிய அவற்றை எல்லையாக வுடைய நிலத்து வழங்கும் தமிழ்மொழியினைக் கூறும் நன்மக்களான் வழங்கும் வழக்கும் செய்யுளுமாகிய இரு காரணத்தானும்.

**நச்சினார்க்கினியர் :**

வட வேங்கடந் தென்குமரி ஆயிடை-வடக்கின்கண் வேங்கடமுந் தெற்கின்கட் குமரியுமாகிய அவ்விரண்டெல்லைக்குள்ளிருந்து, தமிழ் கூறும் நல் உலகத்து, வழக்குஞ் செய்யுளும் ஆ இரு முதலின்-தமிழைச் சொல்லும் நல்லாசிரியரது வழக்குஞ் செய்யுளுமாகிய அவ்விரண்டையும் அடியாகக் கொள்ளுகையினாலே.

2. **நூற்பா : உஉ**

அம்மூ வாறும் வழங்கியல் மருங்கின்
மெய்ம்மயக் குடனிலை தெரியுங் காலை.

**இளம் :**

இது, தனிமெய் மயக்கத்திற்குப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

[1](இ - ள்.) அ மூ ஆறும்-மேற் சொல்லப்பட்ட (மூவாறு) பதினெட்டு மெய்யும், வழக்கு இயல் மருங்கின் - தம்மை மொழிப்படுத்தி வழங்கும் இயல்பு உளதாமிடத்து, மெய் மயக்கு - மெய்ம்மயக்கம் என்றும், உடனிலை-உடனிலை மயக்கம் என்றும் இருவகைய, தெரியும் காலை-(அவை மயங்கு முறைமை) ஆராயும் காலத்து.

இது தனிமெய் பிற மெய்யோடுந் தன் மெய்யோடும் மயங்கும் மயக்கமும் உயிர்மெய் உயிர்மெய்யோடுந் தனிமெய்யோடும் மயங்கும் மயக்கமும் கூறுகின்றது.

(இ - ள்.) அம்மூவாறும் - அங்ஙனம் மூன்று கூறாகப் பகுத்த பதினெட்டு மெய்யும், வழங்கியல் மருங்கின் - வழக்கிடத்துஞ் செய்யுளிடத்தும் எழுத்துக்களைக் கூட்டி மொழிப்படுத்து வழங்குதல் உள்ளதாமிடத்து, மெய் மயங்கும் நிலை - தனிமெய் தன்முன்னர் நின்ற பிற மெய்யோடுந் தன்மெய்யோடும் மயங்கும் நிலையும், உடன் மயங்கும் நிலை- அப்பதினெட்டும் உயிருடனே நின்று தன்முன்னர் நின்ற உயிர் மெய்யோடுந் தனிமெய்யோடும் மயங்கும் நிலையுமென இரண்டாம், தெரியுங்காலை - அவை மயங்கும் மொழியாந் தன்மை ஆராயுங் காலத்து எ - று.

3. உஎ

ஞநமவ வென்னும் புள்ளி முன்னர்
யஃகா னிற்றன் மெய்பெற் றன்றே.

இளம் :

இது, மெய்மயக்கம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஞநமவ என்னும் புள்ளி முன்னர் - ஞநமவ என்று சொல்லப்படுகின்ற புள்ளிகளின் முன்னர், யஃகான் நிற்றல் மெய்பெற்றன்று-யகரம் மயங்கி நிற்றல் பொருண்மை பெற்றது, ஏகாரம் ஈற்றசை.

(எ - டு) உரிஞ்யாது, பொருந்யாது, திரும்யாது, தெவ்யாது என வரும்.

நச் :

இங்ஙனம் ஆசிரியர் சூத்திரஞ் செய்தலின் அக்காலத்து ஒரு மொழியாக வழங்கிய சொற்கள் உளவென்பது பெற்றாம். அவை இக்காலத்து இறந்தன.

இனி உரையாசிரியர் உரிஞ்யாது பொருந்யாது திரும்யாது தெவ்யாது என இருமொழிக்கண் வருவன உதாரணமாகக் காட்டினரா லெனின், ஆசிரியர் ஒரு மொழியாமாறு ஈண்டுக் கூறி, இருமொழி புணர்த்தற்குப் புணரியலென்று வேறோர் இயலுங்கூறி, அதன்கண் 'மெய்யிறு சொன்முன் மெய் வரு வழியும்' என்றுங் கூறினர். கூறிய வழிப் பின்னும் 'உகரமொடு புணரும் புள்ளியிறுதி' என்றும் பிறண்டும் ஈறுகடோறும் எடுத்தோதிப் புணர்ப்பர். ஆதலின் ஈண்டு இருமொழிப் புணர்ச்சி காட்டிற் கூறியது கூறலென்னுங் குற்றமாம். அதனால் அவை காட்டுதல் பொருந்தாமை உணர்க.

4. உச

குற்றிய லிகர நிற்றல் வேண்டும்
யாவென் சினைமிசை யுரையசைக் கிளவிக்
காவயின் வரூஉ மகர மூர்ந்தே.

(இ - ள்.) குற்றியலிகரம் - ஒரு மொழிக் குற்றியலிகரம், உரை யசைக் கிளவிக்கு - உரையசைச் சொல்லாகிய மியா என்பதற்கு, ஆவயின் வரூஉம்-(சினையாக) அச்சொல்லினிடத்து வருகின்ற, யாஎன் சினைமிசை - யாஎன் சினைமிசை, மகரம் ஊர்ந்து நிற்றல் வேண்டும் - மகர ஒற்றினை ஊர்ந்து நிற்றலைவேண்டும் (ஆசிரியன்.)

எ – டு: கேண்மியா எனவரும். மியாஎன்னும் சொல் இடம். மகரம் பற்றுக்கோடு. யா என்னும் சினையும் மகரம்போலக் குறு குதற்கு ஒரு சார்பு.

நச் :

(இ – ள்.) உரையசைக் கிளவிக்கு வரூஉம் – தான் கூறும் பொரு ளைக் கோடற்கு ஒருவனை எதிர்முகமாக்கும் சொல்லிற்குப் பொருந்த வரும், ஆவயின் - அம் மியாவென்னும் இடைச்சொல்லைச் சொல்லு மிடத்து, யாவென் சினைமிசை மகரம் ஊர்ந்து - யாவென்னும் உறுப் பின் மேலதாய் முதலாய் நின்ற மகரவொற்றினை யேறி, குற்றிய லிகரம் நிற்றல்வேண்டும் - குற்றியலிகரம் நிற்றலை விரும்பும் ஆசிரியன்; எ - று.

எ - டு: கேண்மியா சென்மியா என வரும். கேளென்றது உரை யசைக்கிளவி; அதனைச் சார்ந்து தனக்கு இயல்பின்றி நின்றது மியா வென்னும் இடைச்சொல். அவ்விடைச்சொல் முதலும் அதனிற் பிரியும் யா அதற்கு உறுப்புமாமென்று கருதி யாவென்சினை என்றார். மியா இடம்; மகரம் பற்றுக்கோடு. யாவும் இகரம் அரை மாத்திரை யாதற்குச் சார்பு.

5. சுO.

உருவினும் இசையினும் அருகித் தோன்று
மொழிக்குறிப் பெல்லாம் எழுத்தின் இயலா
ஆய்தம் அஃகாக் காலை யான.

இளம் :

(இ – ள்.) உருவினும் – ஒரு பொருளினது உருவத்தின் கண்ணும், இசையினும் – ஓசையின் கண்ணும், அருகித் தோன்றும் - சிறுபான்மை யாய்த் தோன்றும், குறிப்பு மொழி யெல்லாம் – குறிப்பு மொழிகளெல் லாம், எழுத்தின் இயலா – ஆய்த எழுத்தானிட்டு எழுதப்பட்டு நடவா, (அஃது எக்காலத்துமோ வெனின், அன்று.) ஆய்தம் அஃகா காலையான – அவ் வாய்தம் தன் அரைமாத்திரை அளபாய்ச் சுருங்கி நில்லாது (அவ் வுருவும் இசையது மிகுதியும் உணர்த்துதற்கு) நீண்ட காலத்து அந் நீட்சிக்கு.

எ - டு: 'கஃறென்றது' என்பது உருவு 'சுஃறென்றது' என்பது இசை.

நச் :

(இ – ள்.) உருவினும் இசையினும் அருகித் தோன்றும் குறிப்பு மொழியும் – நிறத்தின்கண்ணும் ஓசையின்கண்ணும் சிறுபான்மை ஆய்தந் தோன்றும் பொருள் குறித்தலையுடைய சொல்லும், எல்லா மொழியும் – அவை யொழிந்த எல்லா மொழிகளும், எழுத்தினியலா – ஒற்றெழுத்துக்கள் போல அரை மாத்திரையின் கண்ணும் சிறு பான்மை மிக்கும் நடந்து, ஆய்தம் அஃகாக் காலையான – ஆய்தஞ் சுருங்காத இடத்தான சொற்களாம் எ – று.

எனவே:....................பெற்றும்.

எழுத்தினென்ற....................வினையெச்சம்.

இவ்வாறன்றி இக்குறிப்புச் சொற்கள் ஆய்தம் இரண்டிட்டு எழுதப்படாவென்று பொருள்கூறிற் செய்யுளியலோடு மாறுபட்டு மாறு கொளக் கூறலென்னுங் குற்றந் தங்குமென்று உணர்க.

6. சரு

**ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி**
**இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட**
**மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே.**

**இளம் :**

எ - டு : ஆ – ஓரெழுத் தொருமொழி
மணி – ஈரெழுத் ,,
வரகு, கொற்றன் – மூவெழுத் ,,

**நச் :**

எ - டு : ஆ, கா, நா—ஓரெழுத் தொருமொழி
மணி, வரகு, கொற்றன் - ஈரெழுத் தொருமொழி
குரவு, அரவு - மூவெழுத் ,,
கணவிரி – நாலெழுத் ,,
அகத்தியனார் - ஐந்தெழுத் ,,
திருச்சிற்றம்பலம் - ஆறெழுத் ,,
பெரும்பற்றப்புலியூர் - ஏழெழுத் ,,

குறிப்பு : நச்சினார்க்கினியர் ஒற்றையும் குற்றுகரத்தையும் எண்ணவில்லை.

7. சஎ

**தம்மியல் கிளப்பி னெல்லா வெழுத்து**
**மெய்ந்நிலை மயக்க மான மில்லை.**

**இளம் :**

இது, மெய்ம் மயக்கத்திற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ – ள்.) எல்லா எழுத்தும் தம் இயல் கிளப்பின் - எல்லா மெய் யெழுத்தும் மொழியிடை யின்றித் தம் வடிவின் இயல்பைச் சொல்லு மிடத்து மெய்ம்மயக்க நிலை மானம் இல்லை – மெய்ம் மயக்க நிலையின் மயங்கி வருதல் குற்றம் இல்லை.

எ – டு : ' "வல்லெழுத் தியையின் டகார மாகும்" என வரும்.

இதனை அம்மெய்ம்மயக்கத்து வைக்க வெனின், இது வழுவமைதி நோக்கி மொழிமரபின்கண்ணதாயிற்று.

**நச் :**

இது முன்னர் மெய்க்கண் உயிர் நின்றவாறு கூறி அவ்வுயிர் மெய்க் கண் ஏறி உயிர்மெய்யாய் நின்றகாலத்து அம்மெய்யாற் பெயர் பெறுமாறு கூறுகின்றது.

(இ - ள்.) எல்லா எழுத்தும் - பன்னீருயிரும், மெய்ந்நிலை தம் இயல் மயக்கங் கிளப்பின் - மெய்யின் தன்மையிலே தம்முடைய தன்மை மயங்கிற்றாகப் பெயர் கூறின், மானமில்லை - குற்றமில்லை எ - று.

மெய்யின் தன்மையாவது.........கூறினார்.

இஃதன்றிப் பதினெட்டு மெய்யின் தன்மை கூறுமிடத்து மெய்ம் மயக்கம் கூறிய வகையானன்றி வேண்டியவாறு மயங்குமென்று கூறி, 'அவற்றுள் லளஃகான் முன்னர்' என்பதனைக் காட்டில் அஃது இரு மொழிக் கண்ணதென மறுக்க.

**8. சஅ**

> **யரழ வென்னு மூன்றுமுன் னொற்றக்**
> **கசதப ஙஞநம வீரொற் றாகும்.**

(இ – ள்,) யரழ என்னும் மூன்று – யரழ என்று சொல்லப்படுகின்ற மூன்றனுள் ஒன்று, முன் ஒற்ற - (குறிற்கீழும் நெடிற்கீழும்) முன்னே ஒற்றாய் நிற்ப (அவற்றின் பின்னே), க ச த ப ங ஞ ந ம ஈர் ஒற்றாகும் – க ச த பக்களிலொன்றாதல் ங ஞ ந மக்களிலொன்றாதல் ஒற்றாய் வர அவை ஈரொற்றுடனிலையாம்.

எ – டு: வேய்க்குறை, வேய்ங்குறை, வேர்க்குறை, வேர்ங்குறை, வீழ்க்குறை, வீழ்ங்குறை, சிறை, தலை, புறம் என ஒட்டுக.

இவ்விதி மேல் ஈற்றகத்து உணர்ந்து கொள்ளப் படுமாலெனின், இது 'ஈர்க்கு' 'பீர்க்கு' என ஒருமொழியுள் வருதலானும், இரண்டு மொழிக்கண் வருதல் விகாரமாதலானும் ஈண்டுக் கூறப்பட்டது. அஃதேல், இதனை நூன் மரபினகத்து மெய்ம்மயக்கத்துக்கண் கூறுக வெனின், ஆண்டு வேற்றுமை நயம் கொண்டதாகலின் மூவொற்று உடனிலையாதல் நோக்கி ஒற்றுமை நயம் பற்றி ஈண்டுக் கூறப் பட்டது.

**நச்:**

எ – டு: வேய்க்க வாய்ச்சி பாய்த்தல் வாய்ப்பு எனவும், பீர்க்கு நேர்ச்சி வார்த்தல் ஆர்ப்பு எனவும், வாழ்க்கை தாழ்ச்சி தாழ்த்தல் தாழ்ப்பு எனவும், காய்ங்கனி தேய்ஞ்சது காய்ந்தனம் காய்ம்புறம் எனவும், நேர்ங்கல் நேர்ஞ்சிலை நேர்ந்தலை நேர்ம்புறம் எனவும் வரும். ழகாரத்திற்கு வாழ்ந்தனம் என இக்காலத்து நகரவொற்று வரும். ஏனைய மூன்றும் இக்காலத்து வழங்குமெனின் உணர்க.

இனித் தாழ்ங்குலை தாழ்ஞ்சினை தாழ்ந்திரள் வீழ்ம்படை என அக்காலத்து வழங்குமென்று இத்தொகைச் சொற்கள் காட்டலும் ஒன்று. உரையாசிரியரும் இருமொழிக்கட் காட்டியவூற்றிற்கு அவ் வீறுகடோறும் கூறுகின்ற சூத்திரங்கள் பின்னர் வேண்டாமை உணர்க். இஃது ஈரொற்றுடனிலை யாதலின் ஈண்டு வைத்தார்.

**9. ருo**

> **குறுமையு நெடுமையு மளவிற் கோடலிற்**
> **றொடர்மொழி யெல்லா நெட்டெழுத் தியல.**

**இளம்:**

(இ - ள்.) குறுமையும் நெடுமையும் அளவின் கோடலின் – உயிரெழுத்திற்குக் குறுமையும் நெடுமையும் அளவிற் கொள்ளப்படுதலில், தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத்து இயல—தொடர்மொழிக் கீழ்

நின்ற ரகார ழகாரங்களெல்லாம் நெடிற்கீழ் நின்ற ரகார ழகாரங் களின் இயல்பையுடைய (என்று கொள்ளப்படும்).

எ – டு : அகர், புகர், அகழ், புகழ், எனக் கொள்க.

'புலவர்' என்றாற்போல இரண்டு மாத்திரையை இறந்ததன்பின் னும் வருமாலெனின், அவையும் "தன்னின முடித்தல்" என்பதனால் 'நெடிற்கீழ் ஒற்று' எனப்படும். எல்லாம் என்றதனான், ரகார ழகாரங் களே யன்றிப், பிற ஒற்றுக்களும் 'நெடிற்கீழ் ஒற்று' எனப்படும். இதனானே, விரல் தீது என்புழி லகரம் 'நெடிற்கீழ் ஒற்று' என்று கெடுக்கப்படும்.

நச் :

(இ – ள்.) குறுமையும் நெடுமையும் – எழுத்துக்களது குறிய தன்மையும் நெடிய தன்மையும், அளவிற் கோடலின் – மாத்திரை யென்னும் உறுப்பினைச் செவி கருவியாக அளக்கின்ற அளவு தொழி லாலே செய்யுட்குக் கொள்ளப்படுதலின், தொடர்மொழி யெல்லாம் – அம் மாத்திரை தம்முள் தொடர்ந்து நிற்கின்ற சொற்களெல்லாம், நெட்டெழுத்தியல – நெட்டெழுத்து மாத்திரை மிக்கு நடக்கும்படி யாகத் தொடர்ந்த சொல்லாம் எ – று.

எ – டு : 'வருவர்கொல் வயங்கிழா அய்' எனவும் 'கடியவே கனங் குழாஅய்' எனவுங் குற்றெழுத்துக்களெல்லாம் நெட்டெழுத்தினை மாத்திரை மிகுத்தற்குக் கூடியவாறு உணர்க. ஏனைச் செய்யுட்களையும் இவ்வாறே காண்க. எனவே, மாத்திரை அளக்குங்கால் நெட் டெழுத்தே மாத்திரைபெற்று மிக்கு நிற்கும் என்றமையான், எதிரது போற்றலென்னும் உத்திபற்றிச் செய்யுளியலை நோக்கிக் கூறிய தாயிற்று. ஈண்டுக் கூறினார், நெட்டெழுத்து இரண்டு மாத்திரையின் இகந்து வருமென்பதறிவித்தற்கு.

......இனி உரையாசியர் புகர் புகழ் எனக் குறிலிணைக்கீழ் ரகார ழகாரங்கள் வந்த தொடர்மொழிக ளெல்லாம் தார் தாழ் என்றாற் போல ஓசையொத்து நெட்டெழுத்தின் தன்மையவாம் என்றாரா லெனின், புகர், புகழ் என்பனவற்றை நெட்டெழுத்தென்றே எவ் விடத்தும் ஆளாமையானும் நெட்டெழுத்தாகக் கூறிய இலக்கணத் தால் ஒரு பயன் கொள்ளாமையானுஞ் செய்யுளியலுள் இவற்றைக் குறிலிணை ஒற்றடுத்த நிரையசையாகவும் தார் தாழ் என்பனவற்றை நெட்டெழுத்து ஒற்றடுத்த நேரசையாகவும் கோடலானும் அது பொருளன்மை உணர்க.

10. ௫௩

**மொழிப்படுத் திசைப்பினுந் தெரிந்துவே றிசைப்பினும்**
**எழுத்தியல் திரியா வென்மனார் புலவர்.**

இளம் :

இது, எழுத்துக்கட்கு மொழிக்கண் மாத்திரை காரணமாகப் பிறப்பதோர் ஐயம் தீர்த்தல் நுதலிற்று.

(இ – ள்.) மொழிப்படுத்து இசைப்பினும்–மொழிக்கண் படுத்துச் சொல்லினும், தெரிந்து வேறு இசைப்பினும்-தெரிந்துகொண்டு வேறே

சொல்லினும், எழுத்து இயல் திரியா என்மனார் புலவர் – உயிரும் மெய்யு மாகிய எழுத்துக்கள் (பெருக்கம் சுருக்கம் உடையன போன்று இசைப் பினும்) தத்தம் மாத்திரை இயல்பில் திரியா என்று சொல்லுவர் புலவர்.

ஏ – டு: அஃகல், அ எனவும்; ஆல் ஆ எனவும்; கடல், க எனவும், கால், கா எனவும் கண்டுகொள்க.

வேறு என்றதனான் எடுத்தல் படுத்தல் முதலிய ஓசை வேற்று மைக்கண்ணும் எழுத்தியல் திரியாதென்பது கொள்க.

நச் :

(இ – ள்.) தெரிந்து – ஒற்றுங் குற்றுகரமும் பொருள் தரு நிலை மையை ஆராய்ந்து, மொழிப்படுத்து இசைப்பினும்–சொல்லாகச் சேர்த்துச் சொல்லினும், வேறு இசைப்பினும்-செய்யுளியலுள் ஒற்றுங் குற்றுகரமும் பொருள் தருமேனும் மாத்திரை குறைந்து நிற்கும் நிலைமையை நோக்கி எழுத்தெண்ணப்படா வென்று ஆண்டைக்கு வேறாகக் கூறினும், எழுத்தியல் திரியா என்மனார் புலவர் - அவ்விரண் டிடத்தும் அரை மாத்திரை பெற்று நிற்கும் குற்றுகரமும் முற்கூறிய எழுத்தாந் தன்மை திரியா வென்று கூறுவர் புலவர் எ – று.

ஏ – டு: அல் இல் உண் எண் ஒல் எனவும், கல் வில் முள் செல் எனவும், ஆல் ஈர் ஊர் ஏர் ஓர் எனவும், கால் சீர் சூல் தேன் கோன் எனவும், உயிரும் உயிர்மெய்யுமாகிய குற்றெழுத்தையும் நெட்டெழுத் தையும் ஒற்றெழுத்துக்கள் அடுத்து நின்று பொருள் தந்தவாறு காண்க. கடம் கடாம் உடையான் திருவாரூர் அகத்தியனார் என ஈரெழுத்தையும் மூவெழுத்தையும் நாலெழுத்தையும் ஐயெழுத்தையும் இறுதியிலும் இடையிலும் ஒற்றடுத்து நின்று பொருள் தந்தவாறு காண்க. எஃகு தெங்கு கொக்கு குரங்கு என்பனவும், எழுத்தெண்ண வும் அலகிடவும் பெறாத குற்றுகரம் அடுத்து நின்று பொருள் தந்த வாறு காண்க.

இனி இச் சூத்திரத்திற்கு எழுத்துக்களைச் சொல்லாக்கிக் கூறினும் பிறிதாகக் கூறினும் மாத்திரை திரியாதென்று பொருள் கூறி, அகரம் என்புழியும் அ என்புழியும் ஆலம் என்புழியும் ஆ என்புழியும் ககரம் என்புழியும் க என்புழியும் காலம் என்புழியும் கா என்புழியும் ஓசை ஒத்து நிற்குமென்றால், அது முன்னர்க் கூறிய இலக்கணங்களாற் பெறப்படுதலிற் பயனில் கூற்றாமென்க

**11.** அரு.

.......................................................

எல்லா வெழுத்துஞ் சொல்லுங் காலைப்

.......................................................

**இளம் :**

(இ - ள்.) எல்லா எழுத்தும் நெறிப்பட நாடி சொல்லுங்காலை - தமிழெழுத்துக்களெல்லாம் ஒருவன் முறைப்பட ஆராய்ந்து தம்மைச் சொல்லுங்காலத்து.

**நச் :**

(இ - ள்.) எல்லா எழுத்தும் பிறப்பின் ஆக்கம் சொல்லுங் காலை - தமிழெழுத்து எல்லாவற்றிற்கும் ஆசிரியன் கூறிய பிறப்பி னது தோற்றரவை யாங் கூறுமிடத்து.

**12. கககூ.**

**மருவின் றொகுதி மயங்கியன் மொழியும்**
**உரியவை யுளவே புணர்நிலைச் சுட்டே.**

**ககஉ. இளம் :**

(இ - ள்.) மருவின் தொகுதி மயங்கு இயல் மொழியும் - (இலக்கண வழக்கேயன்றி) மரூஉத்திரளாகிய தலை தடுமாறாக மயங்கின இயல்பையுடைய இலக்கணத்தோடு பொருந்தின மரூஉ வழக்கும், உரியவை உள புணர்நிலைச் சுட்டு - உரியன உள புணரும் நிலைமைக்கண்.

**கககூ. நச் :**

(இ - ள்.) மருமொழியும் - இருவகையாகி மருவிய சொற்களும். இன்றொகுதி மயங்கியன் மொழியும் - செவிக்கினிதாகச் சொற்றிரளிடத்து நிறுத்த சொல்லுங் குறித்துவரு கிளவியுமாய் ஒட்டினாற் போல நின்று பொருளுணர்த்தாது பிரிந்து பின்னர்ச்சென்று ஒட்டிப் பொருளுணர்த்த மயங்குதல் இயன்ற சொற்களும், புணர்நிலைச் சுட்டு உரியவைஉள - புணரும் நிலைமைக்கருத்தின்கண் உரியன உள; (எ - று.)

**13. உகம.**

........................................................
**செய்ம்மன வென்னுந் தொழிலிறு சொல்லும்**
**ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்**
........................................................

**இளம் :**

'உரையிற் கோடல்' என்பதனால், வியங்கோள்முன் வைக்கற்பாலதனை முன்வையாது செய்ம்மன என்பதனை முன் வைத்ததனான், இவ்வியல்பு முடிபின்கண் செய்ம்மன என்பது சிறப்புடைத்தெனப் பெறப்பட்டது. அதனால் ஏவல் கண்ணாத வியங்கோளும் இவ்வியல்பு முடிபு உடைத்தெனக் கொள்க. அது, ''மன்னிய பெரும நீ'' என வரும்.

**நச் :**

ஏ - டு : ......................ஏவல் கண்ணிய என்பதனான் ஏவல் கண்ணாததும் உளதென்று கூறி 'மன்னிய பெரும நீ' என உதாரணங் காட்டுகவெனின், அது பொருந்தாது; கூறுகின்றான் அவன் நிலைபெற்றிருத்தல் வேண்டுமென்றே கருதிக் கூறுதலின் அதுவும் ஏவல் கண்ணிற்றேயாம்............

**14. உருரு.**

**ஆன்முன் வரூஉ மீகார பகரம்**
**தான்மிகத் தோன்றிக் குறுகலு முரித்தே.**

**இளம் :**

(இ - ள்.) ஆன்முன் வரும் ஈகார பகரம் - ஆன் என்னும் சொல் முன்னர் வருமொழியாய் வருகின்ற ஈகாரத்தொடு கூடிய பகரமாகிய மொழி, தான் மிகத்தோன்றி குறுகலும் உரித்து - அப்பகரமாகிய தான்

மிகத் தோன்றி அவ்வீகாரம் இகரமாகக் குறுகி முடிதலையும் உடைத்து.

'தோன்றி' என்றதனால், நிலைமொழிப் பேறாகிய னகரவொற்றின் கேடு கொள்க.

**நச் :**

(இ - ள்.) ஆன்முன் வரூஉம் ஈகார பகரம்—ஆனென்னுஞ் சொன் முன்னர் வருமொழியாய் வருகின்ற ஈகாரத்தோடு கூடிய பகரமாகிய மொழி, தான் மிக தோன்றி - அப் பகரமாகிய தான் மிக்கு நிற்ப நிலைமொழி னகரத்திற்குக் கேடு தோன்றி, குறுகலும் உரித்து - ஈகாரம் இகரமாகக் குறுகி நிற்றலும் உரித்து; எ - று.

15. நடகசு.

**இலமென் கிளவிக்குப் படுவரு காலை**
**நிலையலு முரித்தே செய்யு ளான.**

நடகஎ. இளம் :

(இ - ள்.) இலம் என் கிளவிக்கு படு வரு காலை - இலம் என்னும் சொல்லிற்குப் படு என்னுஞ் சொல் வருமொழியாய் வருங்காலத்து, நிலையலும் உரித்து செய்யுளான - முன் 'மகரவிறுதி' என்பதனாற் கெட்ட ஈறு கெடாது நின்று முடிதலும் உரித்துச் செய்யுட்கண்.

எ - டு : "இலம்படு புலவ ரேற்றகை நிறைய" என வரும்.

உரிச்சொல்லாகலான் உருபு விரியாதெனினும் இலத்தாற் பற்றப் படும் புலவரென்னும் பொருள் உணர நிற்றலின், வேற்றுமை முடிபா யிற்று. உம்மை மகரவீறு என்னும் சாதி யொருமைபற்றி வந்த எதிர் மறை.

நடகசு. நச் :

இதனை இலத்தாற் பற்றப்பட்ட புலவரென வேற்றுமை யென்றா ரால் உரையாசிரியரெனின், பற்றப்பட்ட புலவரென்பது பெயரெச்ச மாதலிற் பற்றவென்னுந் தொழில் தோற்றுவிக்கின்ற முதனிலைச் சொல்லைச் சூத்திரத்து ஆசிரியர் எடுத்தோதிற்றிலராதலானும் படு வென்பது தானும் புலவரெனும் பெயரோடு முடியுங்கால் இரண்டு காலமுங் காட்டும் ஈறுகள் தொக்க முதனிலைச் சொல்லாய் நிற்றலின், அதனை எடுத்தோதினராதலானும் ஆசிரியர்க்கு அங்ஙனங் கூறுதல் கருத்தன்மை உணர்க.

அன்றியும் பற்றப்பட்ட என்புழி இரண்டு முதனிலை கூடி ஒன்றாய் நின்று பற்றுதலைச் செய்யப்பட்ட எனப் பொருள் தாராமையானும் அல்வழியதிகாரமாதலானும் அது பொருளன்மை உணர்க.

16. சOசு இளம் :

**அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்**
**எல்லா விறுதியு முகர நிறையும்.**

இஃது எய்தியது ஒருமருங்கு மறுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) அல்லது கிளப்பினும் - அல்வழியைச் சொல்லும் இடத்தும், வேற்றுமைக்கண்ணும் - வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக் கண்ணும், எல்லா இறுதி உகரமும் நிறையும் - ஆறு ஈற்றுக் குற்றிய லுகரமும் நிறைந்தே நிற்கும்.

எ - டு : நாகு கடிது, நாகு கடுமை; வரகு கடிது, வரகு கடுமை என வரும்.

௪௦௫. நச் :

**அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்**
**எல்லா இறுதியும் உகர நிலையும்.**

இஃது இடைப்படிற் குறுகு மிடனுமா றுண்டே என்றதனாற் புணர்மொழிககண் அரைமாத்திரையினுங் குறுகுமெனை எய்திபதனை விலக்கி, 'அவ்விய னிலையு மேனை மூன்றே' என்ற விதியே பெறுமென் கின்றது.

(இ - ள்.) அல்லது கிளப்பினும் - அல்வழியைச் சொல்லுமிடத்தும், வேற்றுமைக்கண்ணும் – வேற்றுமைப் புணர்ச்சிக்கண்ணும், எல்லா இறுதியும் உகரம் நிலையும் – ஆறு ஈற்றின்கண்ணும் உகரம் தன் அரை மாத்திரையைப் பெற்று நிற்கும் எ – று.

17. ௪௦௬.

**வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழித்**
**தொல்லை யியற்கை நிலையலு முரித்தே.**

௪௧௦. இளம்:

இஃது எய்தியது ஒருமருங்கு மறுக்கின்றது.

(இ - ள்.) வல்லொற்றுத் தொடர்மொழி – (அவ்வீற்றுள்ளும்) வல்லொற்றுத் தொடர்மொழி, வல்லெழுத்து வருவழி–வல்லெழுத்து முதல்மொழி (வருமொழியாய்) வரும் இடத்து, தொல்லை இயற்கை நிலையலும் உரித்து - முன் (கூறிய) இயற்கை நிற்றலும் உரித்து.

எ – டு : கொக்குக் கடிது, கொக்குக் கடுமை என வரும்.

௪௦௬. நச் :

இது முன்னின்ற சூத்திரத்தான் அரை மாத்திரை பெறும் என்றதனை விலக்கி 'இடைப்படிற் குறுகு மிடனும்' என்றதனுன் அரை மாத்திரையினும் குறுகுமென்று ஆண்டு விதித்தது ஈண்டு வல்லொற்றுத் தொடர்மொழிக்கண்ணே வருமென்கின்றது.

(இ - ள்.) வல்லொற்றுத் தொடர்மொழி–வல்லொற்றுத் தொடர் மொழிக் குற்றுகரம், வல்லெழுத்து வருவழி – வல்லெழுத்து முதன் மொழி வருமொழியாய் வருமிடத்து, தொல்லை இயற்கை நிலையலும் உரித்து – 'இடைப்படிற் குறுகும்' என்பதனாற் கூறிய அரை மாத் திரையினும் குறுகி நிற்கும் என்ற இயல்பிலே நிற்றலும் உரித்துஎ–று.

எ–டு : கொக்குக் கடிது கொக்குக் கடுமை என அரை மாத்திரை யிற் குறைந்தவாறு குரங்கு கடிதென்பது முதலியவற்றேடுபடுத்துச் செவி கருவியாக உணர்க.

முன்னின்ற சூத்திரத்து உகர நிறையுமென்று பாடம் ஓதி அதற்கு உகரம் அரை மாத்திரையிற் சிறிது மிக்கு நிற்குமென்று பொருள் கூறி இச் சூத்திரத்திற்குப் பழைய அரை மாத்திரை பெற்று நிற்குமென்று கூறுவாரும் உளர்.

